யேவவைஷ்ணவத்வேஷிணாம்ஜப|| யாப்ரீதிர்மயி ஸம்வ்ருத்தாமத்பக்தே ஷுஸதாஸ்துதே । அவமாநக்ரியாதேஷாம் ஸம்ஹரத்யகிலம்ஜகத்|| மத்பக்தம்ஶூத்ரஸாமாந்யாதவமந்யந்தியேநரா: । நரகேஷ்வபிதிஷ்டந்திபத்மகோடிநராயமா:|| நமேபூஜ்யஶ்சதுர்வேதீபூஜயேத்பக்திவர்ஜித:।மயா பூஜ்யஸ்ஸதாவாஸௌமத்பக்தஶ்ஶ்வபசோபிஸ:||வைநதேயஸ்யவ்ருத்தாந்தம்ஸ்மாரம்ஸ்மாரமஹர்நிஶம் । ஸீதஸீதஶ்ச வர்த்தேத மத்பக்தேஷ்வ பவாரத:|| க்ராமகோடிஶ்சவிப்ராணாம்தடாகாஶ்ஶதகோடய:।பத்மகோடிஸஹஸ்ரம்யந்நிர்மிதம் விஷ்ணுமந்திரம்|| ஏகம்ஹாஸவதம்ஶ்யாப்யஸமதுல்யம்புயிஷ்டிர ) என்றும் இத்யாதிவசநங்களை இளையாழ்வாரருளிச்செய்யக்கேட்டு ஸீதஸீதனாய்நிருத்தரனாயிருந்து, பின்பு யாதவனும் இளையாழ்வாரைப்பார்த்து, “ஊர்த்த்வபுண்ட்ரவிதிக்கும் ப்ரமாணம் சொல்லும்” என்ன ; அத்தைக்கேட்டு இளையாழ்வாரும் ஊர்த்த்வ புண்ட்ரவிதிக்கு ப்ரமாணமருளிச்செய்கிறார் ;

ஊர்த்த்வபுண்ட்ரத்துக்கு ப்ரமாணங்கள்.

கடவல்யாம் ஊர்த்வபுண்ட்ரவிதி:, ( யஜ்ஞோர்த்வபுண்ட்ராங்கஜதவக்ரயாரீ விஷ்ணும்பரம்த்யாயதியோமஹாத்மா। ஸ்வரேணமந்த்ரேண ஸதாஹ்ருதிஸ்தித்ம் பராத்பரம்யந்மஹதோமஹாந்தம் ) என்றும், மஹோபநிஷதி, ( யஜ்ஞோர்த்வபுண்ட்ரம்பரமேஶிதாரம் நாராயணம் ஸாங்க்யயோகாதிகம்யம் । ஜ்ஞாத்வாவிமுச்யேதநரஸ்ஸமஸ்தைஸ் ஸம்ஸாரபாஶைரிஹசைவவிஷ்ணும் ) என்றும், அதர்வணே, ( ஹரேர்பாதாக்ருதிமாத்மநோஹிதாய, மத்யேச்சித்ரம் ஊர்த்வபுண்ட்ரம் யோதாரயதி, ஸபரஸ்யப்ரியோபவதி, ஸபுண்யவாந்பவதி, ஸமுக்திமாந்பவதி) என்றும், ( ஊர்த்வபுண்ட்ரஸ்யமாஹாத்ம்யம் வக்ஷ்யாமி ஶ்ருணுபார்கவ । யாரணாதேவமுச்யேதபவபந்தாத்விமுச்யதே:|| ஏகாந்திநோமஹாபாகாஸ்ஸர்வபூதஹிதேரதா: । ஸாந்தராளம்ப்ரகுர்வீத புண்ட்ரம் ஹரிபதாக்ருதிம்|| ஊர்த்வபுண்ட்ரஸ்யமத்யேது விஶாலேஸுமநோஹரே । ஸாந்தராளேஸமாஸீநோஹரிஸ்தத்ரஶ்ரியாஸஹ || தஸ்மாச்சித்ராந்விதம் புண்ட்ரம் ஸஹரித்ரம் ஶுபாவஹம் । யாரயேத்ப்ரஹ்மணோநித்யம் ஹரிஸாலோக்யஸித்தயே|| அச்சித்ரமூர்த்வபுண்ட்ரம் துயஃகரோதிஸ்விஜாதய: । தேஷாம்லலாடேஸததம்ஶுநஃபாதோநஸம் ஶய:|| புண்ட்ராணாம்தாரணார்த்தாய க்ருஹ்ணீயாத்வேதம்ருத்திகாம்। ஶ்ரீரங்கேவ்ருஷபாத்ரௌவஶ்ரீகூர்மேபாதவாசலே||ப்ரயாகேநாரஸிம்ஹாத்ரௌவாராஹேதுலஸீவநே । த்ருஹீத்வாம்ருத்திகாம்பக்த்யாவிஷ்ணுபாதஜலைஸ்ஸஹ||தஸ்மிந்நேவஸ்யலேஶ்ராஹ்யாஶுப்ராரம்யாஸுநிர்மலா । ஸர்வைஶ்சைவதமிஜாயார்யமூர்த்வபுண்ட்ரம்பயோவியி||ஜிஹ்வாநிஸாந்தராளாநிஹ்யபங்கேஷுத்வாதஶஸ்வபி । உபவீதம்ஶிகாவந்ய

மூர்த்வபுண்ட்ரம் விநாக்நிதம் ॥ அபவித்ரம் பரம் கர்ம விப்ரஸ்ய விபலம் பவேத் । ஸ்வாத்யாயே ஹோமஜபே நைவ ஹோமமங்களகர்மணி। ஊர்த்வபுண்ட்ரமரோஹ்யாத் ரக்ஷஸாம்வாபநுத்தயே॥ லலாடே கேஶவஸ்யாரநேயாரயேத்ஷ்வேதம்நித்திகாம் । விஷ்ணுபக்திப்ரதாம் திவ்யாம் நித்யைஶ்வர்யபலப்ரதாம்॥ ஜயாதிஹஸ்மயோர்மத்யே ஊர்த்வபுண்ட்ராங்கிதே முவே । ஸத்யஶ்வண்டாலகோஹ்த்வா ரௌரவம் நரகம் வ்ரஜேத்) என்றும் இத்யாதிவசநங்களையருளிச்செய்யக்கேட்டு யாதவனும் லஜ்ஜிதனாய் நிருத்தரனாய்த் தலையிறக்கிட்டுப்போனான்.

பின்பு சிலநாள்கழிந்தவாறே யாதவப்ரகாசனும் மாதாவுந்திரளோடே பெருமாளைஸேவிப்பதாகவந்து கோவிலிலேபுகுந்து பெருமாளைஸேவித்து ப்ரதக்ஷிணமாகவாராநிற்க, அங்கே கச்சிக்குவாய்த்தான்திருமண்டபத்திலே ராமாநுஜன், (உபவீதிநமூர்த்வபுண்ட்ரவனம்) இத்யாதிப்படியேயெழுந்தருளியிருக்க; யாதவப்ரகாசனும் அங்கே செல்ல, ராமாநுஜனும் யாதவனைகடாக்ஷித்து ஸஸ்மிதராய் "யாதவரேவாரும்" என்ன; யாதவனும்ஸமீபத்திலேவந்து, "பெருமாளுடைய கல்யாணகுணங்களையருளிச்செய்யீர்" என்ன; ராமாநுஜனும் ஆழ்வானை நியமித்தருள; ஆழ்வானும், (யோஷ்வேகஸ்ய குணஸ்ய விப்ருஷபிவைலோகோத்தரம் ஸ்வாஶ்ரயம் தர்யாத்தாத்ருஶைவ ஸைவரகணைர்நிஸ்ஸீமஸாமாந்விதை: । நித்யைர்திவ்யகுணைஸ்ததோயிகஶஸத்வைகாஸ்பதாத்மாஶ்ரயைரித்யம் ஸங்க்ரபாஹுமஸ்மிஶரணம் யாதோவநாத்ரீஶ்வரம்) என்கிறச்லோகத்தையருளிச்செய்ய; யாதவனும்கேட்டு, பெரியவித்வானாகையாலே சிரக்கம்பம்பண்ணிக்கொண்டு போனான்.

—❧❧—

## யாதவப்ரகாசன் உடையவரிடத்தில் திருவிலச்சினையும் ஆச்ரமஸ்வீகாரமும்பெற்றது.

பின்னையும் சிலநாள்கழிந்தவாறே யாதவப்ரகாசனுடையமாதாவுக்கு இத்தர்சநத்திலே ஊற்றம்பிறந்து, "இத்தர்சநத்திலேயாதவனும்புகுந்தானாகிலோ" என்றுநினைத்துக்கொண்டு வையமாளிகையேறாநிற்க, அவ்வளவிலே, "நல்லது நல்லது" என்றுகிம்வதந்தியுண்டாக, அவளும் ஸ்வக்ருஹமேபோய், புத்ரனையாதவனுக்கு அச்சேதியையறிவிக்க; யாதவனும் நான்சிகாயஜ்ஞோபவீதத்யாகம்பண்ணினதுக்கு ப்ராயஶ்சித்தமாகபூப்ரதக்ஷிணம்பண்ணவேணும், அதுக்குநான்வ்ருத்தனாகையாலே அதுகூடாது" என்ன; அவளும், "நம்மிராமாநுசனை ஒருப்ரதக்ஷிணம் பண்ணிஸங்கஹியாய்" என்றுயாதவனுக்குச்சொல்ல; அவனும் அத்தைவிச்வஸித்துக்கலேசித்துக்கிடக்க; அன்றுராத்ரி யாதவப்ரகாசனுடைய ஸ்வப்நத்திலேபெருமாளெழுந்தருளி, "நம்மிராமாநுசனைப்ரதக்ஷிணம்

பண்ணி ஸந்ந்யஸியாய்" என்றருளிச்செய்ய ; யாதவனும் அத்தை அவிச்வஸித்து. மற்றைநாள் விடிவோறே திருக்கச்சிநம்பிமடத்திலேவந்து ஸேவித்து நம்பியைப்பார்த்து, "நம்பி! நான் ஒருநினைவுநினைத்தேன், அத்தை நீர்பெருமாளுக்குவிண்ணப்பஞ்செய்து அவரருளிச்செய்த சேதியை, தேவரீர் அடியேனுக்கருளிச்செய்தருளவேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய ; பின்பு திருக்கச்சிநம்பியும், "அன்றுராத்ரி பெருமாளுக்குத் திருவாலவட்டம்ஸேவித்து ஏகாந்தமானவாறே பின்னையும் ஸேவித்துநிற்க ; பெருமாளும், "ஏன் ? நம்பி, ஒன்றுசொல்லுவாரைப்போலேயிருந்தீர்" என்று பெருமாள்திருவுள்ளமாயருள ; அப்போது, "யாதவப்ரகாசன், ஒருநினைவுநினைத்தேன், அவையெவை என்றுதேவரீரைக்கேட்டுவந்துசொல்லவேணுமென்று மிகவும் ஆதரவாய்நின்றான், அவற்றையருளிச்செய்யவேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய; பேரருளாளரும், நம்பீ ! அதுகேளீர், ' "அவனுடையமாதாவுக்கு நம்தர்சநத்திலே ஊற்றம்பிறந்துயாதவனைப்பார்த்து, 'நம்மிராமாநுசனைப்போலே த்ரிதண்டஸந்ந்யாஸம்பண்ணி ஸ்வதர்சநத்திலேயிருக்கவொண்ணாதோ' என்று நியமித்துச்சொன்னாள், நாமும அவனுக்கு ஸ்வப்நமுகேந சொன்னோம், அதிலும் அவனுக்கு விச்வாஸமில்லாமையாலே உம்மைக்கேட்கச்சொன்னான், அப்படியே நம்மிராமாநுசனை ஒருப்ரதக்ஷிணம்பண்ணி த்ரிதண்டஸந்யாஸம்பண்ணச்சொன்னோமென்றுசொல்லும்" என்றருளிச்செய்து, நம்பீ! போதுவைகிற்றுக்காண் என்றனுப்ப ; நம்பியும், மடமேயெழுந்தருளி திருக்கண்வளர்ந்து மற்றைநாள்விடிவோறே யாதவப்ரகாசனைக்கண்டு, "வாரீர்யாதவப்ரகாசரே ! பெருமாள்திருவுள்ளம்பற்றினவார்த்தையைக்கேளீரென்று, அருளிச்செய்தது இவைஉமக்குநினைவோ" என்ன; யாதவனும், "ஆம்" என்று திருக்கச்சிநம்பி ஸ்ரீபாதத்திலே தண்டன்ஸமர்ப்பித்து ; திருக்கச்சிநம்பி புருஷகாரமாக ராமாநுசன்திருவடிகளிலேமஹாவிச்வாஸம் பிறந்து மடமேபோய் ராமாநுசன்திருவடிகளிலே அடைவுகெட தண்டன்ஸமர்ப்பித்து. (புவியுமிருவிசும்பும்நின்னகத்த, நீயென்செவியின்வழி புகுந்தென்னுள்ளாய்) என்றும், (சிக்கெனச்சிறிதோரிடமும்புறப்படாத்தன்னுள்ளேயுலகுகள், ஒக்கவேவிழுங்கிப்புகுந்தான்)என்றும், (அஹமாவிர்பவிஷ்யாமி) என்றும் சொல்லுகிறபடியே - ராமாநுசன்திருவுள்ளத்திலே பெருமாள்ஸந்நிஹிதராயிருக்கையாலே ராமாநுசனை ஒருப்ரதக்ஷிணம்பண்ணி ஸவிநயராய்நிற்க ; கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் ராமாநுஜன்திருவடிகளிலே தெண்டன்ஸமர்ப்பித்து, (ப்ரத்வேஷாத்ஸம்ஸத்யாதய:) என்கிறபடியே தேவரீருக்குப்பண்ணின த்வேஷந்தானே இவருக்கு உஜ்ஜீவநஹேதுவாய்த்து, (அஸ்மாஹிஸ்துல்யோபவது) என்றுவிண்ணப்பஞ்செய்ய ; ராமாநுசனும், போரவுகந்தருளி, "இவர், சிகாயஜ்ஞோபவீதத்யாகம்பண்ணினதுக்குப்ராயச்சித்தமும்பண்ணுவித்து சௌளோபநயநாதிகளையும்பண்ணுவித்து,

த்ரிதண்டகாஷாயாதிகளையும்ப்ரஸாதித்து, ( ப்ரயாநமதாபஸம்ஸ்காரம் வைஷ்ணவைர்முநிஸிம்ஹிதம் । ஸர்வாஶ்ரமேஷுவஸதாம்ஸ்த்ரீணாஞ்ச்ஷ்விஜஸத்தம) என்றும் சொல்லியிருக்கையாலே திருவிலச்சினையும் ப்ரஸாதித்து, "கோவிந்தஜீயர்" என்று திருநாமத்தையும்சாத்தி மிகவும் க்ர்பைபண்ணியருளினார்.

கோவிந்தஜீயர் (யதிதர்மஸமுச்சயம்) என்கிற ப்ரபந்தமிட்டருளி திருநாடலங்கரித்தாரென்பது.

அநின்மற்றைநாள் ராமாநுசனும், கோவிந்தஜீயரைப்பார்த்து, கோவிந்தஜீயரே! சாஸ்த்ரங்களிலே இதரவசநவையர்த்த்யங்கள் வாராதபடி, யதிதர்மஸமுச்சயம் என்கிறப்ரபந்தத்தைப்பண்ணும்" என்ன; அவரும்நியமநப்படியே, ( விஶிகத்ஜஸாவிங்மம்ப்ரயோமோ முவ்யகர்மவ । அஹோராத்ரக்ரியாவாரோ விங்மயர்மோஷதிஸ்யதி:।। ப்ராயஶ்சித்தாநிஸம்ஸ்காரா: இத்யேகாஜஶபர்வக: ) என்றும் சொல்லுகிறபடியே ஸங்க்ரஹப்ரபந்தத்தைப்பண்ணி ராமாநுசன் ஸந்நிதியிலே வைக்க; ராமாநுசனும்ஆத்யந்தமாகத்திருக்கண்சாத்தியருளி ஸந்தோஷித்து மிகவும் க்ர்பைபண்ணியருளினார்; அவரும் ஆசார்யபரதந்த்ரராய் ஸேவித்துக்கொண்டிருந்து அசிரேணபரமபதத்தை ப்ராபித்தருளினார்.

நம்பெருமாள், பேரருளாளருக்கு அனுப்பியதிருமுகம் பயன்படாமற்போயிற்றென்பது.

அநந்தரம் இளையாழ்வாருடைய ஆச்ரமப்ராப்திமுதலான இச்சேதியை, கோயிலிலே ஆளவந்தார்ஸ்ரீபாதத்தில்முதலிகளெல்லாருங் கேட்டு போரப்ரீதராய், நம்பெருமாள் ஸந்நிதியிலேசென்று தெண்டன்ஸமர்ப்பித்து, "ராமாநுசனை தேவரீர்ஸந்நிதியிலே நித்யவாஸம் பண்ணும்படிக்கும், தேவரீர்ஸ்ரீகார்யமாராயும்படிக்கும் இங்கேயழைத்துக்கொண்டருளவேணும்" என்று விண்ணப்பம்செய்ய; நம்பெருமாளும், இவர்கள் ப்ரார்த்தித்தபடியே தலைக்கட்டுவதாகத்திருவுள்ளம்பற்றிப் பேரருளாளருக்குத்திருமுகம்போகவிட்டருள; பேரருளாளரும் திருமுகத்தையங்கீகரித்து, "தந்தாமபிமாநத்தைவிடிலன்றோ நாம்நம்மிராமாநுசனைவிடுவது" என்றருளிச்செய்து மீளவும்திருமுகம் போகவிட்டருளினார்.

திருவரங்கப்பெருமாளரையர், பேரருளாளரை இசையாலே உகப்பித்து, ராமாநுஜனை ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்தது.

முதலிகளும் இத்தைக்கேட்டு, இனிச்செய்யவடுப்பதென்" என்று மூசித்து, பின்பு ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையரைப்பார்த்து, பேரருளாளர்,பாட்டுக்குபோரநல்லராயிருப்பர்,ஆகையாலே,அவரை, (வேகவத்யுத்தரே தீரே க்ஷேத்ரேஸத்யவ்ரதாஹ்வயகே । அஸ்திகா ஜீதிவிஞ்யாதாபுரீபுண்யவிவர்யிநீ) என்றும்சொல்லுகிறபடியே-வேகவதியின்வடகரையிலே உத்தமமான காஞ்சீமஹாநகரியில் வைத்துக்கொண்டு ச்ரேஷ்டமானஹஸ்திகிரியின்மேலே யெழுந்தருளியிருக்கிற பேரருளாளரைஸேவித்து, பின்பு, அவர் * அர்த்திதார்த்தபரிதாந தீக்ஷிதராயிருப்பர், அவரைப்பாடியுகப்பித்து, "நமக்குராமாநுசனைத் தந்தருளவேணும்"என்று விண்ணப்பம்செய்து,ராமாநுசனை யெழுந்தருளப்பண்ணுவித்துக்கொண்டுவரவேணும்" என்று விண்ணப்பம் செய்தார்கள்;

ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையரும், முதலிகளருளிச்செய்தத்தைக்கேட்டு நம்பெருமாளை தண்டன்ஸமர்ப்பித்து அப்போதேபுறப்பட்டுப் பெருமாள்கோயிலைநோக்கியெழுந்தருளினர். இவரெழுந்தருளினசேதியை ஸ்வஜநமான வரந்தரும்பெருமாளரையர்கேட்டு எதிர்கொண்டு தம்முடையதிருமாளிகையிலே எழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோய் அமுதுசெய்யப்பண்ணிஸத்கரிக்க ; அரையரும் அமுதுசெய்து ஸஹ்ர்தயராயெழுந்தருளியிருந்தார். அதின்மற்றைநாள் பேரருளாளரும், வையமாளிகையிலே "கச்சிக்குவாய்த்தான்" என்கிற திருமண்டபத்திலேயேறியருளி அனைத்துக்கொத்திலுண்டானவர்களும்ஸேவித்திருக்க ; திருக்கச்சிநம்பியும் திருவாலவட்டம்பரிமாற, அவ்வளவிலேராமாநுசனும் த்ரிதண்டமண்டிதகரராய், நம்பி விண்ணப்பம் செய்த வரதராஜாஷ்டகத்தையநுஸந்தித்துக்கொண்டுஸேவித்திருக்க ; அவ்வளவிலே திருக்கச்சிநம்பியும், திருவரங்கப்பெருமாளரையரெழுந்தருளின சேதியைக்கேட்டருளிஅவர்திருமாளிகையிலேயெழுந்தருளி தண்டன்ஸமர்ப்பிக்க ; அவரும் தண்டன்ஸமர்ப்பிக்க ; இப்படிஅந்யோந்யம்வந்தபரராயிருந்துகொண்டிருக்கச்செய்தே, அரையரும், "வரதராஜனைஸேவிக்கவேணும்" என்றுதிருக்கச்சிநம்பியோடேவிண்ணப்பம்செய்ய;நம்பியும்ஸம்மதித்து அரையரையுங்கூட்டிக்கொண்டுபெருமாள்திருவோலக்கமேயழைத்துக்கொண்டுபோய் ஸேவிக்கப்பண்ண ; அரையரும்வரதராஜனைஸேவித்து, (கஹாபுநஸ்ஸ்ரவரயாங்கல்பகல்வ ஜாரவிந்தாம்குலிஸவஜ்ரலாஞ்சநம் । த்ரிவிக்ரமத்வச்சரணாம்புஜத்வயம்

மதீயமூர்த்தாநமலம்கரிஷ்யதி ) என்கிறச்லோகத்தை யநுஸந்தித்துக் கொண்டிருக்க ; பேரருளாளரும் போரவுகந்தருளி, இவர்க்கு தீர்த்தம் திருமாலைதிருப்பரியட்டத்துடனே சடகோபனையும் ப்ரஸாதித்தருள ; அரையரும், ( திருப்பொலிந்தசேவடி யென்சென்னியின்மேல் பொறித்தாய் ) என்று அங்கீகரித்து, பின்பு பக்திபுரஸ்ஸரமாக, (என்னெஞ்சமேயானென்சென்னியான் । தானவனைவன்னெஞ்சங்கீண்டமுகில் வண்ணன்।மூன்னெஞ்சே ।ஊழியானூழிபெயர்த்தானுலகேத்து।மாழியானத்தியூரான்) என்றும், ( பிணியவிழ்தாமரைமொட்டலர்த்தும் பேரருளாளர்) என்றும், (தொழுதெழுதொண்டர்கள்தமக்குப்। பிணியொழித்தமரர்பெருவிசும்பருளும்பேரருளாளன் ) என்றும் இப்படி ஆழ்வார்கள்ஸ்ரீஸூக்தியான * பண்ணார்பாடலின்கவிகளை தேவகாநத்திலே இயலிசையாகப்பாடாநிற்க ;

(தென்னாவென்னுமென்னம்மான்)என்கிறபடியேபேரருளாளரும் போரவுகந்தருளி, தாம்சாத்தியிருந்த திருமுத்தின்தாவடம், திருப்பரியட்டம், சத்ரசாமராதிகள்முதலாகப் பலவரிசைகளெல்லாம் ப்ரஸாதித்தருள ; திருவரங்கப்பெருமாளரையரும், “ நாயன்றே ! அடியேனுக்கு இவற்றிலொன்றும் அபேக்ஷையில்லை, தேவரீர், * ஆர்த்திதார்த்தபரிதாநதீக்ஷிதராகையாலே அடியேனர்த்தித்தத்தைத் தந்தருளவேணும்” என்று விண்ணப்பம்செய்ய ; பேரருளாளரும், “ நீர்வேண்டினத்தைக்கொள்ளும்” என்ன ; அரையரும் ஸந்தோஷித்து, ராமாநுசனைக்காட்டி “ இவரை அடியேனுக்குத்தந்தருளவேணும்”என்று விண்ணப்பம்செய்ய ; பேரருளாளரும், அவர்வார்த்தையைத்திருச்செவிசாத்திமுசித்து, “ அப்போதே அறியப்பெற்றிலோம் என்றும், நம்மிராமாநுசன்தவிர வேண்டினத்தைத்தருகிறோம்” என்றுவினவியருள ; அரையரும், “(ராமோத்விர்நாபிபாஷதே) என்கிறபடியே தேவரீர் இரண்டுவார்த்தையருளிச்செய்யலாமோ” என்று விண்ணப்பம்செய்ய ; பேரருளாளரும், “ ஆனால்தந்தோம்” என்றருளிச்செய்ய ; அரையரும், பெருமாளைஸேவித்து அநுமதிகொண்டு ராமாநுசன்திருக்கையைப்பிடித்து, “ கோயிலுக்கெழுந்தருளவேணும் ” என்ன ; ராமாநுசனும் பேரருளாளருக்கு தண்டன்ஸமர்ப்பித்துநிற்க ; பேரருளாளரும்,(சந்ததியில்லாமனைமகள்போலே தடமுலையில்லாமடமகள் போலே, செந்தணலில்லா வாகுதிபோலே தேசிகனில்லாவோதுகை போலே, சந்திரனில்லாத்தாரகைபோலே இந்திரனில்லாவுலகம்போலே,எங்களிராமாநுசமுனிபோனால்இப்புவிதானினியெப்படியாமோ ) என்றருளிச்செய்து ராமாநுசனைத்தனித்து விடைகொடுத்தருள ; பின்புராமாநுசனும், திருவரங்கப்பெருமாளரையருடனேகூடக் கோயிலுக்கெழுந்தருளப் புறப்பட்டருளி, கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும்கடாக்ஷித்தருளி, “ மடமேபோய்நம்முடைய

திருவாராதநமான பேரருளாளரையெழுந்தருளுவித்துக்கொண்டு வாருங்கோள்'' என்றருளிச்செய்ய ; அவர்களும் அப்படியே யெழுந்தருளுவித்துக்கொண்டுவந்து கூடினவளவிலே திருக்கச்சிநம்பியும், இவர்களைவழிவிட்டு எழுந்தருள, ராமாநுசனும், (திக்குநோக்கித்திரும்பித்திரும்பியே தேவராசர்தன்கோயிலைநோக்கியே। செக்கர்மேனிமிகப்பெருங்கைகளால் சோர்ந்தகண்கள்பனிநீர்தெறித்திட। மிக்ககோயில்பெருவழிதன்னிலே வேதநல்லமறையோர்கடம்முடன்। புக்ககத்துக்குப்போகிறபெண்கள்போல் போயினார்பெரும்பூதூர்முனிவனார்) என்றும், (யஃமத்வாநநரோயாதிநரக0நாப்யயோமதிம்। நவஜ்ஞாநஸ்ய ஸ0கோவ0நவைவயமஹோவரம் ॥ தஸ்மாத்ரங்ம0மஹாபுண்ய0 கோநஸேவேதவைஷ்யிமாந்) என்றும்சொல்லுகிறபடியே ஜ்ஞாநவர்த்தகமுமாய் புண்யவர்த்தகமுமாய், * நமன்றமராலாராயப்பட்டறியாதது மான * திருவரங்கப்பெருநகரைநோக்கிப் பயணகதிகளிலேயெழுந்தருளி வடவாற்றிலே நீராடியருளி கேசவாதியான திருநாமங்களையும் சாத்தியருளி எழுந்தருளியிருக்கிறவளவிலே, இவரெழுந்தருளின சேதியைப் பெரியபெருமாள்கேட்டருளி, தேசாந்தரகதனானபுத்ரன் வருகிறானென்றால்மாதாபிதாக்கள்காணவாசைப்படுமாப்போலேராமாநுசனைக்காணவாசைப்பட்டு மிகவும்ப்ரீதராய், "நம்மிராமாநுசனை எதிர்கொண்டுவாருங்கோள்'' என்று சேனைமுதலியாருக்கு அருள்பாடிட்டருள ;

——————

ராமாநுசன், தம்மையெதிர்கொண்டுவந்தசேனைமுதலியார்முதலான அனைத்துப்பரிகரத்துடனே அழகியமணவாளன்திருமண்டபத்தில் திருக்கைத்தலத்திலெழுந்தருளின நம்பெருமாளைஸேவித்து, சேர்த்தியில்மங்களாசாஸநம்செய்தருளியது.

சேனைமுதலியாரும், ஆளவந்தார்ஸ்ரீபாதத்தில் பெரியநம்பிமுதலானமுதலிகளும், ஜீயர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள் மற்றுமுண்டான பெருமாள்பரிகரமும்அனைத்துக்கொத்தும்ஸகலவாத்யகோஷத்துடனே வந்து, ஜீவன்முக்தராய்ப்போருமவர்களை, நித்யஸூரிகளும் திவ்யாப்ஸரஸ்ஸுக்களும் விரஜைக்கரையிலேவந்து எதிர்கொள்ளுமாப்போலே வடவாற்றங்கரையிலேவந்துஎதிர்கொள்ள ; ராமாநுசனும்ஸவிநயராய் சேனைமுதலியார்ஸ்ரீபாதத்திலே தண்டன்ஸமர்ப்பித்து, அநந்தரம் பெரியநம்பிதிருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து, அநந்தரம் பெரியோர்களெல்லாருக்கும் தண்டன்ஸமர்ப்பித்து, பின்பு இவர்களுடனேகூடவெழுந்தருளிப்போய், (கொடியணிநெடுமதிள்கோபுரம் குறுகினர்) என்கிறபடியே * திட்கொடிமதிளையும் தாமோதரப்பெருந்திருக்கோபுரத்தையும்கிட்டிதண்டன்ஸமர்ப்பித்துமாடத்திருவீதியிலே புகுந்து ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி, த்ரிவிக்ரமன்திருவீதியை

ப்ரதக்ஷிணமாகவெழுந்தருளிப் பெரியஸ்ரீபலிபீடத்தருகேதண்டன்ஸமர்ப்பித்து, ஸேவாக்ரமத்திலே ஆழ்வார்களையும் திருவடித்தொழுது ஸ்ரீரங்கநாயகியாரையும்ஸேவித்து, ஸ்ரீசந்த்ரபுஷ்கரிணியின் தீர்த்தத்தையும்ஸ்வீகரித்து,வண்குருகூர்ச்சடகோபனையும்,கண்ணிநுண்சிறுத்தாம்பைய நுஸந்தித்துதண்டன்ஸமர்ப்பித்து, திருமங்கையாழ்வாரையும் திருவடித்தொழுது,* அணியரங்கன்திருமுற்றத்திலேசென்று தண்டன்ஸமர்ப்பித்து உள்ளேபுகுந்து ப்ரணவாகாரவிமாநத்தையும்ஸேவித்து, ஸேனைமுதலியாரையும்ஸேவித்து அழகியமணவாளன் திருமண்டபத்திலேயெழுந்தருளினவளவிலே, நம்பெருமாளும் திருக்கைத்தலத்திலே புறப்பட்டுளதிரேயெழுந்தருள; இவரும் விழுவதுதொழுவதாய்ஸேவித்து, (பிறந்தார்பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம்துறந்தார்தொழுதாரத்தோள்)என்று விண்ணப்பம்செய்ய; நம்பெருமாளும், "நீர்வந்ததூரத்துக்குப்போருமோநாம்வக்தது" என்று உள்ளேபுகுந்தருளிசேர்த்தியிலேயேறியருள;இவரும்,*மணத்தூணைபற்றிநின்றுவாயாரவாழ்த்தி ப்ரேமபரவசரா்ய்க்கொண்டு * அமலனாதிபிரானில்படியே பாதாதிகேசாந்தமாக ஸேவித்து,திருப்பல்லாண்டையும் அநுஸந்தித்துக்கொண்டு, (நமோநமோவாங்மநஸாதிபூமயே நமோநமோவாங்மநஸைகபூமயே। நமோநமோநந்தமஹாவிபூதயே நமோநமோநந்தஓயைகஸிந்தவே॥ நதர்மநிஷ்டோஸ்மிநசாத்மவேதீநபக்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே। அகிஞ்சநோநந்யகதிஶ்ஶரண்ய த்வத்பாதமூலம்ஶரணம்ப்ரபத்யே) என்று பரமாசார்யரான ஆளவந்தார், தம்மைக்குறித்துப் பெருமாள்விஷயமாகவருளிச்செய்ததிவ்யஸூக்தியை அநுஸந்தித்துக்கொண்டிருக்க;

—❦—

நம்பெருமாள்,"உபயவிபூதியையுமுடையவர்"என்றுராமாநுசனுக்குத் திருநாமம்சாத்திகோயில்கார்யங்களை ஆராய்ந்துபோரும்படி சட்டளையிட்டருளியது.

பெரியபெருமாளும் மிகவும் க்ர்பைபண்ணியருளி, இவர்க்கு, தீர்த்தம், திருமாலை, திருப்பரியட்டத்துடனே ஸ்ரீசடகோபனையும் ப்ரஸாதித்தருளி * திருப்பவளச்செவ்வாய்திறந்து, உமக்கு (பொங்கோதஞ்சூழ்ந்தபுவனியும் விண்ணுலகும், அங்காதுஞ்சோராமேயாள்கின்ற) என்கிறபடியே -" உபயவிபூத்யைச்வர்யகைங்கர்ய ஸ்ரீயையும் நாம் உமக்குத்தந்தோம், நீர் உபயவிபூதியையுமுடையவர்" என்று திருநாமம்ப்ரஸாதித்தருளி, நம்முடையகோயில்கார்யத்தையெல்லாம் ஆராய்ந்துநடத்தும்" என்று திருவுள்ளமாயருள ; உடையவரும் "யந்யோஹமஸ்மி"என்றுஅருளிச்செய்து, பின்புபெரியநம்பிதிருமுகமண்டலத்தைப்பார்த்து, " (பெரியார்க்காட்பட்டக்கால்பெறுதபயன் பெறுமாறு) என்று தேவரீர்க்காக அடியேனை நம்பெருமாள்வாழ்வித்

தருளினர்'' என்று விண்ணப்பம்செய்ய ; பெரியநம்பியும், "ஆழ்வார், பூதபவிஷ்யத்வர்த்தமாநமறிந்தவராகையாலே, (கலியுங்கெடும் கண்டுகொண்மின் ) என்று தேவரீர் திருவவதாரத்தைக்கடாக்ஷித் தன்றேவருளிச்செய்தது'' என்றருளிச்செய்தருளினர். அவ்வளவிலே பெரியபெருமாளும், பஹுமாநத்துடனே சேனைமுதலியாரையும் தம்முடையஅனைத்துப்பரிகரத்தையும்மற்றுமுண்டானவர்களையும்கூட்டி, "மடத்திலே நம்முடையவரை விட்டுவாருங்கோள்'' என்றுநியமித்தருள ; அவர்களும் அப்படியே அனைத்துபரிகரமும் ஸம்ப்ரமத்துடனேஸேவிக்க மடத்திலேப்ரவேசித்தருளி ஆழ்வான்முதலானமுதலிகளோடேவாழ்ந்துகொண்டெழுந்தருளியிருந்தார். அவ்வளவிலேஅங்குண்டான அனைவரும், திருவரங்கப்பெருமாளரையரைப்பார்த்து, "கோயில்மணியான*ஸ்ரீரங்கமங்களமணியோடே ராமாநுஜஜீவரத்நத்தைப் பெருவருத்தத்தோடே கொண்டுவந்துசேர்த்தீரே'' என்று அவரைப்பெருக்கவாதரித்து உபகாரஸ்ம்ருதிபண்ணி ப்ரீதராயிருந்தார்கள்.

---

### உடையவர் நம்பெருமாளுடைய கைங்கர்யங்களுக்கெல்லாம் தனித்தனியே ஒவ்வொருவரையேற்படுத்திக்குறைவற நடத்தியருளினரென்பது.

மற்றைநாள் * கீழ்வானம்வெள்ளென்று கிழக்குவெளுக்கிறவளவிலே திருப்பள்ளியுணர்ந்தருளி முதலிகளுடன் கீழ்திக்கைநோக்கியெழுந்தருளி, மகஹாதிகேசவன்துறையிலே, "எதிராசன்துறை'' என்று தம்துறையென்னும்படிநீராடி நித்யாநுஷ்டாநங்களையும் நிறைவேற்றித்திருமண்காப்புச்சாத்தி,காட்டுச்சிங்கர்முதலான சுற்றுக்கோயிலெம்பெருமான்களையும்ஸேவித்து, * ஆராமஞ்சூழ்ந்த வரங்கத்திருத்தோப்புக்களையும்ஸேவித்து, அங்குண்டான பூமரந்தொடக்கமானவற்றையும், இப்பால் * அன்பொடுதென்திசைநோக்கிப் பள்ளிகொள்ளுகிற திருமுகத்துறையிலேநின்று திருக்கண்பார்வைக்கிலக்காம்படி ஸேவித்து, மேற்கேயெழுந்தருளிச் சூடிக்கொடுத்தநாய்ச்சியாரையும் ஸேவித்து,*சூடிக்கொடுத்தவள்தொல்லருளால் வாழ்கின்றவள்ளலாய்ப்புறப்பட்டு,அவ்வருகிலுண்டான * வண்டினமுரலுஞ்சோலைகளையும் * அங்கயல்பாய்வயல்களையும்கண்டு களியாநின்றுகொண்டு, வடக்கேயெழுந்தருளி, ( மீனோடாமைகேழலரிகுறளாய் முன்னுமிராமனாய்த் தானாய்ப்பின்னுமிராமனாய்த்தாமோதரனாய்க் கற்கியுமானான்றன்னை ) என்கிற தசாவதாரக்கோயிலையும், (கண்ணபுரத்தடியன் கலியன்) என்கிற திருமங்கையாழ்வாரையும் திருவடித்தொழுது வடக்குத்திருவாசலாலே உள்ளேயெழுந்தருளி, * ஸ்ரீரங்கஹர்ம்யதலமங்களதீபலேகையான ஸ்ரீரங்கநாயகியாரையும்,(காநஸ்தே) இத்யாத்யநுஸந்தாநத்

தாலே விநதராய்ஸேவித்து,*பூவளரும்திருமகளாலருள்பெற்றுப்புறப்பட்டு,ப்ரதக்ஷிணமாகவெழுந்தருளிப் பெரியதிருவடியையும் திருவடித்தொழுது, உள்ளேபுகுந்து பெரியபெருமாளைஸேவித்து, அவராலே பூர்வோக்தப்ரகாரத்தின்படியே ஸத்க்ர்தராய் ப்ரீதியுடனே உள்ளிலும் புறப்பட்டுவர; அவ்வளவிலே அனைத்துக்கொத்திலுண்டானவர்களும் வந்து திருவடிகளிலேஸேவிக்க; பின்பு உடையவரும் பெரியதிருமண்டபத்திலேயெழுந்தருளியிருந்து; பெருமாளுக்கு அமுதுபடி சாத்துப்படிகளெல்லாம் அங்குத்தைக்கு அநுரூபமாகவே நாள்தோறுமாராய்ந்துபோருகிறவர். அமுதுபடி, நெய்யமுது, மிளகுபொடி,தளிகைக்கு பதக்கு உழக்கு அழாக்கு ஆழாக்காம்படியாகவும், கறியமுது கொம்பஞ்சு கொடியஞ்சும் கந்தமூலபலாதிகளுடனும் ஸூபாபூப க்ஷீரசர்க்கராஜ்யாதிளுடன்படைத்து நீட்டும்படியாகவும், மற்றும் திருமடைப்பள்ளி, திருமண்டபங்கள், கருவூலங்களழிவுசோர நன்றாகவாராயும்படியாகவும் கற்பித்தருளி, அனைத்துக்கொத்திலுண்டானவர்களையும்*அண்டர்கோனணியரங்கனுக்கு * அத்தாணிச்சேவகம்செய்து போரும்படிக்கு அண்ணிதாகத்திருமதிளுக்குள்ளே யிருக்கும்படி கற்பித்து, காலோசிதமாக அமுதுசெய்தருளும்படி ஆராய்கைக்கு ஆத்மஸமரான முதலியாண்டானைக்கற்பித்தருளியும், அவர், பால்குழம்பு அமுதுசெய்தவநந்தரம் நாவல்பழம் அமுதுசெய்யப்பண்ணினபடியைக்கேட்டுக் கலங்கியருளி, அந்தவிசேஷயத்தை ப்ரத்யௌஷதத்தாலே பரிந்துபரிஹரித்தும்போர; அவர் * ஸர்வ௦பலவதஃபத்யமன்றோ என்றதுக்கு இந்தஜ்ஞாநம் உனக்கு நசிக்கக்கடவது என்றருளிச்செய்து அதிஸூகுமாரமான திருமேனியை அடிக்கடிபேணிக்கொண்டு, தம்மைப்போலே, (அன்பினால்ஞாநநீர்கொண்டாட்டுவன்) என்னும்படி ப்ரேமார்த்ரசித்தராய்ப்ரதிதிநம் திருமஞ்சநமெடுத்து அடிமைசெய்யும்படியாகவும், (நின்பூவைவீயாமேனிக்குப் பூசுஞ்சாந்தென்னெஞ்சமே) என்கிறபடியே அநுராகரஞ்ஜிதமான கர்ப்பூரகஸ்தூரி காஸ்மீர ஹிமவாரி குங்குமஸஹிதமாக ஸம்மேளநம்பண்ணிமிதிச்சுச் சாத்தும்படி சதுரரைக்கற்பித்தும், (கண்ணியெனதுயிர்) என்னும்படியான காதலாலே * செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாழ்ச்சி யெண்பகர்பூவும், மற்றும் * எண்டிசையுமுள்ள பூவுங்கொண்டுவந்து * கலம்பகன்புனைந்து, அலங்கலந்தொடையல் * சூட்டு நன்மாலையென்னும்படியான திருமாலைசேர்த்து நீட்டுகைக்கு மாலாகார துளஸீப்ர்த்யரையும், (ஏலுமாடையும்) என்னும்படி திருவரைக்குப்பாங்காகத் திருப்பரியட்டம்வாட்டி நாநாவர்ணவிசித்ரமாக்கி ஸூகஸ்பர்சமாகக்கொட்டிமடித்து ஸந்நிதியிலே நீட்டுகைக்கு ஸ்ரீவைஷ்ணவவண்ணத்தானையும், (ஞாநச்சுடர்விளக்கேற்றினேன்) என்கிற ப்ரேமத்தாலேகர்ப்பூரஸர்ப்பிதீபாதிகள் ஏற்றும்படியாகவும், கர்ப்பூர

ஸஹிதமாக அடிக்கடி அடைக்காய்திருத்தி நீட்டும்படியாகவும், அது க்குமேலாக * சிறுகாலேயூட்டி யொருப்படுத்தும்படியாகவும்,* வாய லகிலின்னடிசில் * நெய்யமரின்னடிசில் நீட்டும்படியாகவும், அதுக்கு மேலே திருப்பள்ளிக்கட்டிலிலே தாலாட்டியாட்டும்படியாகவும், மற் றும் அனேத்துக்கொத்திலுண்டானவர்களை அவ்வவபரிசர்யைகளைப் பரிவுடனேசெய்துபோரும்படியாகவும் கற்பித்து, இப்படிகோயில்கு றைவறுத்து நாள்தோறும் திருவாராதநம் நன்றாகநடத்திக்கொண்டு போருகிறகாலத்திலே ;

—❀—

உடையவர்,திருவரங்கப்பெருமாளரையரிடத்தில் திருவாய்மொழியைப் பண்ணிசைதாளத்துடனேயோதி, தம்மைப்போலே பாடுவார் பலரையேற்படுத்தினரென்பது.

உடையவர்க்கு,*மதிளரங்கர்வண்புகழ்மேலான்றதமிழ்மறைகளான திருவாய்மொழியோதத்திருவுள்ளமாய்ப் பெரியநம்பிதிருமாளிகைக் கெழுந்தருளி இத்தை விண்ணப்பம்செய்ய; பெரியநம்பியும்,உடையவ ரருளிச்செய்தத்தைக்கொண்டு உடையவரைப்பார்த்து, " தேவரீர் திருவாய்மொழியையும் பெரியதிருமொழியையும்திருவரங்கப்பெருமா ளரையர்ஸந்நிதியிலே அதிகரித்தருளும்" என்று அருளிச்செய்ய;உடைய வரும் நம்பியநுமதியுடனே, (அய்யாபயஷ்யதீந்த்ர0யஃபரா0குரு ஸஹக் ஜதம்|தந்நாயவ0ஶ்ய0வந்தேஹ0 ஸ்ரீரங்மாயிபதேஶிகம்)என்றும்சொல் லுகிறபடியே- திருவரங்கப்பெருமாளரையர்ஸந்நிதியிலேதிருவாய்மொ ழிஓதுகிறநாளையிலே அவர்பாடுகைக்குமுறையாக, மஞ்சள்காப்புசாத் தியும், இப்படிசுச்ருஷாபூர்வகமாகத் திருவாய்மொழியைப் பண்ணிசை யுடனேயோதிச்சாத்தினவநந்தரம், திருவாய்மொழியைப் பண்ணிசை தாளத்துடனேபாடும்படி அநேகம்விண்ணப்பம்செய்வாரைச்சேர்த்தரு ளியும், " செந்தமிழ்பாடுவார்வீதி" என்று அதுவேநிரூபகமாம்படி ப்ரதிஷ்டிப்பித்தும், தாமும்,(திருவாய்மொழியின்-இன்னிசைமன்னுமி டந்தொறும்)என்னும்படி அவர்கள்ஸேவிக்குமிடத்துக்குஎழுந்தருளி யிருந்து பாவங்களைகடாக்ஷத்தாலேகாட்டியருளியும்,இப்படி அநுகூல ரானவர்களுடனேவாழ்ந்துகொண்டுபோருகிறவர்.

பெருமாளுக்குத் திருமேனிக்காவலாக மங்களாசாஸநபரரை ஆரா ய்ந்துபோருகிறவளவிலே பிள்ளையுறங்காவில்லிதாஸரை, *கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்துசெவ்வரியோடிநீண்டவப்பெரியவாயகண்களில் காவல்படுத்த ; அவரும் ( வாளும்வில்லுங்கொண்டு ) என்கிறபடியே திருமேனிக்காவலாய் அதுவேயாத்ரையாய்ப்போருகிறவர் ; தாமும் தம்மருமக்களான வண்டரையும் சுண்டரையும் உடையவர்திருவடி

களிலே ஆச்ரயிப்பிக்க ; அவர்களும் ஆச்ரயித்தவன்றுதொடங்கி மடத்துக்கு ததியாராதநத்துக்கு அமுதுபடி, பருப்பமுது, கறியமுது, நெய்யமுது நடத்திக்கொண்டுபோருவர்கள்.

—※—

நம்பெருமாள், ஒருகாலத்திலே வைகாநஸரீத்யா திருவாராதநம் கொண்டருளினதைநீக்கி, முன்போலே பாஞ்சராத்ரவிதிப்படி நடக்கும்படிபண்ணுவித்தாரென்பது.

அக்காலத்திலே ஒருகாலவிசேஷத்திலே ஒருஅவாந்தரத்திலே வைகாநஸர் திருவாராதநம்பண்ணிக்கொண்டுபோராநிற்க, அத்தைத் தவிர்ப்பித்து, (ப்ராஹ்மணை꞉பஞ்சராத்ரஜ்ஞை꞉பஞ்சபிர்தீக்ஷிதைஸ்ஸஹ । நித்யைர்நைமித்திகைஸ்ஸர்வைர்வநித்யமாநர்ச்யயவைவிபு꞉) என்றும், (தஸ்மைப்ரோவாசபகவாந்பஞ்சராத்ரம்ஸ்வயம்ப்ரபு꞉ । தத்ரார்ச்சயதி வைநித்யம்நித்யநைமித்திகைரபி) என்றும், (கோமந்த்ர꞉கஸ்வதேகல்ப꞉ பூஜநேபுருஷோத்தம꞉।கிஞ்சபூஜயதாம்புஸாம்பலம்தத்ப்ரூஹிமேச்யுத;) ஸ்ரீபகவாநுவாச ; — ( ஸாத்வதம்பௌஷ்கரஞ்சைவஸாம்ஹிதேபஞ்சராத்ரகே। தந்த்ரக்தேநக்ரமேணைவ த்வாதஸாக்ஷரவித்யயா॥தீக்ஷிதோதீக்ஷிதைஸ்ஸார்த்யம்ஸாத்விகை꞉பஞ்சபி꞉பரை꞉ । அஷ்டாங்கேநவிதாநேநநித்யமர்ச்சயஸக்திமாந் ) என்றும் சொல்லுகிறபடியே பூர்வமேவநடந்து செல்லுகிறபாஞ்சராத்ரோக்தமான பாரமேச்வரஸம்ஹிதையின்படியே திருவாராதநம்கொண்டருளிப்போருகிற பரவாஸுதேவரான ஸ்ரீரங்கசாயிக்கு த்வாதசாக்ஷரநிஷ்ணுதராய்பஞ்சராத்ரவிசாரதரானபரமபாகவதர்களைத் திருவாராதநம்பண்ணிக்கொண்டுபோரும்படி கட்டளையிட்டருளி, ஆளவந்தாருடைய ஆகமப்ராமாண்யத்தின் பஞ்சராத்ர சாஸ்த்ரம் எங்கும்ப்ரகாசமாகஸஞ்சரிக்கும்படி ப்ரமாணோத்கர்ஷமாக ப்ரதிஷ்டிப்பித்து, ப்ரபஞ்சாஉபலாயம்பண்ணி வஞ்சகராய்த்திரியுமவர்களையும் பஞ்சாயுததரராய் பஞ்சகாலபராயணராய் பஞ்சபாணபராங்முகராய் பஞ்சார்த்தஜ்ஞாநராய்ப்போரும்படி * திருத்தித் திருமகள்கேள்வனுக்காக்கியும், (அரங்கன்செய்யதாளிணையோடார்த்தான்) என்னும்படி திருவடிகளோடேஸம்பந்தித்துப் பெருமாளுக்குப்ரியதமராய், பெருமாளுக்கு நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவங்களை தாழ்வறநடத்திக்கொண்டுபோருகிறகாலத்திலே;

—※—

### பெரியதிருமலைநம்பி, காளஹஸ்தியில் ருத்ராபிஷேகத்துக்குக் குடமெடுத்துவருகிற கோவிந்தபட்டரைக்கண்டு வார்த்தைசொல்லியது.

முன்பு திருமலைநம்பிஸந்நிதிக்குப்போகவிட்டருளின ஸ்ரீவைஷ்ணவர், ஹர்ஷப்ரகர்ஷத்துடனே கோயிலிலேபுகுந்து உடையவர்ஸந்நிதியிலேவந்து ராமாநுசன்திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து ஸவிநயராய்நிற்க; ராமாநுசனும் அவர்முகவிகாஸங்கண்டு கார்யஸித்தியைநிச்சயித்து அந்தவ்ர்த்தாந்தத்தைவிவரியும் என்ன; அந்தஸ்ரீவைஷ்ணவரும், திருவடிகளிலேதண்டன்ஸமர்ப்பித்து அஞ்ஜலிபண்ணிக்கொண்டு, தேவரீர்விடைப்ரஸாதித்தருளினபின்பு க்ரமத்திலே திருப்பதியேறித் திருமலைநம்பியைஸேவித்து தேவரீர்நியமநத்தின்படியை விண்ணப்பம்செய்தேன்; நம்பியும், இத்தைக்கேட்டு உகந்தருளி, நாமே இதுசெய்யக்கடவதாயிருக்க, "நம்மிராமாநுசனும், * எண்ணம்புகுந்துதித்திக்குமவராகப்பெற்றதே!" என்று தேவரீருடைய ஆநுகூல்யத்துக்கு உகந்ததிருவுள்ளத்தராய்அந்தக்ஷணத்திலேஸ்ரீபாதத்தில் முதலிகளுடனேஅடியேனையுங்கூட்டிக்கொண்டு காளஹஸ்திப்ரதேசத்தில் குளக்கரையிலேவிட்டிருக்க; அப்போது உள்ளங்கைகுளிர்ந்தநாயனாரும்ருத்ராபிஷேகார்த்தமாகக்குடமெடுத்துவரக்கண்டு, நம்பியும் அவனைப்பார்த்து, "கொன்றைச்சடைமுடியானைக் குளிரநீராட்டினால் இன்றுனக்குண்டாம்பயனென்" என்றருளிச்செய்ய; அவனும் இப்பாசுரங்கேட்டு * ஸ்மயமாநமுகனாய் இவரையும் ஏறப்பாராநின்று கொண்டுபோனான்.

—※—

### பெரியதிருமலைநம்பிக்கும் கோவிந்தபட்டருக்கும் நடந்தஸம்வாதம்.

நம்பியும், * அவன்செய்யும்சேமத்தையெண்ணித் தெளிவுற்று மீண்டு திருமலையிலேயெழுந்தருளி வ்யாக்யாநம்பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்துபின்னையுமொருநாள்அக்குளக்குரையில்வடவ்ருக்ஷச்சாயையிலே யெழுந்தருளியிருக்க; அங்கே அவனும்குடமெடுத்துவரக்கண்டு நம்பியும் * அப்போதொரு சிந்தைசெய்து, * என்மநஞ்சூழவருவானாய் * உறங்குவான்போல் யோகுசெய்தவன்தானே * உணர்வைப்பெறவூர்ந்தவனறவற்றேவென்று, பரமாசார்யஸூக்தியிலே (ஸ்வாஹாவிகாநவயிகாதிஶயேஶித்ருத்வம்) என்கிறச்லோகத்தை ஓலைப்புறத்திலேயெழுதிஅவன்வருகிறவழியிலேபோகடுவித்துநிற்க; அவனும்வழியிலோலையையெடுத்துவாசித்துக்கொண்டுகிடக்கப்புகட்டுஜலத்தைஆஹரித்துக்கொண்டுமீண்டுவருகிறவன், முன்னெறிந்தவோலையையெடுத்து எங்களைக்கண்டு, (ஶோகஸ்லோகத்வமாமதஃ) என்று வால்மீகிபகவான்

அர்த்தசிந்தனைபண்ணினாப்போலே, ச்லோகார்த்தபர்யாலோசனைபண்ணுநின்றுகொண்டுகிட்டவந்துநம்பியைப்பார்த்து,"உங்கள்கையில்நழுவினபொருளிதுவோ" என்ன; நம்பியும், "வேறுசிலர்பொருள்நழுவுமதொழிய நழுவும்பொருள்எங்களதல்ல" என்ன; அவனும், "அதுகிட்க்கிடீர், நீங்களெல்லாரும் ஓரிடத்திலே நடக்கிறதென்" என்ன; நம்பியும், "மார்க்கம்கலக்கமற்றிருக்கையாலே" என்ன; அவனும், கேவலனுக்கு துர்மார்க்கங்களுண்டோ" என்ன; நம்பியும், "*பொருள்கையுண்டாய்ச்செல்லுமவனுக்கு அடிப்பதுவன்றோ" என்ன; அவனும், "உற்றுரைவிடைகொடுக்கவந்தீர்களோ" என்ன; நம்பியும், அதல்ல "கறவைகொள்ளவந்தோம்" என்ன; அவனும், "அநுஷ்டாநங்களுக்கு பசுபாததூளிபவித்ரமன்றோ" என்ன; நம்பியும், "அது இடமறிந்துசேர்படில் நல்லது" என்ன; அவனும், "அது குறுக்குநெடுக்காகில்பேதமேது" என்ன; நம்பியும், "செவ்வேயிருக்க திர்யக்காகையேபேதம்" என்ன; அவனும், "புதுவார்த்தைகட்டுக்களோ" என்ன; நம்பியும், "பழையவார்த்தைகட்டுக்களுமப்படியே" என்ன; அவனும், "பூர்வவிசாரம்வேண்டாவோ" என்ன; நம்பியும், "பரத்வத்திலேகாணும் விசாரமிருப்பது" என்ன; அவனும் நிருத்தரனாய் யதாஸ்தாநமேபோம்போது தலைதுலுக்குதலும் அடியடைவுகேடும் காணலாம்படிபோனான்.

நம்பியும், (ப்ரஸாதமமமஹித்தம்) என்னுமாப்போலே நெஞ்சம் நெகிழாநின்றதேயென்று முதலிகளுடன் ஸல்லாபித்துக்கொண்டு, மீண்டு திருமலையிலெழுந்தருளினரென்றவாறே, உடையவருங்கேட்டு ஆநந்தித்து, கூரத்தாழ்வான் முதலியாண்டான்முதலானமுதலிகளைப் பார்த்து, "கேட்டிகோளே, கோவிந்தனுக்கு ஆளவந்தாருடைய திவ்ய ஸூக்திநெஞ்சிலுற்று வாங்மாத்ரத்தாலே வைதண்டிகச்சாயைக்காட்ட; அச்சாயையாலே நம்பியுடையஸூக்தி வைசத்யக்ரமங்களிலே, (கூடஸ்யோகூரஉத்யதே) (அமரர்களாதிமுதல்வன்) (தேஹீ ஸம்ஸார்ஹவர்த்திநः) (நெறிவாசல்தானேயாய்நின்றானை) (என்னுடைமையும் நீயே) (ஜ்ஞாநேநஹீநப்பஸூஹிஸ்ஸமாநः) (யேவாலலாடபலகேலஸஉஊர்ய்வபுண்ட்ராः) (தவளப்பொடிக்கொண்டு நீரிட்டிடுமின்) (நீறு செவ்வேயிடக்காணில்) (வேதமூலப்ரமாணத்)(மிக்கவேதியர்வேதம்) (யர்மேஸர்வம்ப்ரதிஷ்டிதம்) (அவித்யயாம்ருத்யும் தீர்த்வாவித்யயாம்ருதமச்நுதே। ப்ரணவோதநுச்சரோஹ்யாத்மா ப்ரஹ்மதல்லக்ஷயமுச்யதே ॥ அப்ரமத்தேநவேத்தவ்யம்சரவத்தந்மயோபவேத்) (நாராயணாத்ப்ரஹ்மாஜாயதே, நாராயணாத்ருத்ரோஜாயதே) என்றித்யாதிகளாலே ஸகர்த்காலத்திலேமநஸ்ஸூ அவகாஹிக்கையாலும் இவரும் அவனைஸாத்யகோடியிலே யேறிட்டுக்கொண்டு திரும்பியருளுகையாலும், அவனும் நிருத்தரனாய் ஏோளாயமாநசித்தனாய்ப்போகையாலும்

9

இவருடைய ஸாமர்த்த்யமிருந்தபடியென் என்று முதலிகளைப்பார்த் தருளிச்செய்து,பின்னையென்னென்றுகேட்க;அந்த ஸ்ரீவைஷ்ணவரும், (யஂயஂஸ்ப்ருஸதிபாணிப்யாஂயஂயஂபஸ்யதிசக்ஷுஷா। ஸ்தாவராண்யபி முச்யந்தேகிஂபுநர்பாந்தவாஜநாஃ) என்கிறபடியே - தேவரீருடைய உபயவிதஸம்பந்தமும்பழுதுபோமோ,மூன்றும்ககூதியில் கார்யஸித்தி யைக்கேட்டருளவேணும் என்று விண்ணப்பம்செய்தார்.



*பெரியதிருமலைநம்பி, காளஹஸ்திதோப்பில் (தேவனெம்பெரு மானுக் கல்லால்பூவும் பூசனையுந்தகுமே) என்கிறவாக் யத்துக்கு வ்யாக்யாநமிட்டருளும்போது, கோவிந்த பட்டர், "தகாது தகாது" என்று படலிகை யையும் ருத்ராக்ஷத்தையும் சுழற்றியெறிந்து அவர்திருவடியில்ஆச்ரயித்தாரென்பது.*

எங்ஙனேயென்னில்; - திருமலையில் *சிந்தாமணியையும்திருவடி த்தொழுது, (படிக்களவாகநிமிர்த்தநின்பாதபங்கயமேதலைக்கணியாய்) என்று ப்ரபத்திபண்ணிப்புறப்பட்டு அவர்களெல்லைநிலத்தில் தோப் பில் எழுந்தருளியிருந்து திருமலைநம்பியும், ஸ்ரீபாதத்தில்முதலிகளு க்குத் திருவாய்மொழிவ்யாக்யாநம்நடத்தாநிற்க; அங்கே உள்ளங்கை குளிர்ந்தநாயனும் புஷ்பாபஹரணம்பண்ணிக்கொண்டு ஒருபாதிரிமர மேறியிருக்க; அவ்வளவிலே * திண்ணன்வீடு ப்ரஸ்துதமாக; அவ ரும் முத்தமிழ்விரகராகையாலே மூன்றுபாட்டளவும் பூப்பறிக்கத் தவிர்ந்து நாலாம்பாட்டிலே, (தேவனெம்பெருமானுக்கல்லால்பூவும் பூசனையுந்தகுமே) என்றுவர; அவனும் திடுக்கென்று குதித்துக் கையில் படலிகையையும் சுழற்றியெறிந்து தரித்திருந்த ருத்ராக்ஷவட் டங்களையும் அலங்கலழிய வீசிப்பொகட்டு, "தகாது தகாது" என்று நம்பிதிருவடிகளிலே அடைவுகெடவிழுந்துகிடந்து, (அஜ்ஞஸ்வா வாரஹீநஸ்வமலிநே।" ஊஃவஸாநரேநிமந்நஃ (உம்யோஹஂவிஷயாந்நி நா) என்றும், (க்ருஷ்ணமேவேக்ஷபாபூர்ணேதிஷ்ஂத்யேவாந்நஹிக்ஷூ கே। ஆஶயாதஂபரித்யஜ்யயாதஸ்யமமதத்ஃபலம்) என்றும் - "உபய விபூதிநிர்வாஹகத்துக்கும் முடிசூடினவனிருக்க விரிதலையாண்டியை விரும்பினேன் என்றும், புதுக்கணிப்புடைய புண்டரீகாக்ஷனிருக்கப் புகைக்கண்ணனைப்பூசித்தேன் என்றும், கடல்மண்ணுண்டகண்டனிரு க்கக்கறைக்கண்டனைக்காமித்தேனென்றும், திருமங்கையுறைமார்பனி ருக்கத் திருவில்லாதோனைத் தொழுதேன் என்றும், பீதகவாடைப் பிரானிருக்கப் புலியுரியையுடையானைப் பின்தொடர்ந்தேனென்றும்,

சதிரானகங்கையடியானிருக்கத் தண்ணளியால் சுடுகாடுகாவலனைச்சுற்றிவலம்வந்தேனென்றும், பெருமாலாகிற பெருந்துழாய்மரமிருக்கப் பெருங்கையால்குடமெடுத்துப்பேய்ச்சுரைக்கு நீர்வார்த்தேனென்றும், இப்படிபலவகையாலும்புலம்பி, "இவ்வாத்மாவை உஜ்ஜீவிக்கும்வகையருளாய்" என்று திருவடிகளிலேவிழுந்து எழுந்திராமலிருக்க ; நம்பியும், (ஸ்ராஹ்மணோநிர்வேதமாயாத்) என்றும், (நிர்வேதஂஶ்ரமமாயயௌ) என்றும் நிர்விண்ணராய், (பஶ்வாத்தாபேநஸம்யதி)என்று சுத்தியோகமுண்டாய் (த்யக்த்வாபுத்ராஂஶ்வதாராஂஶ்வ) என்று – சரணாகததர்மம்கூடினவளவிலே ஆளவந்தார்க்ருபைபண்ணும்படிக்குக் குறையில்லையேயென்று முதலிகளைப்பார்த்தருளிச்செய்து அவரையும்கையைப்பிடித்து அவருடம்பையும்தடவிப் பலபடியாக ஸாந்த்வவாதநம்பண்ணி,(ப்ரேக்ஷணீயமநுத்தமம்) என்று எதிர்விழிவிழித்து விஸ்ரம்பகதநம் நடவாநிற்க ;

—※—

ஸ்தலத்தார், கோவிந்தபட்டரைப்பிடித்திழுக்க, அவர், "உங்களுக்கும் நமக்கும் பணியில்லை" என்ன ; அவருடனே தங்கள்ஸ்வப்நவ்ர்த்தாந்தத்தைச் சொல்லி மீண்டுபோனார்களென்பது.

இத்தைஸ்தாநத்தாரடையக்கேட்டு நம்பிஸந்நிதியிலேவந்து நம்பியைப்பார்த்து, "எங்கள்ஸ்தாநத்துக்குக் கடவரானவிவரை அம்மான்பொடியிடவடுக்குமோ" என்ன ; நம்பியும், "அம்மான்பொடிக்குஈடுபட்டவிவரைக்கேட்டுக்கொள்ளுங்கோள், எங்கள்வழி அந்யாதர்சயம், அசல்வழிவருகிறோமல்லோம்" என்ன ; அவர்களும் நம்பியருளிச்செய்தத்தைக்கேட்டு, "நாயனாரேவாரும்" என்றுகையைப்பிடிக்க ; நாயனாரும், உதறி, "கையைப்பிடிக்கக்கூடுமோ" என்று வெறுத்து கருவூலத்திறவுகோல்,இலச்சினைமோதிரம்எல்லாவற்றையும்கொடுத்து, "உங்களுக்கும் நமக்கும்பணியில்லை" என்று கையைத்தட்டிமுகம்திரும்பியிருக்க ; அவர்களும், நேற்றே இச்சேதிகேட்டு ※ தாங்கள் தங்களுக்கு நல்லனவேசெய்யாதே, "எங்கள்பிரான்வழிவருவானென்" என்று உங்களுடனே சண்டைக்குநிற்பதாக எண்ணியிருந்தோம், காளஹஸ்தியுடையாரும் தங்கள்கனவிலேவந்து, (க்ருதேகலியுகேப்ராப்தேநாஸ்திகைஃகலுஷீக்ருதே । கலிநாதூஷிதாவேதாஃ) என்றும் பாஹ்யரான பௌத்தாதிகளாலே வேதசாஸ்த்ரங்கள் ப்ரமுஷிதமாகாநிற்க, நாஸ்திகநிரஸநம்பண்ணுகைக்கு, (க்வசித்க்வசித்மஹாபாகாஃ) என்றும், (யர்மஸஂஸ்யாபநார்யாய) என்றும், (கலியுங்கெடும்கண்டுகொண்மின்) என்றும் இளையாழ்வார், யமுனைத்துறைவர், கோவிந்தபட்டர்இவர்களாகவும்இவர்கள்சேர்த்திக்கு சங்கசக்ரபார்ஷதங்களாகக்

கூரத்தாழ்வான் முதலியாண்டானுகவும் அவதரித்தார்கள். அதுநமக்கும் உகப்பாகையாலே, ( மதாநுமதிகோலோக: ) என்கிறபடியே – "கோவிந்தபட்டருக்கு காசீவாஸாபேக்ஷயிருக்கையாலே, நாமே உள்ளங்கைகுளிர்வ்யாஜமிட்டுஅழைப்பித்துக்கொண்டதொழியமற்றைப்படியல்ல" என்று தங்கள் ஸ்வப்நத்தைச்சொல்லிமீண்டார்கள்.

கோவிந்தபட்டரும் அவர்தேவிகளும் பெரியநம்பிதிருவடிகளிலே ஆச்ரயித்து பஞ்சஸம்ஸ்காரம்பெற்றது.

இச்செய்தியைகோவிந்தர்ஸ்த்ரீயுங்கேட்டு,(ஹர்த்தாரமநுமந்ஹதி) என்று பர்த்ர்தர்மத்தையங்கிகரித்துத் திருமலையிலேவருவதாகவந்து திருமலைநம்பிதிருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து ஸவிநயையாய் நிற்க ; திருமலைநம்பியும், அவளையுங்கூட்டிக்கொண்டு திருப்பதியேற வெழுந்தருளி, (விளம்வமஸஹநஸிவ)என்னுமாப்போலே * நெடுமாலருவிகுளக்கரையிலேவபநாதிகளையும்செய்வித்து, (ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா ஶேஷோஹிபரமாத்மந:) என்றும், (தாஸஹ்ருதாஸ்ஸ்வதஸ்ஸர்வேஹ்யாத்மாநஃபரமாத்மந:) என்றும், (ஒண்சக்கரப்பொறியொற்றி) என்றும், (கோயில்பொறியாலேயொற்றுண்டு)என்றும், (ஸம்ஸ்காராஃபஞ்சகர்த்தவ்யா:) என்றும் சொல்லுகிறபடியே பஞ்சஸம்ஸ்காரங்களையும் ப்ரஸாதித்தருளினர்.

கோவிந்தபட்டரும் அவர்தம்பியாரும், திருமலைநம்பியை ஆச்ரயித்தசெய்திசொன்னஸ்ரீவைஷ்ணவரை ராமாநுசன் உபலாளித்தருளினது:

இவரும், (உதயந்ஹிமஹாஶைலாந்மேரோரிவதிவாகர:) என்னுமாப்போலே ஆத்மகுணங்களெல்லாம்ப்ரகாசித்து, ( வேறொன்றும் நானறியேன்) (தேவுமற்றறியேன்) (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) * நாவினுள்ளுமுள்ளத்துள்ளும் அமர்ந்ததொழிலினுள்ளும் நவின்று ஸகலவிதகைங்கர்யங்களும்செய்துகொண்டுபோராநிற்க ; ஒருநாள் கோவிந்தப்பெருமாள், தம்முடைய திருத்தம்பியாருக்கு ஒரு நல்வார்த்தை சொல்லிப்போகவிட ; தான், ஹவமரளபாதாக்ராந்த தீயாய்க்கிடப்பானேன், (ஏகஸ்ஸ்வாதுநஸுஞ்ஜீத) என்கிறவசநமறியாயோ" என்று சொல்லிப்போகவிட ; அவரும் அத்தைக்கேட்டு, க்ருதாஞ்ஜலிபுடராய் தத்க்ஷணத்திலேபுறப்பட்டுத் திருமலையிலேகோவிந்தப்பெருமாள்புருஷகாரமாகத் திருமலைநம்பிதிருவடிகளிலே அடைவுகெட தண்டன்

ஸமர்ப்பித்து ஸவிநயராயிற்க; திருமலைநம்பியும், (ஸ்நேஹஸம்பந்ய ஸம்ஹவ:) என்னுமாப்போலே அவரையும் மஹாபாபம்விடக்கடாக்ஷித்தருள; "கோவிந்தப்பெருமாள்," "சிறியகோவிந்தப்பெருமாளோடே கூட*தஆயத்தஸ்வரூபஜ்ஞாநத்தையுடையராய்க்கொண்டு எழுந்தருளியிருக்கிறார்கள், அடியேன் இந்நாள்ஸேவித்திருந்து விடைகொண்டேன்" என்று விண்ணப்பம்செய்ய; ராமாநுசனும்போரவுகந்தருளி அந்த ஸ்ரீவைஷ்ணவர்க்கு ஸ்ரீபாததீர்த்தமும் தளிகையும் ப்ரஸாதித்து மிகவும் க்ர்பைபண்ணியருளினார்.

—⁂—

## பெரியநம்பி, உடையவருக்கு இரண்டாமாவர்த்தி த்வயப்பொருளைவிளங்கச்சொல்லியது.

அதின்மற்றைநாள் உடையவர், பெரியநம்பிதிருமாளிகையிலே யெழுந்தருளிப்பெரியநம்பியை தண்டன்ஸமர்ப்பித்து, "அடியேனுக்கு த்வயார்த்தம் நெஞ்சில்படும்படி இன்னமோருருப்ரஸாதித்தருளவேணும்" என்று ப்ரார்த்திக்க; அப்படியே பெரியநம்பியும், ஸஸ்நேஹராய், உபாயோபேயாநுஷ்டாந ப்ரகாசிகையான ஸாரத்வயார்த்தத்தையும் ப்ரஸாதித்தருளுவதாக உபக்ரமித்து, அதுதன்னை, (வேதாம்ஸிதமஹாம் ஹோயோர்ஹரிணாத்வயமுத்தம் । தத்வயம்ஸ்ருணுவக்ஷ்யாமி ஸத்யோமுக்திப்ரதம்ஸுஹம்॥ புராமந்த்ரத்வயம்ப்ரஹ்மக்விஷ்ணுலோகேமஹாபுரே । தஸ்மிந்நநுபுரேலக்ஷ்ம்யை மயாதத்தம்ஸநாதநம்) என்றும் இதின்அவதாரக்ரமத்தையும் (ஸக்யம்தத்வயம்ஸக்ஸிதஷ்வாரோஹவதி,) என்றும்(யோப்ரஹ்மாணம்விதயாதிபூர்வம் யோவைவேதாம்ஸ்ச்வப்ரஹிணோதிதஸ்மை, தம்ஹதேவமாத்மபுத்திப்ரஸாதம் முமுக்ஷுர்வைஸரணமஹம்ப்ரபத்யே) என்றும், (ப்ரஹ்மணேத்வாமஹஸ ஓமித்யாத்மாநம்யுஞ்ஜீத) என்றும், (ஸமஜ்ஜாநயேவிஷ்ணவேதாஸதி) என்றும்இதுதான் கடவல்யுபஷநித்துக்களிலும்இன்னப்ரதேசத்திலே இப்படி ஓதப்பட்டதென்றும், ததுபப்ர்ஹ்மணங்களாய் வேதாந்ததாத்பர்யமான புராணேதிஹாஸபஞ்சராத்ரங்களிலும் இதின்வைபவத்தைப்பாக்கதர்சிப்பித்து, த்வயத்தில்பஞ்சவிம்ஸாக்ஷரமாகவும், ஷட்பதமாகவும், பத்தர்த்தமாகவும்நிஷ்கர்ஷித்து, ஸ்ரீயப்பதியான நாராயணனுடைய சரணவரணத்தையும்தத்விஷயகைங்கர்யத்தையும்பேசினபடியே (தேசகாலாதிநியமமரிமித்ராதிஸோயநம்।ஸ்வரவர்ணாதிதோஷஸ்வபௌநஸ்வரணகம்நது । ப்ராஹ்மணாக்ஷத்ரியாவைஸ்யாஸ்த்ரியஸ்ஸூத்ராஸ்ததேதரா:॥தஸ்யாயிகாரிணஸ்ஸர்வேமமஹக்தோஹவேத்யதி। பஞ்சஸம்ஸ்காரஸம்பந்நாஸ்ஸ்ரத்யாவஞ்ஞோநஸூயகா:॥ ஹக்த்யாபரமயாவிஷ்டாயுக்தாஸ்தஸ்யாயிகாரிண: । பஞ்சவிம்ஸாக்ஷரோமந்த்ர:பதைஷ்ஷட்பிஸ்ஸமந்வித:॥ வாக்யத்வயபரம்ஜ்ஞேயம்மந்த்ரரத்நமநுத்தமம் । ஜமதாஸ்ய

ணீயா ஶ்ரீஸ்ஸம்ஶ்ரிதா ஜகதாம்பதிம்॥ தயாநித்யாநபாயிந்யா ஸம்யுத: பரம: புமாந்। நாராயணோ஽ச்யுத ஶ்ரீமாந்வாத்ஸல்யகுணஸாகர:॥ நாதஸ்ஸுஶீலஸ்ஸுலபஸ்ஸர்வஜ்ஞஶ்ஶக்திமாந்பர: ॥ ஆபத்பந்துஸ்ஸதா மித்ரம்பரிபூர்ணமநோரத:। தயாஸ்ஸுதாப்திஸ்ஸவிதாவீர்யவாந்த்யுதிமாந்வஶீ॥ ப்ரபத்யே சரணௌதஸ்யஶரணம்ஶ்ரேயஸேமம । ஶ்ரீமதே விஷ்ணவேநித்யம்ஸர்வாவஸ்தாஸுஸர்வதா॥ நிர்மமோ நிரஹங்கார: கைங்கர்யம்கரவாண்யஹம்। ஏவமர்த்தம்விதித்வைவபஶ்வாந்மந்த்ரம்ப்ரயோஜயேத்। நாராயணோ஽கிலம்ஹந்தோமாயத்ரீவவராஶுஹா। ஸ்வயம்நாராயணஶ்ஶ்ரீமாந்தேவதாஸமுதாஹ்ருத:) என்றும், (ஸர்வேஶதயிதாநித்யா ஸர்வஜகதாஶ்ரயா । நித்யாநபாயிநீவிஷ்ணோர்ஜகந்மாதோபகாரிணீ॥ தயாஸீநஶ்ஶ்ரியாஸார்த்தம்குணவாந்பரமேஶ்வர: । சரணாகதஸ்ய சரணௌவ்ரஜாம்யஹமகிஞ்சந: । ஶ்ரியாஸீநாயஹரயேகுணதேஹாதிஶாலிநே॥ ஸ்வாமிவித்தாநுரூபேணஶேஷவ்ருத்திம்கரோம்யஹம்) என்றும் கைங்கர்யபர்யந்தமாகசேகரித்து ப்ரமாணங்களாலேமூதலித்து அருளிச்செய்து, ( கைங்கர்யமவிலாவ்ருத்திரித்யேஷஜ்ஞாநஸம்ப்ர:) என்று இப்படித்வயத்துக்கு தாத்பர்யார்த்தமாகையாலே அத்தை அடியொற்றிப்போருகிற ஆழ்வார்கள் திவ்யஸூக்தியிலும் இதினுபதேஶாநுஷ்டாநப்ரகாரத்தை, (நாளும்நந்திருவுடையடிகள்தம் நலங்கழல்வணங்கி) என்றும், (திருநாரணன்றாள்காலம்பெறச்சிந்தித்துய்மினோ) என்றும், (அலர்மேல்மங்கையுறைமார்பா – உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே) என்றும், (என்திருமகள்சேர்மார்வனே) என்றும், (முகில்வண்ணனடியையடைந்தருள்சூடியுய்ந்தவன்) என்றும் (அடிமைசெய்வார்திருமாலுக்கே) என்றும், (ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்) என்றும், (வேங்கடத்துறைவார்க்குநம) என்றும், பின்னையும், (தெய்வத்திருமாமலர்மங்கை தங்குந்திருமார்பனைச்சிந்தையுள்வைத்துமென்பீர்) என்றும், (கறைதங்குவேல்தடங்கண்திருவைமார்பில் கலந்தவன்றாளணைகிற்பீர், என்றும், (தேனுடைக்கமலத்திருவினுக்கரசே- நானுடைத்தவத்தால் திருவடியடைந்தேன்) என்றும், மற்றேலொன்றறியேன்மாயனேயெங்கள்மாதவனே – அற்றேன்வந்தடைந்தேன் அடியேனையாட்கொண்டருள்) என்றும், ( மடமலர்மங்கைதன்னைமார்வகத்திருத்தினனே । கடவுளேகாவளந்தண்பாடியாய்களைகண்நீயே) என்றும், (மாழைமான்மடநோக்கியுன்முன்னிட்டு – ஆழிவண்ணநின்னடியிணையடைந்தேன்) என்றும், (மின்னொத்தநுண்மருங்குல் மெல்லியலைத்திருமார்பில், மன்னத்தான்வைத்துகந்தான்மலரடியையடைநெஞ்சே) என்றும், (சொல்லாய்திருமார்பா உனக்காகித்தொண்டுபட்ட ) என்றும், ( அல்லிமாமலராள்தன்னொடும் அடியேன்கண்டுகொண்டு அல்லல்தீர்ந்தேனே) என்றும், (திருமாலைப்பாட) (திருமாற்கரவு) (சென்றால்குடையாம்) என்றும், (நாரா

யணனே நமக்கேபறைதருவான்) என்கிறத்தை, (கறவைகள், சிற்றஞ் சிறுகாலே) என்றும் இப்படிப்ரகாசிப்பித்து, ஸ்வாசார்யரான ஆளவந்தார்ஸ்ரீஸூக்தியிலும், (த்வத்பாத மூலம் ஶரணம் ப்ரபத்யே) என்று அதுக்குமேலே,(ஸநாதனைவோதியாதவஸ்ரீயா,தயாஸஹாஸீநமநஞ் ஹோமிநீ) என்றுதொடங்கி, (கதாஹமைகாந்திகநித்யகிங்கர:ப்ரஹர்ஷயிஷ்யாமி) என்றுகைங்கர்யமே பலமாகவருளிச்செய்கையாலும், உமக்குப்பெரியபெருமாளும் பெரியபிராட்டியாருமான சேர்த்தியிலே கைங்கர்யமேகர்த்தவ்யமென்றும், (ஸஹ்ராதுஶ்சரணௌகாடம்நிபீட்ய ரகுநந்தந: । ஸீதாமுவாசாதியஶா ராகவஞ்சமஹாவ்ரதம்) என்றும், (பவாம்ஸ்து ஸஹவைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே । அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ்ஸ்வபதஶ்சதே) என்றும் இத்யாதிகளாலே–ராமாநுசனுடையபடிகளையும்தர்சிப்பித்து, தேவரீரும் அந்தராமாநுசனுகையாலே அப்படியே யடிமைசெய்துபோருமென்று அருளிச்செய்ய; இப்படியே அநுஸந்தாநரஹஸ்யத்தினர்த்தத்தை இவர்நெஞ்சிலே அடிப்படுத்தி, இனிமந்த்ரவிதிரஹஸ்யங்களினர்த்தத்தைத் திருக்கோட்டியூர்நம்பிஸந்நிதியிலேகேட்டுக்கொள்ளுமென்று நியமித்தருள;



உடையவர், பெரியநம்பிநியமநப்படி, நம்பெருமாளுக்கு அசேஷசேஷவ்ர்த்திகளும் பண்ணிக்கொண்டிருந்தது.

உடையவரும், நம்பி அருளிச்செய்தத்தைக்கேட்டு, அப்படியே கோயிலிலும்புறப்பட்டுத் திருக்கோட்டியூரேறவெழுந்தருளி நம்பிதிருமாளிகையிலேயெழுந்தருளி நம்பியைஸேவித்து ஸவிநயராய்நிற்க; நம்பியும்,உடையவரைக்கண்டு மிகவும்ஸந்துஷ்டராய்ஸத்கரித்து,"எழுந்தருளினகார்யமேது?" என்று வினவியருள; இவரும், பெரியநம்பி பெரியமந்த்ரார்த்தச்ரவணவ்யாஜமாக ப்ரேரித்து வரவிட்டருளினபடியை விண்ணப்பம்செய்ய; நம்பியும் உடையவரருளிச்செய்தத்தைக்கேட்டு ப்ரீதியுடனே ப்ரஸாதிப்பதாக உபக்ரமித்து, அதுதான் நரநாராயணமுகேந அவதரித்தபடியையும், (ஓமித்யக்ரே வ்யாஹரேத்) இத்யாத்யுபநிஷத்திலேஓதுகிறபடியையும் அதின்வர்ணக்ரமங்களும்,அத்தைவைதிகரானரிஷ்யாதிகள் புராணாதிகளிலேவிருப்பத்துடனேபரக்க சப்தார்த்தநிர்ணயம்பண்ணிக்கொண்டு போந்தபடியையும், ஏதந்மந்த்ரநிஷ்டரான பராங்குசபரகாலாதிகளான ஆழ்வார்கள், ஸ்வஸ்வப்ரபந்தங்களிலே ஸந்ததம் இதினுடையசப்தார்த்தங்களையநுஸந்தித்து ஆதரித்தருளிச்செய்தபடியையும், அவர்களை அடியொற்றி, (மந்த்ரஜ்ஞோமந்த்ரஸக்தஶ்ச) என்னும்படியான ஆசார்யர்களும் இத்தை ஆபத்தநமாக அர்த்தாநுஸந்தாநம்பண்ணிக்கொண்டுபோரும்படியையும், நித்யகைங்கர்யப்ரார்த்தனையே இதில் நிர்ணயகமானவர்த்தமென்றுமருளிச்செய்து, மீளவும் (அகாரவாச்யஸ்யவிஹோரஶேஷ:) (அஹம்ஸநா)

(நவாபிமமகர்த்தாஸ்மிபரவாநஸ்மித஝்யயா।நித்ய०நாராயணாயைவகை०கர்ய०கரவாண்யஹம்।। மந்த்ரார்ய०விஜ்ஞயேஷேவ० ப்ராதருத்யாயயவைஷ்ணவ:) என்கிறபடியே ஸங்க்ரஹமாகவும் ஸவ்யக்தமாகவும்ப்ரஸாதித்து, ப்ரணவாகாரமான விமாநமத்யத்திலே சேஷசாயியாய்க்கண்வளர்ந்தருளுகிற*நலந்திகழ்நாரணனை பெரியபெருமாள்விஷயத்திலே அசேஷசேஷவ்ர்த்திகளும் செய்துபோரும்படி அதிலே இவரைப்ரவணராக்கி ப்ரீதியுடனேயெழுந்தருளியிருக்க ; நம்பியும், இவரைப் பார்த்து, "பின்னையும் சிலவர்த்தங்கேட்கவேணும் என்கிறவபேக்ஷை தோற்றவிராநின்றீர்" என்ன ; உடையவரும், "அப்படியாம், சரமச்லோகங்கேட்கவேணுமென்று சபலனாயிராநின்றேன்" என்ன; நம்பியும், சரமச்லோகார்த்தத்தினுடைய கௌரவத்தையறிவிக்கைக்காகவும் இவருடைய ஆஸ்திக்யாதரபரிக்ஷார்த்தமாகவும் உபேக்ஷித்து, "இத்தசைக்கு ஊரேறப்போம்" என்ன; இவரும் தம்மூரான கோயிலேறவெழுந்தருளினார்.

இப்படி உடையவரும், பதினேழுப்ரகாரம் வளையவளையவெழுந்தருளி, (மோக்ஷபூர்ணகுருபஸக்திகுலலோ யா०ஸவ ஊஸேஷிவாநா஝்யா०காமபிவர்த்தநீமஸமமா० த்ரையஜ்ஞகாஜ்ஞரமாம் । ஸ்ரீமாந் ராஜபயீவகாரஜயயா ராமாநுஜாவ்யோமுநி ஸ்தா०மோக்ஷ०நமரீ० விஹாயஶரண०நாங்யா०புரீ०மந்மஹே) என்கிறபடியே இவரும் பதினெட்டாம்ப்ரகாரம் அருளிச்செய்கிறேமென்று ஆறியிருக்க;*அவ்வருள்பெறுமளவாகில் நில்லாதே, ராமாநுசனும், பேரிழவாளராய்ப் பெரியவாற்றாமையோடேயிருக்க;நம்பியும்,இங்குத்தையில் இவரலாப க்லேசத்தை இங்குநின்றும்போன ஸ்ரீவைஷ்ணவர் விண்ணப்பம்செய்ய ; நம்பியும்கேட்டு இரங்கியருளி, "ஆகில் அவரை, தண்டஜல பவித்ரத்துடன்வந்துகண்டுபோவது" என்று அருள்பாடிட்டு அந்த ஸ்ரீவைஷ்ணவரோடேவரக்காட்டியருள ; அந்தஸ்ரீவைஷ்ணவரும் கோயிலேறவந்து ராமாநுசனைஸேவித்துநம்பியருளிச்செய்தத்தைவிண்ணப்பம்செய்ய;உடையவரும் அத்தைக்கேட்டு அதிப்ரீதராய்ஆநந்தாச்ருவோடே, (பயின்றதரங்கத்திருக்கோட்டி) என்கிறபடியே - பெரியத்வரையுடனேபுறப்பட்டுத் திருக்கோட்டியூரேறவெழுந்தருளி நம்பி திருமாளிகைவாசலிலே திருப்பாவையநுஸந்தாநத்துடனே தண்டன் ஸமர்ப்பித்து, (சீரார்வளையொலிப்பவந்துதிறவாய்மகிழ்ந்து)என்றவநந்தரத்திலே நம்பிகுமாரத்தியான தேவகிப்பிராட்டியார் திருக்காப்பை நீக்க; விஸ்மிதராய்அவரைவிழுந்துஸேவித்து, தேவகீபுத்ரரத்நத்தைப் பெறுகைக்குஅந்ததேவகிப்பிராட்டிபுருஷகாரமாகஸந்நிதியிலேசென்று நம்பியைஸேவித்துநிற்கிறவளவிலே,நம்பியும்இவருடையஅதிகாரத்தைக் கண்டுஉகந்தருளிசபதபூர்வகமாகசரமச்லோகத்தைஸார்த்தமாகப்ரஸாதிக்க;இவரும் கேட்டுக்ர்தார்த்தராய் ஆஸ்திகாக்ரேஸரான ஆழ்வானுக்

கேட்பட அநுமதிகொண்டிருக்கிறவளவிலே, நம்பியும், வாரீர் இளையாழ்வீர்! என்றழைத்தருளி, "உமக்கு ஒரு அர்த்தம்சொல்லுவதாகவிராநின்றோம், இவ்வளவிலே த்ர்ப்தராயிராநின்றீர்" என்றுகேட்க; உடையவரும், "அடியேனல்லேனோ" என்று தம்முடைய அஜ்ஞதையைமுன்னிட்டுக்கொண்டிருந்தார்; நம்பியும், உடையவரைப்பார்த்து, "நெஞ்சிலிருந்தபடிசொல்லீர்"என்ன; அதுக்கு உடையவரும், "தேவரீரருளிச்செய்தவர்த்தத்துக்குமேலே ஒரு அர்த்தமுண்டுஎன்றுகேட்டேனாகில்அவிச்வாஸியாகக்கடவேன், கேளாதேயிருந்தேனாகில் அருளிச்செய்த அர்த்தமொன்றும் நெஞ்சில்பட்டதில்லையாகக்கடவது, விண்ணப்பம்செய்யும் விரகறியாமையாலேஸாபேக்ஷனாய்க்கொண்டிருந்தேனத்தனை"என்ன; நம்பியும், "இப்படியுமொரு அதிகாரியுண்டோ" என்று உகந்து, "வாரீர் இளையாழ்வாரே! மோக்ஷத்தை உமக்கு இங்கேதருகிறோம்" என்று சிலஅர்த்தவிசேஷங்களினாலே காட்டியருளினார். அதாவது - ( க்லேஷணஂயர்மஂஸநாதநம் ) என்று - அவன் ஸநாதநமானஸித்ததர்மமாகையாலே, அநித்யமான ஸாத்யஸாதநதர்மங்களில் கைவைக்கவேண்டா, உமக்கு உபாயஂசத்தில் பரபரப்பைவிட்டு உபேயாஂசமானநித்யகைங்கர்யத்திலே த்வரையுண்டாய்ப்போரும், அவற்றுக்குவிஷயமும் * அறஞ்சுவராகிநின்றவரங்கனார்க்காட்செய்கையே புருஷார்த்தமென்றருளினார்.

ராமாநுசனும் இவ்வர்த்தத்தைக்கேட்டு முக்தரிலேயொருவராம்படி முதிதராயிருக்க; தத்வேளையிலே தாமருளிச்செய்த ஈச்வராபிப்ராயத்துக்கு அநுகுணமாக, ( தஸ்மாத்த்வாமுஷ்யவோஸ்லீஜ்ய ) இத்யாதியாலே-உத்தவசரமச்லோகத்தையும், (பிதரஂமாதரஂதாராந்) இத்யாதிபுராணவசநத்தையும், ( நாயமாத்மா) (நகர்மணாநப்ரஜயாயநேந ) இத்யாதிச்ருதியையும், ( அயபாதகஹீதஸ்த்வம் ) இத்யாதி இதிஹாஸபுராணவசநங்களையும் மற்றும்ப்ரபத்திவிஷயமான ஸ்ரீபாஞ்சராத்ரவசநங்களையும் உதாஹரித்தும், அதுக்குமேலே அவற்றையடியொற்றிப்போருகிற ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்தியான, (நோற்றநோன்பு)(குளித்துமூன்று) (கறவைகள்பின்சென்று) (இல்லறம்) (வரவாறொன்றில்லையால்) ( ஐந்துதீயோடுநின்றுதவஞ்செய்யவேண்டா ) (ஐந்துநெருப்பிடையேநிற்கவும்நீவேண்டா) என்று இத்யாதிபாட்டுக்களையெடுத்துக்காட்டியும், இவரைஇதிலேமிகவும் விச்வஸிக்கப்பண்ணி, *சிஷ்டாக்ரகண்யரான ஆளவந்தார்திருவுள்ளத்தின்படியே விசிஷ்டாத்வைதஸித்தாந்தத்தையும் ப்ரகடிப்பித்து குத்ர்ஷ்டிகளையும் நிராகரித்துக்கொண்டு, கோயிலிலே ஆளவந்தாரைப்போலே நம்தர்சநத்தை நடத்திக்கொண்டுபோருமென்று ஆதரித்தருளிச்செய்தருளினார்.

அநந்தரம்ராமாநுஜாசார்யரும்,ஆசார்யன்ஸந்நிதியிலேசரமார்த்தத்தைலபிக்கையால்வந்தராஜகுலமாஹாத்ம்யத்தையுடையராய்ப் புறப்பட்டு * மாறாயதானவனைவள்ளுகிரால்மார்பிரண்டு, கூறாகக்கீறியகோளரியை, வேறாகவேத்தியிருப்பாரானதாம், * திருக்கோட்டியூர்நாதனை நரசிங்கனை நவின்றேத்துவாராய், ( ஸ்ய-ஞ்ணoஹித்வாஸ-ராரேர்ஹ-ஜ ஸ்ரியுமளoகூதிணேoஸேஸ்ஜஹீத்வா ஸ்வாங்மேஸoஸ்யாப்யஹஸ்தைர் நிஸிதநவமுவைர்ஷாரயந்நுத்தரேஸு:) என்னும்படியான தெக்காழ்வார்ஸந்நிதியிலேதிரண்டிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் ச்லோகமந்த்ரத்தை ப்ரஸாதித்து அவர்கள்சோகத்தைதீர்த்தருளினார். (அன்றைவர்தெய்வத்தேரினில்செப்பியகீதை) என்றும், (மாயனன்றோதிய வாக்கு) என்றும் அருளிச்செய்த அந்தராமாநுசன், ஒருவன்சோகந்தீர ஒருச்லோகத்தை * அங்கொருகாலிங்கொருகாலாய் அந்தரத்திலிருந்துபதேசித்து அவனதிகாரமாந்த்யத்தாலேபின்பு “பதண்பதண்” என்றான். அதுதான் ஒருத்திதலையில்மயிர்முடிப்பிக்கைக்காகவிறே; இந்தராமாநுசன், எல்லாருடையவும் சோகம்போகப்பாரிலே பதஸ்தராயிருந்து,ஸர்வரும் அதிகாரிகளாம்படி உபதேசித்துத் திருத்தித் தலைவணங்கும்படிபண்ணி, ( காம்பறத்தலைசிரைத்து) என்னும்படி அவர்கள் தலையிற்சும்மையையும்கழித்துத் தாமும் ப்ரியதராய்நிர்ப்பரராயருளினாரிறே.

—※—

திருக்கோட்டியூர்நம்பிக்கும் உடையவருக்கும் நடந்தஸம்வாதமும்,
“ எம்பெருமானார்” என்கிற திருநாமம்சாத்தப்பெற்றதும்.

பின்பு திருக்கோட்டியூர்நம்பியும், இவர்தூளிதாநமாகஎல்லார்க்குமிரங்கி ப்ரஸாதித்தருளினபடியைக்கேட்டருளி, “இவர் ஸ்வபாவத்தை சோதிக்கைக்காகஇவரையழைத்தருளி“நீர்,இப்படிபரமரஹஸ்யத்தைப் பலர்செவிப்படுத்திவெளியிட்டீர்,இப்படி ஆசார்யாஜ்ஞாதிலங்கநம்பண்ணினாருக்குபலமென்”என்ன;ராமாநுசனும்,“நரகமேபலம்”என்ன;நம்பியும், “ இப்படியறிந்திருந்து சொல்லுவானென்” என்ன ; அதுக்கு உடையவரும், “ அடியேனொருவனுமன்றோ நரகம்புகுகிறேன், இவ்வாத்மகோடிகளெல்லாம் உஜ்ஜீவிக்குமே” என்ன ; நம்பியும், “ நம்பெருமாள்“‘நமக்காவாரைநாமே தேடிக்கொள்ளுகிறோம்,என்று சேரபாண்டியனில் அருளிச்செய்தஅவரோநீர்” என்று அருளிச்செய்து, “ எம்பெருமானார்” என்று திருநாமஞ்சாத்தி, “ எப்போதும் எம்பெருமானார்தர்சநமாயே நடக்கும்” என்று எல்லார்க்குமருளிச்செய்தருளினார்.

—※—

## கூரத்தாழ்வான், ஒருமாஸமுபவாஸமிருந்து உடையவரிடத்தில் சரமச்லோகார்த்தம்கேட்டது.

எம்பெருமானாரும், * மாயனன்றோதியவாக்கதனைப்பெற்று யதார்த்தஜ்ஞாநத்தையுடையராய்க் கோயிலுக்கெழுந்தருளிப் பெரியபெருமாளைஸேவித்து மீண்டும் மடமேயெழுந்தருள; கூரத்தாழ்வானெழுந்திருந்து ராமாநுசன்திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து நிற்க; ராமாநுசனும் ஆழ்வானைப்பார்த்து, "ஆளவந்தார் விசேஷகடாக்ஷம் பண்ணி பேரருளாளரைநோக்கிப்ரபத்திபண்ணினதுக்கீடாக, நம்பி, நம்மை வாழ்வித்தருளினார் கண்டீர்" என்றருளிச்செய்து, "உமக்குமுள்பட சுச்ரூஷைகொண்டு அத்யவஸாயமறிந்துசொல்லுமென்று நியமித்தருளினார்" என்ன; ஆழ்வானும் இத்தைக்கேட்டு ஒருஸம்வத்ஸரம் இச்சரீரத்துக்கு நிலையுண்டோவில்லையோ என்று விசாரித்தருளி, பெற்றாலல்லதுதரியாத ஆர்த்தியாலே "ஆசார்யன்திருமாளிகைவாசலிலே ஒருமாஸமுபவாஸித்தால் ஸம்வத்ஸரசுச்ரூஷாபலம்" என்று சாஸ்த்ரஞ்சொல்லுகையாலே மாஸோபவாஸம்பண்ணி அவ்வர்த்தத்தை லபித்தருளினார்.

—❧❧✱❧❧—

## முதலியாண்டான், திருக்கோட்டியூர்நம்பிஸந்நிதியிலே ஆறுமாஸம் காத்திருந்து, அவர்நியமநத்தினாலே உடையவரிடத்தில் சரமச்லோகார்த்தம்லபித்தது.

பின்பு முதலியாண்டானும், உடையவர்திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்துஸவிநயராய்,"அடியேனுக்கும்இந்தபரமரஹஸ்யார்த்தத்தை ப்ரஸாதித்தருளவேணும்" என்றுவிண்ணப்பம்செய்ய; ராமாநுசனும், ஆழ்வானொருவர்க்குமேயாய்த்து நம்பிஸ்ரீபாதத்திலேவிண்ணப்பம்செய்துகொண்டது,ஆகையால் நீரும் அங்கேபோய்க்கேளும்"என்றருளிச்செய்ய;அநந்தரம் முதலியாண்டானும், உடையவரருளிச்செய்தத்தைக் கேட்டுத்திருக்கோட்டியூரேறவெழுந்தருளிநம்பிஸ்ரீபாதத்திலேதண்டன் ஸமர்ப்பித்துக்கொண்டு ஆறுமாஸம்நின்றவிடத்திலும் நம்பி ஒன்றுமருளிச்செய்யாமலிருக்க; பின்பு ஒருநாள் நம்பியைஸேவித்து முதலியாண்டானும் "அடியேன்வந்துநிற்கிறகாரியத்தைத் திருவுள்ளம்பற்றியருளவேணும்" என்று விண்ணப்பம்செய்ய; பின்பு முதலியாண்டானைப்பார்த்து நம்பியருளிச்செய்தபடி ;– (வித்யாமதோ தநமதஸ்த்ருதீயோபிஜநோமத: । ஏதேமதாவலிப்தாநாமேதஏவஸதாம்தமா: ) என்கிற ச்லோகத்தையருளிச்செய்து, "இச்ச்லோகத்துக்குப் பொருள்போமோ, இம்மூன்றுதத்துக்கும் பிழைத்தாயாகில் எம்பெருமானார்தாமே ப்ரஸாதித்தருளுவர், போம்" என்று தம்முடைய திருவடிகளை இவருடைய உத்தமாங்கத்திலேவைத்து விடைகொடுத்தருளினார்.

அநந்தரம் இவரும், சமதமாதிகுணங்களை மிகவுடையராய்க்கொண்டு கோயிலேறவெழுந்தருளி எம்பெருமானார்ஸ்ரீபாதத்திலே தெண்டன்ஸமர்ப்பித்து ஸவிநயராயிருக்க ; எம்பெருமானாரும், ஸ்ரீபாதத்தில் முதலிகளைப்பார்த்து, "ஆண்டான், நம்பிஸந்நிதியிலே ஸ்வரூபசிக்ஷை பெற்றுவந்த வேஷமிருந்தபடிபாருங்கோள்" என்று அருளிச்செய்து, கூரத்தாழ்வானுக்கும் முதலியாண்டானுக்கும் ஸர்வகுஹ்யதமமான சரமச்லோகார்த்தத்தை ப்ரஸாதித்தருளி, இப்போதன்றோ நமக்கு த்ண்டும்பவித்ரமும்கைபுகுந்தது என்றருளிச்செய்தருளினார்.

---

உடையவர், திருக்கோட்டியூர்நம்பிநியமநப்படி திருமாலையாண்டான் ஸந்நிதியிலே திருவாய்மொழிக்கர்த்தம் கேட்கும்போது (அறியாக்காலத்துள்ளே) என்கிறபாட்டுக்கு இவ்விருவருக்கும்நடந்த ஸம்வாதமும் பின்பு முழுதும் ஸேவித்து சாற்றியதும்.

அநந்தரம் சிலநாள்கழிந்தவாறே திருக்கோட்டியூர்நம்பி கோயிலுக்கெழுந்தருளி நம்பெருமாளைஸேவித்துப்புறப்பட்டுத் திருமாலையாண்டானையழைத்துக்கொண்டு எம்பெருமானார்மடமேயெழுந்தருள ; எம்பெருமானாரும், நம்பிஎழுந்தருளினத்தைக்கண்டு தண்டன்ஸமர்ப்பிக்க; நம்பியும், உடையவரைப்பார்த்து, "தேவரீர், திருமாலையாண்டான்பக்கலிலே திருவாய்மொழிக்கு அர்த்தங்கேட்டருளவேணும்" என்றருளிச்செய்து, உடையவரைத் திருமாலையாண்டான்திருக்கையிலேகாட்டிக்கொடுத்து நம்பியும் திருக்கோட்டியூரேறவெழுந்தருளினார். பின்பு திருமாலையாண்டானும் நம்பியருளிச்செய்தபடியே திருவாய்மொழிக்கு அர்த்தம்நடத்தாநிற்க ; பாட்டுக்கள்தோறும் "இங்ஙனே இப்படியாநலாமோ" என்று எம்பெருமானாருளிச்செய்ய ; இத்தைக்கேட்டு, "இது விச்வாமித்ரஸ்ருஷ்டியாயிருக்கிறது, ஆளவந்தாரருளிச்செய்யக்கேட்டறியேன்" என்று திருமாலையாண்டானருளிச்செய்ய ; இங்ஙனே நடவாநிற்கச்செய்தே, (அறியாக்காலத்துள்ளே) என்கிறபாட்டுக்கு – "அறிவுநடையாடாததசையிலே ஸம்பந்தஜ்ஞாநத்தைப்பிறப்பித்து, பிறந்தஜ்ஞாநத்தையழிக்கக்கடவதான தேஹஸம்பந்தத்தோடே பின்னையும்வைத்தாய் என்கிற இழவாலேயருளிச்செய்கிறார்"என்று திருமாலையாண்டானருளிச்செய்ய; இவ்வர்த்தத்தை எம்பெருமானார்கேட்டருளி, "'முன்னில்பாட்டுக்களும் பின்னில்பாட்டுக்களும் பெரியப்ரீதியோடே நடவாநிற்க, நடுவே அப்ரீதிதோற்றச்சொல்லுமதுசேராது, ஆனபின்பு அங்ஙனேயாமித்தனை ;-

" 'அறியாமாமாயத்தடியேனை—அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் புசெய்வித்துவைத்தாயால்' என்று இத்தையும் உபகாரஸ்ம்ருதியாகக்கொள்ளக்குறையென்" என்று எம்பெருமானார் விசேஷார்த்தமருளிச்செய்ய; இத்தைக்கேட்டு, "இதுவும் விச்வாமித்ரஸ்ர்ஷ்டியாயிருக்கிறது, ஆளவந்தாரருளிச்செய்யக்கேட்டறியேன்" என்று திருமாலையாண்டான், திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச்செய்கைதவிர்ந்தார்.

பின்பு இச்செய்தியைத் திருக்கோட்டியூர்நம்பிகேட்டுக்கோயிலிலேயெழுந்தருளித் திருமாலையாண்டான்திருமாளிகையிலேயெழுந்தருளித் திருமாலையாண்டானைப்பார்த்து, "திருவாய்மொழிக்கு அர்த்தம் நடத்தாமல் தவிருவானென்" என்றுகேட்டருள ; அதுக்கு ஆண்டானும், "ஆளவந்தாரருளிச்செய்ததாக அடியேன்கேட்டவர்த்தமொழிய இவர்சிலவர்த்தங்களை விச்வாமித்ரஸ்ர்ஷ்டி பண்ணுகையாலேதவிர்ந்தேன்" என்ன ; நம்பியும், "அவர்பண்ணின விச்வாமித்ர ஸ்ர்ஷ்டியேது" என்ன ; ஆண்டானும், " 'அறியாக்காலத்துள்ளே' என்கிறபாட்டை உபகாரஸ்ம்ருதியாகவேணும் என்று உடையவரருளிச்செய்கிறார்" என்ன ; "அதுவும் ஆளவந்தாரருளிச்செய்ய நான்கேட்டிருக்கிறேன்" என்று நம்பியருளிச்செய்து, "ஸாந்தீபினிபக்கலிலே க்ர்ஷ்ணன் அத்யயநம் பண்ணினாப்போலேகாணும் உம்முடையபக்கலிலே உடையவர்திருவாய்மொழிகேட்கிறது, ஆகையாலே ஆளவந்தார் திருவுள்ளத்திலிருக்கிற அர்த்தமொழியவேறு இவர்க்குப்ரகாசியாது என்றிரும், நீர் இவர்க்கு அஜ்ஞாதஜ்ஞாபநம்பண்ணுகிறோமென்றிராதேகொள்ளும்" என்றருளிச்செய்தருளினார். அநந்தரம், திருக்கோட்டியூர்நம்பியும், திருமாலையாண்டானும் எம்பெருமானார்மடமேயெழுந்தருளித் திருவாய்மொழிவிட்டதறுவாய்தொடங்கிப்பலநாளுமாகஸாதிச்சு இவர்க்கு, சாற்றும் என்று அருளிச்செய்தருளினார்.

—❦—

உடையவர், ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையர்ஸந்நிதியிலே ஆளவந்தார்ஸ்தோத்ரம்முதலியவற்றுக்கு அர்த்தங்களையும், "லக்ஷ்மணமுநி" என்கிற திருநாமத்தையும் லபித்தது.

பின்பு உடையவரும் ப்ரீதராயெழுந்தருளியிருக்கிறவளவிலே, உடையவரைப்பார்த்து, இன்னமும் சிலவர்த்தவிசேஷம் ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையர்ஸந்நிதியிலேயுண்டு, அங்கேயெழுந்தருளி அவ்வர்த்தங்கேட்டருளவேணும்" என்று அருளிச்செய்தருளித் திருக்கோட்டியூர்நம்பியும் மீண்டு ஊரேறவெழுந்தருளினார். பின்பு உடையவரும் அவ்வர்த்தம் லபிக்கைக்காக அரையருக்கு ஆறுமாஸம்பாலமுது காய்ச்சிஸமர்ப்பித்து நம்அரையர்திருமேனிக்கநுரூபமாகமஞ்சள்காப்பு

சாத்தியும்போருகிறகாலத்திலே ஒருநாள் மஞ்சள்காப்புப்பாங்காக விராதபடியாலே திருமுகமண்டலத்தின் விகாரத்திலேயறிந்து பாத்ரத்தை அப்பாலேவைத்து மஞ்சள்காப்புப்பாங்காகச்சாத்தித் திருமஞ்சநம்பண்ணுவித்தருள; பின்பு அரையரும் ப்ரீதராய், "என்னுடையஸர்வஸ்வத்தையும் கைக்கொள்ளவோ இப்படி செய்தருளினீர்" என்று உகந்து, "உமக்கொருபரமரஹஸ்யம்சொல்லுகிறோம்வாரும்" என்று * தேவுமற்றறியாத மதுரகவிகளைப்போலேயிருக்கிற வுமக்கு, (గురురేవపరంబ్రహ్మగురురేవపరాగతిః । గురురేవపరావిద్యా గురురేవపరంధనమ్॥ గురురేవపరఃకామోగురురేవపరాయణమ్ । యస్మాత్తదుపదేష్టాసౌతస్మాద్గురుతరోగురుః) (குருரேவபரம்ப்ரஹ்ம குருரேவபராகதிః । குருரேவபராவித்யா குருரேவபரந்தநம்॥ குருரேவபரஃகாமோ குருரேவபராயணம் । யஸ்மாத்ததுபதேஷ்டாஸௌதஸ்மாத்குருதரோகுருః) என்றும், என்னைத்தீமநங்கெடுத்து * அறியாதனவறிவித்த ஆசார்யனே உபாயோபேயம் என்று விச்வஸித்திரும்–" * என்று இந்த பரமரஹஸ்யத்தையுமருளிச்செய்து, ஆளவந்தார்ஸ்தோத்ரத்துக்கும் சதுச்லோகிக்கும் அர்த்தமருளிச்செய்து, அநந்தரம் த்வயம், எல்லாரஹஸ்யார்த்தங்களையும் ப்ரஸாதித்தருளி, "லக்ஷ்மணமுநி" என்று திருநாமமும்சாத்தியருளினார்.

---

முன்புள்ளார் உடையவருக்கு ஆசார்யர்களாகியும், பின்புள்ளார் சிஷ்யர்களாகியும் உஜ்ஜீவித்தார்களென்பது.

" பெரியநம்பிஸ்ரீபாதத்திலே ஆச்ரயித்தபோதே ஸ்வரூபஸித்தியுண்டாயிருக்கச்செய்தே உடையவர், பலர்ஸ்ரீபாதங்களை ஆச்ரயிக்கைக்கடியென்? அவர்கள்தான் மேல்விழுந்து அர்த்தங்களை உபதேசிக்கைக்கடியென்? என்னில்; – ஸார்வபௌமனானராஜா புத்ரவாத்ஸல்யத்தாலே பலவிடங்களிலேயும் மந்த்ரிகளிடங்களிலேயும் நிதியைவைக்குமாப்போலே ஆளவந்தாரும் உடையவருக்காக இவர்களிடங்களிலே ஓரோ அர்த்தவிசேஷங்களை அருளிச்செய்துவைக்கையாலே; ஆகையால் உடையவரும் ஆளவந்தார்ஸ்ரீபாதத்திலே ஸேவியாத இழவுதீர இவர்கள்ஸ்ரீபாதத்திலேஸேவித்து இவ்வர்த்தங்களைப்பெற்று இழவுதீர்ந்தார். இவ்வாசார்யர்கள், " 'இம்மஹாநுபாவன், தர்சநத்திலேபுகுந்தாராகிலோ, என்று ஆளவந்தாரருளிச்செய்த மஹாநுபாவனன்றோ, ஆகையால் சிஷ்யனாகிலுமாம், ஆசார்யனாகிலுமாம், விலக்ஷண ஸம்பந்தமேவேண்டுவது" என்று மேல்விழுந்தருளிச்செய்தார்கள்; முன்புள்ள ஆசார்யர்கள் இவருக்கு ஆசார்யர்களாய்ப் பேறுபெற்றார்கள்; பின்புள்ள ஆசார்யர்கள் இவருக்கு சிஷ்யர்களாய் ஸ்வரூபம் பெற்றார்கள். ஆகையாலே ஓராபரணத்தின் நடுவேமாணிக்கங்கிடந்து அவ்வாபரணத்தை சோபிதமாக்குமாப்போலே, * இடையே யிராமாநுசமுனியாய் விளங்கியருளினார்.

---

## உடையவர், கொங்குப்பிராட்டிக்கு த்வயத்தையுபதேசித்து, திருவடிநிலைகளை ப்ரஸாதித்தருளினது.

அக்காலத்திலேமேற்கேகொங்குநாட்டிலே வர்ஷமின்றிக்கேயிருக்கையாலே கொங்குப்பிராட்டி,பர்த்தாவும்தானுமாய்க்கோயிலிலேவந்து த்ரிவிக்ரமன்திருவீதியிலேஒருதிருமாளிகையில்மச்சிலேயிருக்கையாயிருக்க;அப்போது எம்பெருமானர், ஏழகம்மாதுகரம்பண்ணி அமுதுசெய்தருளுவர் ; ஒருநாள் அந்தவகத்திலே மாதுகரத்துக்கென்று எழுந்தருள ; அந்தக்கொங்குப்பிராட்டியும் எம்பெருமானர் எழுந்தருளினதைக்கண்டு மச்சில்நின்றுமிழ்ந்து இடைகழியிலேநின்றுதகைய; எம்பெருமானரும், சிரித்து "இதுவென்பெண்ணே" என்று கேட்டருள ; கொங்குப்பிராட்டியும், "உம்மை ராஜாக்களும் பட்டணத்து முதலிகளும்தண்டனிடாநின்ருர்கள், நீர்மாதுகரம்பண்ணுநின்றீர்,இதுக்குப் பொருளேது" என்றுகேட்க ; அதுக்கு உடையவரும், "அவர்களுக்கு பகவத்விஷயத்திலே சிலவார்த்தை சொல்லுகையாலே காண்" என்ன ; அவளும், "அந்தவார்த்தையையடியேனுக்கு மருளிச்செய்யவேணும்" என்று திருவடிகளிலேஸேவித்து ப்ரார்த்திக்க; அப்போது உடையவரும் த்வயத்தை அவளுக்கு ப்ரஸாதித்தருளினர். பின்பு சிலநாள்கழிந்தவாறே தங்கள்தேசம்வர்ஷமுண்டாய்த்தெளிந்து தங்கள் நாடேறப்போகிறபோது, முன்பு உடையவரருளிச்செய்த நல்வார்த்தைமறக்க ; மீளவும் எம்பெருமானரை ஸேவிக்கப்பெற்றிலேனே என்றிருக்கச்செய்தே மீளவும் எம்பெருமானரங்கேயெழுந்தருள ; கொங்குப்பிராட்டியும் உடையவர்திருவடிகளிலேஸேவித்து உடையவரைப்பார்த்து, "முன்பு தேவரீரருளிச்செய்த நல்வார்த்தையைமறந்தேன், மீளவும் அத்தை என்னெஞ்சில்படும்படி அருளிச்செய்தெழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம்செய்ய; பின்பு உடையவரும் அப்படியே நெஞ்சில்படும்படி த்வயத்தை யருளிச்செய்தெழுந்தருளப்புக்கவாறே, "பின்னையும் அடியேனுக்கு ஆத்மரக்ஷையாக ஏதேனுமொன்றுதந்தருளவேணும் என்று விண்ணப்பம்செய்ய;அப்போது தாம் சாத்தியிருந்த ஸ்ரீபாதரக்ஷையை ப்ரஸாதித்தெழுந்தருளினர்; அவர்களும் அந்நாளேபோந்தார்கள்.

உடையவர், நம்பெருமாளுக்கு ஸ்தலத்தாரை ஆசாரமாக உபசரிக்கும்படி கட்டளையிட்டதை ஸஹியாதவொருவர், விஷம்கலந்த மாதுகரம் ஸாதிக்கும்படிசெய்ய; அதைத் திருக்காவேரியிலே கரைத்துவிட்டு ஒருமாஸம் உபவாஸித்திருக்க; திருக்கோட்டியூர்நம்பியெழுந்தருளி, கிடாம்பியாச்சானைத் தளிகைப்பண்ணி பிக்ஷைஸாதிக்கும்படி நியமித்தருளியது.

அக்காலத்திலே கோயில்ஸ்தாநத்துறைக்கு ஆசாரங்களைக்கற்பித்து ஸ்தாநத்துறையை நெருக்கிக்கொண்டுபோர; அவ்வளவிலேஸ்தாநத்துறைக்கெல்லாம் ப்ரதாநரானவுத்தமநம்பிஸம்பந்திகளிலேயொருவர், உடையவர் மாதுகரத்துக்கெழுந்தருளுகிற க்ரஹஸ்தஸ்ரீவைஷ்ணவர்திருமாளிகையிலே நூறுஐம்பதுபொன் செலவழித்து இவர்க்கு விஷமிச்ராந்நத்தைப்ரயோகிக்கும்படி அமர்த்துவிக்க; அந்த ஸ்ரீவைஷ்ணவரும் ஸ்வஸ்த்ரீயைப்ரேரிக்க; அவளும் உடையவருடைய ப்ரபாவமெல்லாமறிந்தவளாகையாலே "மாட்டோம்" என்ன; அந்த ஸ்ரீவைஷ்ணவரும் அவளைநிர்ப்பந்திக்க; அவளும் மாதுகரத்தைமறைத்துஸமர்ப்பித்து கண்ணும்கண்ணீருமாய்த் திருவடிகளிலே தண்டனிட்டு பீதையாய்ப்போக; உடையவரும் அதறிந்தருளி, ஸகராந்நத்தை ஸாகரகாமிநியான திருக்காவேரியிலேகரைத்துப்பொகட்டுமடத்திலேயெழுந்தருளி ஒருமாஸம் உபவஸ்தராயிருக்க; இத்தைத்திருக்கோட்டியூர்நம்பிகேட்டருளி, அப்போதேபுறப்பட்டுக் கோயிலுக்கெழுந்தருளாநிற்கச்செய்தே மத்யாஹ்நத்தில் உச்சிவேளையிலே தென்திருக்காவேரியிலே யெழுந்தருளுகிறபோது, உடையவரும் நம்பி எழுந்தருளுகிறசெய்திகேட்டருளி, தாமும்ஸ்ரீபாதத்துமுதலிகளுமாகஎதிரேயெழுந்தருளித் திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்துக்கொண்டுகிடக்க; நம்பியும் உடையவரை எழுந்திருக்கச்சொல்லாமலிருக்க; கிடாம்பியாச்சான் நம்பியைப்பார்த்து, "இதென்ன சிஷ்யாசார்யக்ரமந்தான், கருமுகைமாலையை வெய்யிலிலேபோடுவார்களோ, சோழியா! ஸந்யாஸியைக்கொல்லப்பார்க்கிறீரோ" என்றுபரிந்துஎடுக்க; நம்பியும், "வாரீர் உம்மைக்காணும்தேடுகிறோம், திருமேனிக்குப் பரிவரையறியவேணுமென்றுகும் நாம் உடையவரை யெழுந்திருக்கச்சொல்லாமலிருந்தது, ஆகையால் திருமேனிக்குப்பரிவர்நீர், இன்றுதொடங்கி நீர் தளிகைக்குப்பண்ணி ஏகமாதுகரமாகஸமர்ப்பியும்" என்று அருளிச்செய்து மீண்டு ஊரேறவெழுந்தருளினர்; கிடாம்பியாச்சானும், நம்பியருளிச்செய்தபடியே தப்பாமல் உடையவருக்கு உகப்பாக அந்தகைங்கர்யம்பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

—※—

14-2-86.

### யஜ்ஞமூர்த்தியென்கிற மஹாவித்வான் உடையவரிடத்தில் தர்க்கவாதத்தில்தோற்று அவர்திருவடிகளிலே ஆச்ரயித்து "அருளாளப்பெருமாளெம்பெருமானார்" என்னும் பெயர்பெற்றது.

அக்காலத்திலே யஜ்ஞமூர்த்தியென்கிற மஹாபெரியவித்வானனவொருப்ராஹ்மணன், கங்காஸ்நாநத்துக்குப்போய் கங்கையில்ஸ்நாநம் பண்ணி, அவ்விடத்திலே மாயாவாதஸந்ந்யாஸாச்ரமத்தையும் பரிக்ரஹித்து, அங்குள்ளவித்வாங்களேயும்தர்க்கம்பண்ணிஜயித்திராநிற்க; அந்த யஜ்ஞமூர்த்தியும், அவ்விடத்திலேஉடையவர்வைபவங்களைச் சொல்லக் கேட்டு, "நாம்அங்கேபோய்உடையவருடனேதர்க்கிக்கக்கடவோம்" என்று ஸகலசாஸ்த்ரபுஸ்தகபாரங்களையும் வண்டிகளிலே யேற்றிக்கொண்டு பஹுசிஷ்யஸம்பத்துடனே அதித்வரையோடே வழியிலேயுண்டான வித்வாங்களையும்ஜயித்து பயணத்வரையிலேகோயிலிலேவந்து உடையவர்மடத்திலேவந்துஸேவித்து உடையவரைப்பார்த்து, "தேவரீர் நமக்கு தர்க்கபிக்ஷையிடவேணும்" என்ன; உடையவரும், "அப்படியேசெய்கிறோம்" "நீதோற்றாயாகில் என்செய்கிறாய்" என்ன; அவனும், "நான்தோற்றேனாகில் என்னுடையஸித்தாந்தத்தைவிட்டு உம்முடையஸித்தாந்தத்திலேபுகுந்து உம்முடைய செருப்பையுமெடுத்துத் திரியக்கடவேன்" என்றுப்ரதிஜ்ஞைபண்ண; அந்தவார்த்தையைக்கேட்டு உடையவரும், "நான்தோற்றேனாகில் "தோற்றேனென்கிறேன், அதுவுமன்றியே க்ரந்தஸந்ந்யாஸம்பண்ணக்கடவேன்" என்ன; இப்படியே பதினெட்டுநாளாகஅவதியிட்டு, பதினேழுநாள் ஒருவருக்கொருவர் மத்தவாரணம்பொருமாப்போலேதர்க்கிக்க; பின்பு உடையவரும் அவனை ஜயிக்கப்போகாதபடியாலே தோற்குமளவாகச்செல்லாநிற்க; உடையவரும், வ்யாகுலாந்தஃகரணராய் வடவாற்றிலேநீராடியருளி மடத்திலேயெழுந்தருளித் திருமண்காப்புச்சாத்தியருளித் தம்முடையதிருவாராதநமான பேரருளாளரைத் திருவாரதநம்செய்தருளி அமுதுசெய்தருளப்பண்ணி, அநந்தரம் தம்முடைய திருவாராதநமான பேரருளாளரைக்குறித்து, "ஆழ்வார்கள்தொடங்கி ஆளவந்தாரளவாக ஸுப்ரதிஷ்டிதமாய்வருகிறதர்சநம்அடியேன்தோன்றித்தோற்கக்கடவதோ, இத்தனைநாளும் தேவரீருடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை ஸத்யமென்னும் ப்ரமாணத்தைநடத்திக்கொண்டுபோந்தருளிற்று, இப்போது ஒரு (க) ம்ர்ஷாவாதியைக்கொண்டு என்னுடையகாலத்திலேஎல்லாப்ப்ரமாணங்களையும்அழித்துப்பொகட்டுலீலைகொண்டருளத் திருவுள்ளமாகில் அப்படியேசெய்தருள" என்று வெறுத்தருளிச்செய்து அமுதுசெய்தருளாமல் கண்வளர்ந்தருள; பேரருளாளரும்

(க) ம்ர்ஷாவாதி - பொய்சொல்லுமவன்.

இவர்ஸ்வப்நத்திலேயெழுந்தருளி, "வாரீர் இளையாழ்வீர் !, உமக்கு ஸமர்த்தனாயிருப்பானொருசிஷ்யனையுண்டாக்கித்தந்தோம், உம்முடைய பரமாசார்யரான ஆளவந்தாரருளிச்செய்த மாயாவாதகண்டநத்திலே இன்னயுக்திசொல்லி அவனைஜயியும்" என்று அருளிச்செய்ய; உடையவரும் அத்தைத்திருவுள்ளத்திலேவைத்துக்கொண்டிருந்து மற்றை நாள்விடிவோறேயெழுந்திருந்து மஹாஸந்தோஷத்துடனே அநுஷ்டாநம்செய்தருளித் திருமண்காப்புச்சாத்தியருளி தத்கோஷ்டியிலே யெழுந்தருளி அவனைவாதத்துக்கழைக்க ; அவனும் வாதத்துக்குவந்திருக்கிறவளவிலே உடையவரும் தர்க்கிக்கத்தொடங்கி மாயாவாத ஸித்தாந்தத்திலே "ப்ரஹ்மம்நிர்க்குணம்"என்கையாலே அந்தப்ரஹ்மத்துக்குஸத்யத்வாதிகுணங்களைச்சொல்லுகிறவேதவாக்யங்கள்ப்ரமாணமாய்விடும்,அவித்யாதிரோஹிதமானப்ரஹ்மத்துக்கு குணமுண்டாகையாலே ஸகுணச்ருதிக்கு விரோதமில்லையென்றாயாகில் அதுகூடாது, (జ్ఞానరూపంపరంబ్రహ్మతన్నివర్త్యంమృషాత్మకమ్ । అజ్ఞానఞ్చేత్తిరస్కుర్యాత్కఃప్రభుస్తన్నివర్తనే ) ( ஜ்ஞாநரூபம்பரம்ப்ரஹ்மதந்நிவர்த்யம்ம்ருஷாத்மகம் । அஜ்ஞாநஞ்சேத்திரஸ்குர்யாத்க:ப்ரபுஸ்தந்நிவர்த்தநே ) என்றும்சொல்லுகிறபடியே - ஜ்ஞாநஸ்வரூபமான பரப்ரஹ்மத்தை அஜ்ஞாநரூபமான அவித்யைமறைத்ததாகில் அந்த அவித்யைக்கு நாசமில்லாதபடியாலே அதுநித்யமாய்விடும், அப்படியானால் தோஷமுண்டோ என்றாயாகில், அவித்யையென்றும் ப்ரஹ்மமென்றும் இரண்டுவஸ்துவுண்டாகையாலே அத்வைதமென்கிற மஹாகஜம் த்வைதமென்கிற ஆழங்கால்சேற்றிலேஅமிழ்ந்தது"என்று இத்யாத்யுக்திகளினாலே அவனைஜயித்தருள ; யஜ்ஞமூர்த்தியும், இவர்க்குத்தோற்று ஏகதண்டத்தைமுறித்துப்பொகட்டு,"இனி அடியேனையங்கீகரித்தருளவேணும்" என்று திருவடிகளிலேவிழுந்துஸேவித்துஸவிநயராய் விண்ணப்பஞ்செய்ய;உடையவரும்"இவர்சிகாயஜ்ஞோபவீதத்யாகம்பண்ணினதுக்கு ப்ராயச்சித்தம்பண்ணவேணும்" என்றருளிச்செய்ய ; அவரும்ஸம்மதித்திருக்க;உடையவரும், (హీనోయజ్ఞోపవీతేనయతిస్స్యాద్ధ్యానభిక్షుకః । తస్యక్రియానిష్ఫలాస్స్యుః ప్రాయశ్చిత్తంవిధీయతే॥గాయత్రీసహితాంచైవ ప్రాజాపత్యాష్టకంచరేత్ । పునస్సంస్కారమాహృత్యధార్యంయజ్ఞోపవీతకమ్)(ஹீநோயஜ்ஞோபவீதேந யதிஸ்யாத்த்யாநபிக்ஷுக: । தஸ்யக்ரியாநிஷ்பலாஸ்யு:ப்ராயஶ்சித்தம் விதீயதே॥ காயத்ரீஸஹிதாசைவப்ராஜாபத்யாஷ்டகஞ்சரேத் । புநஸ்ஸம்ஸ்காரமாஹ்ருத்யதார்யம்யஜ்ஞோபவீதகம்) என்கிற சாஸ்த்ரப்ரகாரத்திலே ப்ராயச்சித்தமும்பண்ணிவைத்து சௌளோபநயநாதிகளையும்பண்ணிவைத்து, பின்பு (ప్రధానంతాపసంస్కారం వైష్ణవంమునిభిస్స్మృతమ్ । సర్వాశ్రమేషుసర్వేషాం స్త్రీణాఞ్చద్విజసత్తమ) (ப்ரதாநம்தாபஸம்ஸ்காரம்வைஷ்ணவம்முநிபிஸ்ஸ்ம்ருதம் । ஸர்வாச்ரமேஷுஸர்வேஷாம் ஸ்த்ரீணாஞ்சத்விஜஸத்தம )

என்றும் சொல்லுகிறபடியே இவருக்குத் திருவிலச்சினையும்ப்ரஸாதித்தருளி, அநந்தரம், (ఉపవీతం త్రిదణ్డఞ్చ పాత్రం జలపవిత్రకమ్ । కౌపీనం కటిసూత్రఞ్చ నత్యాజ్యం యావదాయుషః) (உபவீதம்த்ரிதண்டஞ்சபாத்ரம்ஜலபவித்ரகம்। கௌபீநம்கடிஸூத்ரஞ்சநத்யாஜ்யம்யாவதாயுஷம்) என்றும் சொல்லுகிறபடியே த்ரிதண்டகாஷாயாதிகளையும் ப்ரஸாதித்தருளி, இந்தஉகப்பின்மிகுதியாலே, பேரருளாளர் தமக்குஸ்வப்நமுகேந அருளிச்செய்தருளின உபகாரத்துக்குஇவர் தமக்கு ஜ்ஞாநபுத்ரராகையாலே, "அருளாளப்பெருமாளெம்பெருமானர்" என்று திருநாமம்சாத்தி மிகவும் க்ர்பைபண்ணியருளினர்.

பின்பு உடையவர், அவரையும் முதலிகளையுங்கூட்டிக்கொண்டு நம்பெருமாள்ஸந்நிதியிலேயெழுந்தருளி நம்பெருமாளைதண்டன்ஸமர்ப்பித்து தீர்த்தப்ரஸாதங்களும் ஸ்வீகரித்து, அருளாளப்பெருமாளெம்பெருமானருக்கும் தீர்த்தப்ரஸாதமும் திருமாலைப்ரஸாதமும் ஸ்ரீசடகோபனும்ப்ரஸாதிப்பித்து மடமேயெழுந்தருளி, தம்முடைய திருவாராதநமான பேரருளாளரையும்ஸேவிப்பித்து, "இவர்காணும் உம்மை நம்முடையபக்கல்சேர்ப்பித்தருளினவர்" என்று அருளிச்செய்து, அநந்தரம் பேரருளாளரையும் திருவாராதநம்செய்தருளிஅமுதுசெய்யப்பண்ணித் தாமும் முதலிகளுமாக அமுதுசெய்தருளினபின்பு அவருக்குத் தளிகைப்ரஸாதமும் ப்ரஸாதித்தருள; அவரும் அமுதுசெய்து ஸஹ்ர்தயராய்க்கொண்டு எழுந்தருளியிருந்தார். அதின்மற்றைநாள் உடையவர், அருளாளப்பெருமாளெம்பெருமானரைக்கடாக்ஷித்து, "தேவரீர் ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களைஓதும்" என்றுஅருளிச்செய்து மற்றும்வேண்டின தத்வசிக்ஷை மந்த்ரசிக்ஷைகளையும் ப்ரஸாதித்தருளினர்.



## அநந்தாழ்வான்முதலானோர், உடையவர்நியமநத்தினலே அருளாளப் பெருமாளெம்பெருமானர் திருவடிகளிலே ஆச்ரயித்தது.

பின்பு சிலநாள்கழிந்தவாறே, உடையவர், கூரத்தாழ்வான், முதலியாண்டான்முதலான முதலிகளுடனே அருளாளப்பெருமாளெம்பெருமானரையும் தம்முடையக்ர்பையாலே கூட்டிக்கொண்டு, ஸர்வாதிகாரமான திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச்செய்துகொண்டு திவ்யகோஷ்டியாய் எழுந்தருளியிருக்கும்நாளிலே, ஆசார்யர்களெல்லாரும் வந்து திருவடிகளிலேஆச்ரயிக்க; இத்தைஸேவித்து, அநந்தாழ்வானும், எச்சானும், தொண்டனூர்நம்பியும், மருதூர்நம்பியும், "உடையவர்திருவடிகளிலே ஆச்ரயிக்கவேணும்" என்று எழுந்தருள; அவர்களையும் அருளாளப்பெருமாளெம்பெருமானர்திருவடிகளிலே ஆச்ர

யீப்பித்தருளினர். அருளாளப்பெருமாளெம்பெருமானரும், உடையவர்நியமநப்படியே அவர்களுக்குத் திருவிலச்சினையும் ப்ரஸாதித்தருளிபயப்பட்டு ஹிதோபதேசம்பண்ணினபடி ;- “உடையவர், குருவியின் கழுத்திலே பனங்காயைக்கட்டினப்போலே கட்டினரித்தனை ; ஆகையால், நீங்கள்,எம்பெருமானர்திருவடிகளேதஞ்சமென்றிருங்கோள்” என்றருளிச்செய்தருளினர்.

—❦❦✳❦❦—

அநந்தாழ்வான், உடையவர்திருவுள்ளப்படி திருமலைக்குஎழுந்தருளி, அங்கே, “ராமாநுசன்” என்கிற திருநந்தவநஞ்செய்தருளி புஷ்பகைங்கர்யம் பண்ணிக்கொண்டிருந்தது.

அநந்தரம், உடையவர், திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச்செய்கிறவளவிலே, (ஒழிவில்காலமெல்லாம்) என்கிற திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச்செய்துகொண்டுபோருகிறவளவிலே, (சிந்துபூமகிழும் திருவேங்கடம்) என்கிறவிடத்திலே, உடையவரும் முதலிகளைப்பார்த்து, “பெரியதிருமலையிலே திருநந்தவநஞ்செய்து திருவேங்கடமுடையானுக்குத் திருமாலைகட்டி ஸமர்ப்பிப்பாரில்லையோ” என்று கேட்டருள;அவ்வளவிலே அநந்தாழ்வானெழுந்திருந்து,“அடியேன், விடைகொள்ளுகிறேன்” என்று திருவடிகளிலே தெண்டன்ஸமர்ப்பித்து ப்ரீதராயெழுந்தருளியிருக்க ; பின்பு உடையவரும் விடைகொடுக்க ; அநந்தாழ்வானும், கோயிலிலும்புறப்பட்டுத் திருக்கோவலூர் வழியாகவெழுந்தருளி ஆழ்வார்கள்நாயனரையும்ஸேவித்து அங்கிலும்புறப்பட்டு, (పురీణామపిసర్వాసాంశ్రేష్ఠాపాపహరాహిసా। ఏకాకాఞ్చీతివిఖ్యాతాపురీపుణ్యవివర్ధనీ)(புரீணமபிஸர்வாஸா0ச்ரேஷ்டாபாபஹராஹிஸா । ஏகா காஞ்சிதிவிக்யாதாபுரீபுண்யவிவர்த்தநீ ) என்றும் சொல்லப்படுகிற காஞ்சீமஹாநகரியிலே யெழுந்தருளிப்பேரருளாளரையும்ஸேவித்து, அங்கிலும்புறப்பட்டு * கடிகைத்தடங்குன்றின் மிசையிருந்த அக்காரக்கனியையும்ஸேவித்து, அங்கிலும்புறப்பட்டுத் திருப்பதியேறவெழுந்தருளி கோவிந்தராஜனையும்ஸேவித்து, திருமலைக்கெழுந்தருளித்திருவேங்கடமுடையானையும்ஸேவித்துத் திருநந்தவநஞ்செய்து அந்தத் திருநந்தவநத்துக்கு, “ராமாநுசன்” என்று திருநாமத்தையும்சாத்தித் திருமாலையும்கட்டித் திருவேங்கடமுடையானுக்கு ஸமர்ப்பித்துப் போருகிற இச்செய்தியை எம்பெருமானர்கேட்டருளித்திருவுள்ளமுகந்தருளி, திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச்செய்துசாத்தி எழுந்தருளியிருந்தார்.

—❦❦✳❦❦—

### கூரத்தாழ்வான், தம்முடைய ஸர்வஸ்வத்தையும் த்யஜித்து உடையவரே எல்லாஸம்பத்துமாக நினைத்து நடந்தாரென்பது.

அக்காலத்திலே கூரத்தாழ்வான், கூரமெழுந்தருளி ஆசார்யஸேவைக்கு அசலாய் அதஏவஸ்வரூபவிருத்தமான அர்த்தக்ஷேத்ராதிகளை, (க்ஷேத்ராணிமித்ராணி) (க்ஷேத்ராணிமித்ராணி) இத்யாதிப்படியே பரித்யஜித்துப்பெருமாள்கோயிலேறவெழுந்தருளித் திருக்கச்சிநம்பிமடத்திலேயெழுந்தருளி நம்பியைஸேவித்து மடத்துக்கும் சிலகிஞ்சித்காரம் பண்ணி * குஞ்ஜரகிரியிலே * அஞ்ஜநாபமாய் அக்ஷயமான ஸ்ரீநிதியையும் பக்திவிக்தாஞ்ஜநத்தாலேஸேவித்து, அநுகூலையான ஆண்டாளையுங்கூட்டிக்கொண்டு கோயிலுக்கெழுந்தருளாநிற்கச்செய்தேஸ்ரீமதுராந்தகாடவியிலே பர்யடநம்பண்ணிக்கொண்டு எழுந்தருளுகிறவளவிலே, ஆண்டாள், "பயமநுவர்த்தியாநிற்கிறது" என்ன; ஆழ்வானும், "ஏதாகிலும் சேஷித்தவையுண்டோ" என்றுகேட்டருள ; ஆண்டாளும், "ஸ்வர்ணவட்டிலைக்கொண்டுவருகையாலே, பயமுண்டு" என்று, திருச்செவியிலே ரஹஸ்யமாகவிண்ணப்பம்செய்ய ; ஆழ்வானும் அத்தைக்கேட்டுஅந்தஸ்வர்ணவட்டிலைவாங்கி காட்டிலேவிட்டெறிந்துகையில்பயம்போனவாறே நிர்ப்பீதையாக, உடையவருக்கு அபயப்ரதாநம் பண்ணின ஸ்ரீமதுராந்தகத்திலே எழுந்தருளி ஏரிகாத்தபெருமாள் கோவிலிலேசென்று பெருமாளையும்ஸேவித்து அங்கே திருமகிழடியிலேயெழுந்தருளி, "த்வயம்விளைந்தவிடம்" என்று அவ்விடத்தை ஸேவித்துமனமகிழ்ந்து மற்றைநாள்தொடங்கித்திருவயிந்திரபுரம்வழியாகப் பயணகதிகளிலே மன்னனார்கோயிலேறவெழுந்தருளி மன்னனாரைஸேவித்து, நாதமுநிகள் யோகத்திலேயெழுந்தருளியிருந்த ஸ்தலத்தையும்ஸேவித்து அங்குநின்றும்புறப்பட்டு, மற்றும் வழியிலுண்டான திருப்பதிகளையும்ஸேவித்துக் கோயிலிலேயெழுந்தருளி மடத்திலேபுகுந்து, (ராமாநுசனென்றன்மாநிதியே) (ராமாநுசன்சரணேகதிவேறெனக்கே) (ராமாநுசனென்றன்சேமவைப்பே) என்று அத்யவஸித்து உடையவர்திருவடிகளை ஸேவித்துக்கொண்டிருந்தார்.

—⁂—

### உடையவர், திருவேங்கடயாத்ரையைத் திருவுள்ளம்பற்றி பெருமாள் முத்ரைமோதிரம் வரவிட்டதைக்கண்டு பிள்ளைஉறங்காவில்லிதாஸர் மதிகலங்கிநின்றது.

அதின்மற்றைநாள் உடையவர் முதலிகளோடே திருமலைக்கு ஸ்ரீநிதியாகிற * பொருள்படைப்பானாகப்போவான் வழிகொண்டுபுறப்பட உத்யோகிக்க ; அத்தசையிலே ஒருஸ்ரீவைஷ்ணவர் உடையவர்

திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து, "தம்முடையபெருமாள்தளிகைக்கு மடத்திலேநடையாய்நடந்துவருகிற நெல்படிதரவேணும்" என்று எம்பெருமானாருக்கு விண்ணப்பம்செய்ய ; அப்போது எம்பெருமானார், தம்முடையதிருக்கையிலே சாத்திக்கொண்டிருக்கிற நம்பெருமாளுடையமுத்ரைமோதிரத்தை ப்ரஸாதித்து, "இத்தை, பிள்ளையுறங்காவில்லிதாஸர்கையிலேகொடுத்து உமக்குண்டான நெல்லைவாங்கிக்கொண்டுபோம்" என்று அந்தஸ்ரீவைஷ்ணவர் திருக்கையிலேகொடுக்க; ஸ்ரீவைஷ்ணவரும் அத்தைவாங்கிக்கொண்டுபோய், பிள்ளையுறங்காவில்லிதாஸர்கையிலேகொடுக்க; பிள்ளையுறங்காவில்லிதாஸரும் அந்தமுத்ரைமோதிரத்தைவாங்கிக்கொண்டு அத்தை*உச்சிமேல் வைத்துஉகந்து, "இதென்" என்றுகேட்க; ஸ்ரீவைஷ்ணவரும்திருமலையாத்ரையையும்நெல்படிதரவேண்டினத்தையும்அருளிச்செய்ய; பிள்ளையும் அச்செய்தியைக்கேட்டு * மதியெல்லாமுள்கலங்கி மயங்கிக்கிடக்க ; அந்தஸ்ரீவைஷ்ணவரும் உடையவர்ஸந்நிதியிலேவந்து அச்செய்தியை விண்ணப்பம்செய்ய ; உடையவருங்கேட்டு வைஷ்ணவரைப்பார்த்து, அவர்க்கு, " (திண்பூம்சுடர்நுதி)என்கிறபாட்டைச் சொல்லமாட்டிற்றிலீரோ, இனியாகிலும் அங்கேசென்று அந்தப்பாட்டையநுஸந்தியும்" என்ன ; அவரும் அங்கேசென்று அந்தப்பாட்டையநுஸந்திக்க; பிள்ளையும் தெளிந்துதேறியிருந்தார் ; இப்படி ஆசார்யவிச்லேஷாஸஹிஷ்ணுவாய் நிரவதிகபகவத்பாகவத வைபவத்தையுடையரான விவரை உடையவர், பகவத்யாகஸமயத்திலே காயசுத்த்யர்த்தமாககாஸ்பர்சம்பண்ணிக்கொண்டுபோந்து எழுந்தருளியிருந்தார்.

—⁂—

உடையவர், திருவேங்கடயாத்ரையெழுந்தருளினது.

பின்பு சிலநாள்சென்றவாறே, ( நின்றவேங்கடம்நீணிலத்துள்ளது, சென்று தேவர்கள் கைதொழுவார்களே) என்கிறபடியே கால்நடையாகநடந்து புறப்பட்டுத் திருவெள்ளறையிலேயெழுந்தருளி,* வெள்ளறையில் கல்லறைமேல்பொன்னையுங்கண்டுகளித்து உள்ளேசென்று செந்தாமரைக்கண்ணரான அந்தபுண்டரீகாக்ஷனையும் திருவடித்தொழுது, (పాథేయం పుణ్డరీకాక్ష నామసఙ్కీర్తనామృతమ్) (பாதேயம்புண்டரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ர்தம்) என்கிற (க) பாதேயத்துடனே, ( பூங்கோவலூர்தொழுதும்போது நெஞ்சே) என்கிற திருவுள்ளக்கருத்துடனே திருக்கோவலூரேறவெழுந்தருளுகிறவர், (తత్రాగతో యతిపతిః పథి విశ్రమార్థం సూరివ్రజైస్సహ సిసేవిషురఞ్జనాద్రిమ్ । తౌ భ్రాతరౌ చిరమపాఙ్గయతిస్మ పూర్ణం తౌ చ ప్రణేమతురముం తదపాఙ్గధన్యౌ) ( தத்ராகதோயதிபதிஃபதிவிச்ரமார்த்தம்ஸூரிவ்ரஜைஸ்ஸஹஸிஸேவிஷூரஞ்ஜநாத்ரிம் | தௌப்ராதரௌசிரமபாங்கயதிஸ்மபூர்ணம்தௌசப்ரணேமதுரமும்ததபாங்கதந்யௌ) என்னும்படி

திருவுள்ளக்கருத்துடனேசென்று, * துஞ்சாநீர்வளஞ்சுரக்கும்பெண்ணையிலே நீராடியருளித் திருமண்காப்புச்சாத்தியருளி, * கோவலுள் மாமலராள்தன்னொடுமாயனைக்கண்டமைகாட்டும் தமிழ்த்தவரானமுதலாழ்வார்கள்புருஷகாரமாக ஆயனையும் ஆழ்வார்கள்நாயனுரையும்ஸேவித்து, (ప్రహ్లాదతార్క్ష్యబలిశుక్రనముచ్యనన్తలక్ష్మీమృకణ్డుమునివాసకిసేవ్యమానమ్ । కాసారయోగివరభూతపిశాచనాథసమ్మర్దనోత్సుకమహంశరణంప్రపద్యే) (ப்ரஹ்லாததார்க்ஷ்யபலிசுக்ரநமுச்யநந்தலக்ஷ்மீம்ர்கண்டுமுநி வாஸுகி ஸேவ்யமாநம் । காஸாரயோகிவரபூதபிசாசநாதஸம்மர்த்தநோத்ஸுகமஹம்சரணம்ப்ரபத்யே) என்கிறபடியே * பலவர்நெருக்குகந்தசிலத்திலேவித்தராய் தீர்த்தப்ரஸாதங்களும்ஸ்வீகரித்து, * கோவலுலகளப்பானடிநிமிர்த்த * உலகளந்தபொன்னடியான *லோகவிக்ராந்தசரணங்களில் சரணவரணம்பண்ணிப்புறப்பட்டு அற்றைக்கு அங்கேயெழுந்தருளியிருந்து, தாம் எழுந்தருளினசெய்தியை எண்ணூயிரத்து எச்சானுக்கு அருளிச்செய்துபோகவிட; எச்சானும், உடையவரெழுந்தருளுகிறசெய்தியைக்கேட்டுத் திருக்காவணமிடுவித்து, பச்சைபரப்புவது மலர்ப்பூபரப்புவது*பச்சிலைநீள் கமுகும்பலவும் தெங்கும் வாழைகளும்நாட்டுவதாய்த் திருவீதிகள்செப்பனிடுவதாய்த் தெளிநீர்தெளிப்பதாய், எழுந்தருளின உடையவர்ஸந்நிதியில்ஸ்ரீவைஷ்ணவரை அந்யபரதையாலே அநாதரித்திருக்க; அந்தஸ்ரீவைஷ்ணவர்மீண்டு உடையவர்ஸந்நிதியிலேவந்து உடையவர்க்கு இத்தைவிண்ணப்பம்செய்ய; உடையவரும் அத்தைக்கேட்டுத் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருக்க; மற்றைநாள் திருக்கோவலூரிலும் புறப்பட்டவளவிலே ஊருக்குப்புறம்பே இரண்டுமார்க்கத்தைக்கண்டு, "இது எங்குப்போம்வழி, இது எங்குப்போம்வழி" என்று சிலமாட்டாயப் பிள்ளைகளைக்கேட்க; அவர்களும், "ராஜஸராயிருப்பார்போய்ப்புகும் எச்சானிருப்பிடத்துவழி இது, ஸாத்விகராயிருப்பார்போய்ப்புகும் அம்மாளிருப்பிடத்துவழி இது" என்ன; உடையவரும் ஸாத்விகப்ரியராகையாலே அம்மாள்திருமாளிகையேறவெழுந்தருளினார்.

## உடையவர், பருத்திக்கொல்லையில் அம்மாள்திருமாளிகைக்கு எழுந்தருளியது.

பருத்திக்கொல்லையம்மாளும் அகிஞ்சநராகையாலே அற்றைக்கும் உபாதாநத்துக்கெழுந்தருள; அம்மாள்தேவிகள் உடைபுடைவையின்றியிலே ஒரு (க) துச்சதையான சாடியைதரித்துக்கொண்டு வெளியிலேபுறப்பட லஜ்ஜித்து ஒளித்திருக்க; உடையவரும் அதறிந்தருளி ஒருபுடைவையையெறிந்தருள; அவரும் அந்தப்புடைவையை

(க) துச்சதையானசாடி -மறைக்கக்கூடாதபுடைவை; கந்தலென்றபடி.

தரித்துக்கொண்டுவெளியிலேவந்துஸவிநயையாய்எம்பெருமானார்திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்துநிற்க; எம்பெருமானாரும்தளிகைக்குப்பண்ணச்சொல்லிநியமிக்க ; அம்மாள்தேவிகளும், "அம்மாள்வருந்தனையும் பொறுத்தருளவேணும், தளிகைக்குபதார்த்தங்கள் வரவேண்டியிருக்கிறது" என்றுவிண்ணப்பம்செய்ய ; உடையவரும் அத்தைக்கேட்டு, தளிகைக்குவேண்டினபதார்த்தங்கள் அமுதுபடி, பருப்பமுது, நெய்யமுது, கறியமுதும், மற்றும்வேண்டின ஸம்பாரங்களையும் ஸம்பாதித்து தளிகைக்குப்பண்ணும்படி நியமித்தருள ; அவரும் அப்படியே ஸ்நாநம்பண்ணிவந்து தௌதவஸ்த்ரத்தையும் திருமண்காப்பையும்சாத்திக்கொண்டு திருவாய்மொழியநுஸந்தாநத்துடனேதிருப்போநகம்சமைத்தவநந்தரம்,சமைத்ததிருப்போனகத்தைத்தம்முடையதிருவாராதநமான எம்பெருமானுக்கு அமுதுசெய்தருளப்பண்ணி, "பருத்திக்கொல்லையம்மாள் எழுந்தளவேணும்" என்றுகாத்துக்கொண்டிருக்க ; அம்மாளும் உடையவரெழுந்தருளின செய்தியைக்கேட்டுவந்து நீராடித் திருமண்காப்புச்சாத்தியருளி மிகவும்ப்ரீதராய் உடையவர்திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து ஸ்ரீபாததீர்த்தமும்சேர்த்து ஸ்வீகரித்து ஸவிநயராயிருக்க ; எம்பெருமானாரும், அம்மாளுடைய ஜ்ஞாநபக்திவைராக்யங்களைக்கண்டு மிகவும்வித்தராய், அவரையுங்கூட்டிக்கொண்டு எல்லாருமமுதுசெய்தருளித்திருக்கைகள் விளக்கியெழுந்தருளியிருந்து மற்றைநாள்புறப்பட்டவளவிலே எச்சானும் எதிரேவந்து எம்பெருமானார்திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து, "தம்முடையதிருமாளிகைக்கு எழுந்தருளவேணும்" என்றுப்ரார்த்திக்க ; எம்பெருமானாரும் அவரைப்பார்த்து, "உமக்குஇன்னமொருவெள்ளாவிக்கிளைது" என்றருளிச்செய்ய ; எச்சானும் "அடியேனுடைய ரஜோகுணம்போம்படி ஒருகைங்கர்யம்நியமித்தருளவேணும்" என்று விண்ணப்பம்செய்ய ; உடையவரும் எச்சானைப்பார்த்து, "நீர்இன்று தொடங்கி ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் திருப்பரியட்டம்திருத்தி ஸமர்ப்பியும்" என்று நியமித்தருளினார் ; அவரும் அப்படியே அந்தக்கைங்கர்யம்செய்துகொண்டு எழுந்தருளியிருந்தார்.

—✣✣✣—

உடையவர், பேரருளாளரை மங்களாசாஸநம்செய்தருளியது.

அவ்வளவிலே அம்மாளுடைய ஸந்மார்க்கத்தை அநுவிதாநம்பண்ணும்படியெண்ணி எழுந்தருள; அங்கே ஒருகோபாலஸ்ரீவைஷ்ணவர் பாலமுதுதிருத்திக்கொண்டுவந்து ஸமர்ப்பித்து இத்தை அங்கீகரித்து இங்கேயெழுந்தருளியிருக்கவேணும்" என்று திருவடிகளிலே ஸேவித்துவிண்ணப்பம்செய்ய;உடையவரும் அப்படியே அங்கீகரித்து

அற்றைக்கு அங்கேயெழுந்தருளியிருந்து மற்றைநாள்புறப்பட்டருளி, பெருமாள்கோயிலேறவெழுந்தருளித்திருக்கச்சிநம்பிமடத்துக்கெழுந்தருளி, (శ్రీమత్కాఞ్చీమునిం వన్దే కమలాపతినన్దనమ్ । వరదాఙ్ఘ్రిసదాసఙ్గరసాయనపరాయణమ్) (ஸ்ரீமத்காஞ்சீமுநிம்வந்தே கமலாபதிநந்தநம் । வரதாங்க்ரிஸதாஸங்கரஸாயநபராயணம்) என்று நம்பிதிருவடிகளிலேதண்டன்ஸமர்ப்பித்து, அவருடனேகூடவெழுந்தருளி கோபுரராஜனையும் ஸேவித்து ஆனைகாத்தபெருமாளையும்ஸேவித்து, (మహావరాహం దేవేశం ద్రష్టుకామో రసాతలాత్ । నిర్యయౌ యత్ర భగవాననన్తః పన్నగేశ్వరః॥ తీర్థే తస్మిన్ మహాపుణ్యే సిద్ధసఙ్ఘనిషేవితే । సమాహూతాని తీర్థాని సర్వాణి మునిభిస్సదా) (மஹாவராஹம் தேவேசம்த்ரஷ்டுகாமோரஸாதலாத் । நிர்யயௌயத்ரபகவாநநந்தஃ பந்நகேஶ்வர:॥தீர்த்தேதஸ்மிந்மஹாபுண்யேஸித்தஸங்கநிஷேவிதே। ஸமாஹூதாநிதீர்த்தாநி ஸர்வாணிமுநிபிஸ்ஸதா) என்றும்சொல்லப்படுகிறமாஹாத்ம்யத்தையுடைத்தான திருவநந்தஸரஸ்ஸிலேநீராடியருளித்திருமண்காப்புச்சாத்தியருளி,* எறிதிரைவையம் முற்றுமேனத்துருவாயிடந்த ஞானப்பிரானையும்ஸேவித்து,ப்ரதக்ஷிணமாகவெழுந்தருளி ஆழ்வார்களையும்ஸேவித்து ஸ்ரீபலிபீடத்தருகே தண்டன்ஸமர்ப்பித்துத் திருப்புற்றுத்திருக்கழலடியிலேயும் தண்டன்ஸமர்ப்பித்து அதுக்குக்கிழக்காகக்கரியமாணிக்கத்தாழ்வாரையும்ஸேவித்து, ஆளவந்தார், விசேஷகடாக்ஷம்பண்ணியருளினயமுனைத்துறைவர்திருமுற்றத்திலே, (నమో నమో యామునాయ యామునాయ నమో నమః) (நமோநமோயாமுநாயயாமுநாய நமோநம:) என்று தண்டன்ஸமர்ப்பித்துத் திருமடைப்பள்ளியையும் ஸேவித்து, புண்யகோடியான ஸ்ரீதிவ்யவிமாநத்தையும்ஸேவித்து, பேருளாளன்பெருந்தேவியாரையும் ஸேவித்து உள்ளேபுகுந்து, (ఆకారత్రయసమ్పన్నామరవిన్దనివాసినీమ్। అశేషజగదీశిత్రీం వన్దే వరదవల్లభామ్) (ஆகாரத்ரயஸம்பந்நா மரவிந்தநிவாஸிநீம் । அஶேஷஜகதீஶித்ரீம்வந்தேவரதவல்லபாம்) என்று ஸேவித்து தீர்த்தப்ரஸாதமும் ஸ்வீகரித்துப்புறப்பட்டுத் திருவபிஷேகத் திருமண்டபத்திலே திருவாழியாழ்வானையும் ஸேவித்து,* சென்றாலமரர்தனையாளும்சேனைநாதன்கழல்வணங்கியெழுந்தருளி, (అశేషగిరిరాజాయ శ్రీహస్తిగిరయే నమః) (அசேஷகிரிராஜாய ஸ்ரீஹஸ்திகிரயேநம:) என்றுதண்டன்ஸமர்ப்பித்து வைகைமாளிகையிலேயே†ஸ்வாக்ரமத்திலே நம்பியைமுன்னிட்டுக்கொண்டு * உலகேத்துமாழியானத்தியூரானாய் * அர்த்திதார்த்த பரிதாநதீக்ஷிதரான பேருளாளரைஸேவிக்க ; பேருளாளரும், "நம்மிராமாநுசனன்றோ" என்று மிகவும்பஹுமாநத்துடனே கடாக்ஷித்தருளி, ராமாநுசனுக்கு தீர்த்தப்ரஸாதங்களும் * பூவார்கழல்கள்ப்ரஸாதங்களும் ஸ்ரீசடகோபனும் திருப்பரியட்டத்துடனேப்ரஸாதிக்க ; ராமாநுசனும், (திருப்பொலிந்தசேவடியென்சென்னியின்மேல்பொறித்தாய்) என்று மிகவும்ப்ரீதராய்

† "வைகைமாளிகை" என்றும் சிலஸ்ரீகோசங்களில்காண்கிறது.

ஸேவித்துப்புறப்பட்டுத் திருக்கச்சிநம்பியுடனேமடமேயெழுந்தருளி, திருக்கச்சிநம்பியைப்பார்த்து,"அடியேன்பெரியதிருமலைக்குவிடைகொள்ளுகிறேன்" என்று விண்ணப்பம்செய்ய ; நம்பியும், (சென்றுவணங்குமினோ சேணுயர்வேங்கடத்தை) என்று அருளிச்செய்ய; எம்பெருமானாரும்அதிப்ரீதியுடனேபெருமாள்கோயிலிலும்புறப்பட்டு †(*கடிகைத்தடங்குன்றின்மிசையிருந்த அக்காரக்கனியையும்ஸேவித்து அற்றைக்கங்கேயெழுந்தருளியிருந்து, மற்றைநாள் அங்கிலும்புறப்பட்டு) திருமலைக்கெழுந்தருளாநிற்கச்செய்தேமார்க்க மத்யத்திலே, (வழிதிகைத்தலமருகின்றேன்)என்கிறபடியேவழிதெரியாமலிருக்க; அங்கே ஒரு ஏற்றமிறைப்பானைக்கண்டு, "திருமலைக்குவழியெங்கே" என்று கேட்க ; அவன் செவ்வைவழியைக்காட்ட ; உடையவரும் முதலிகளுடனே, "இதொரு அமாநவப்ரேரிதனிருந்தபடியென்"என்று மிகவுமுகந்தருளித்திருப்பதிக்குளழுந்தருளாநிற்க;திருப்பதியில்ஸ்ரீவைஷ்ணவர்களும், எம்பெருமானாரெழுந்தருளினசெய்தியைக்கேட்டு எதிரேவந்து உடையவர்திருவடிகளிலேஸேவிக்க; அவர்களையும்க்ர்பைபண்ணித்திருப்பதிக்கெழுந்தருளித்திருமலையாழ்வாரையும்ஸேவித்து ஆழ்வார்களையும் ஸேவித்துக்கொண்டு திருப்பதியிலேயெழுந்தருளியிருக்க ;

## உடையவர், திருமலையிலே திருவேங்கடமுடையானை மங்களாசாஸநம் செய்தருளியது.

இவரெழுந்தருளினசெய்தியைஅநந்தாழ்வான்தொடக்கமானஸ்ரீவைஷ்ணவர்கள்கேட்டுத் திருமலையிலும் இழிந்துவந்து எம்பெருமானார் திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து, "தேவரீர், திருவேங்கடமுடையானை மங்களாசாஸநம்பண்ணவெழுந்தருளவேணும்" என்று விண்ணப்பம்செய்ய ; எம்பெருமானாரும், "ஆழ்வார்கள் திருமலையேறாதிருக்க நாம்ஏறக்கடவோமல்லோம், தாழ்வரையிலே யெழுந்தருளியிருக்கிற ஆழ்வார்களை ஸேவித்துக்கொண்டிருக்கிறோம்" என்றருளிச்செய்ய ; அநந்தாழ்வான்தொடக்கமான ஸ்ரீவைஷ்ணவர்களும், "தேவரீர் திருமலையேறாதபோது அடியோங்களுமேறோம், மற்றுமுள்ளாரொருவரும்ஏறுவதில்லை" என்று விண்ணப்பம்செய்ய; எம்பெருமானாரும், "ஆனால்அப்படியேசெய்கிறோம்" என்று ததநுகுணமாகத்திருமேனிசோதனையும்பண்ணிக்கொண்டு அடிப்புளியடியிலே தண்டன்ஸமர்ப்பித்து,(తం పాదేనాధ్యారోహతి,(தம்பாதேநாத்யாரோஹதி)என்றுஸ்ரீவைகுண்டநாத நியோகாத்பாதபீடத்திலேஅடியிட்டேறுப்போலே திருமலைமேலேயேறி *நெறியாய்க்கிடக்கும் நிலையையும் *செப்பார்திண்வரையையும்*பன்மணிநீரோடுபொருதுருளும்கானாறையும்*அன்னனையபொற்குவடுகளையும்கண்டுகளித்துக்கொண்டு ஆநந்தத்துடனேயெழுந்தருளி

† குண்டலிதக்ரந்தம் சில ஸ்ரீகோசஙகளிலில்லை.

பிராமிற்கச்செய்தே, திருவேங்கடமுடையான் இவர்எழுந்தருளுகிற தறிந்து அநந்தாழ்வான்ஸ்ரீபாதத்தில்ஸ்ரீவைஷ்ணவரைப்போலே ஒரு வெள்ளிப்பள்ளயத்திலே ஒரு தத்யோதநத்தளிகையையும் அதிலே யொருஅம்ர்தபலத்தையும்வைத்துக்கொண்டுஎதிரேவந்து,“திருவேங்கடமுடையான் அனுப்பியருளினுர்”என்று விண்ணப்பம்செய்ய;எம்பெருமானுரும், “தேவரீர் ஆருடையஸம்பந்தம்” என்ன; அவரும், “அநந்தாழ்வான்ஸம்பந்தம்” என்ன ; எம்பெருமானுரும், “ அவர்தனியனைச்சொல்லும்” என்ன ; அவரும் (అఖిలాత్మగుణావాసమజ్ఞానతిమిరాపహమ్। ఆశ్రితానాంసుశరణంవన్దేనన్తార్యదేశికమ్ ) ( அகிலாத்மகுணாவாஸமஜ்ஞாநதிமிராபஹம்।ஆஸ்ரிதாநாம்ஸுஸரணம்வந்தேநந்தார்யதேசிகம்) என்கிற தனியனைச்சொல்லிமறைய ; உடையவரும் ஆச்சர்யப்பட்டு, “திருவேங்கடமுடையான்முனே இப்படிகொண்டுவந்துப்ரஸாதித்தான்”என்று அருளிச்செய்து அவனுடைய ஸௌலப்யஸௌசில்யாதிகளிலே ஆழங்கால்பட்டு, பின்புமுதலிகளுடனே அங்கேப்ரஸாதஸ்வீகாரம்பண்ணி அந்தஅம்ர்தபலத்தைத்தாம்அமுதுசெய்தருளிஅங்கேப்ரதிஷ்டிப்பித்து எழுந்தருளினுர்.

எல்லாருங்கூடத் திருப்பரியட்டப்பாறையளவாகவெழுந்தருளாநிற்க, திருவேங்கடமுடையானுடைய தீர்த்தப்ரஸாதங்கொண்டு பெரியதிருமலைநம்பி எதிரே எழுந்தருள ; எம்பெருமானுரும் தெண்டன்ஸமர்ப்பித்து ப்ரஸாதம்ஸ்வீகரித்தருளி, “ தேவரீர் எழுந்தருளவேணுமோ, ஒரு சிறியார்களில்லையோ” என்ன ; திருமலைநம்பியும், எம்பெருமானுரைப்பார்த்து, “ நாலுவீதியிலும் ஆராய்ந்தவிடத்தில் என்னில்சிறியாரைக்கண்டிலேன்” என்றருளிச்செய்தருளினுர். எல்லாருங்கூடக்கல்வேலியளவாக எழுந்தருளாநிற்க ; ஜீயர்கள், ஏகாங்கிகள், ஸ்ரீவைஷ்ணவர்கள், ஸ்தாநத்தின்முதலிகள், ஸ்ரீபாதந்தாங்குவார், மற்றுமுண்டான அனைத்துக்கொத்தும்வந்துதிருவடிகளிலேஸேவிக்க; இப்படி ஸ்ரீவைஷ்ணவர்கள்ஸங்கத்துடனே 'வைகுந்தன்திருவாசலிலே தெண்டன்ஸமர்ப்பித்துத் திருக்கோனேரியிலேநீராடித் திருமண்காப்புச்சாத்தியருளித் திருமலைநம்பிதொடக்கமானமுதலிகளுடனே நாலு திருவீதியும்ப்ரதக்ஷிணமாகவெழுந்தருளி, “ ராமாநுசன்” என்கிற திருநந்தவநத்திலேயெழுந்தருளி அநந்தாழ்வானைப்பார்த்து உகந்தருளி, (నిపీడ్యపరిషస్వజే) (நிபீட்யபரிஷஸ்வஜே) என்கிறபடியேகாடாலிங்கநம்பண்ணி, (வளர்த்ததனுல்பயன்பெற்றேன்வருக) என்றுமிகவுமுகப்புடனே க்ர்பைபண்ணியருளி,அவ்விடங்களிலுண்டான, (தேனுர்பூஞ்சோலை ) என்றும், ( மொய்த்தசோலை ) என்றும், (கோல்தேன் பாய்ந்தொழுகும்குளிர்சோலை)என்றும்அச்சோலையில்அலங்காரமான, (செண்பகமாய்நிற்கும்திரு) என்கிறபடியே திருச்செண்பகந்தொடக்கமான திருப்பூமரங்களையும், அவ்விடங்களிலுண்டான * தேன்நீர்ப்

சுனைகளையும், அச்சுனைகளோடுண்டான * செந்தீமலர்ந்தசேறூர் சுனைத் தாமரைகளையும், * கோனேரிவாழும் குருகுதொடக்கமான பக்ஷிஸங் கங்களையும், * தென்றுதெனுவென்றுவண்டுகள்பாடுகிற பாடலையும், (சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய்) என்கிற நாநாரத்நசோபிதமான திருமதிள்களையும் திருநந்தவநங்களையுங்கண்டு களித்துக்கொண்டு ஆநந்தத்துடனேயெழுந்தருளி, * நிலங்கோட்டிடைக்கொண்ட ஞானப் பிரானையும் திருவடித்தொழுது * அவாவறச்சூழ்ந்தான்திருவாசலிலே தண்டன்ஸமர்ப்பித்து, உள்ளேபுகுந்து அத்தாணிப்புணியையும் ஸேவித்து ஸ்ரீபலிபீடத்தருகே தெண்டன்ஸமர்ப்பித்து, "யமுனைத்து றைவர்" என்கிறதிருப்பூமண்டபத்தையும்ஸேவித்து, (ధనుర్మాసేసితేపక్షే ద్వాదశ్యామరుణోదయే। ఆయాన్తిసర్వతీర్థానిస్వామి పుష్కరిణీజలే) (தநுர்மாஸே ஸிதேபக்ஷேத்வாதச்யாமருணோதயே। ஆயாந்திஸர்வதீர்த்தாநிஸ்வாமி புஷ்கரிணீஜலே)என்றுசொல்லப்படுகிறமாஹாத்ம்யத்தையுடைத்தான ஸ்வாமிபுஷ்கரிணியில் தீர்த்தத்தையும் ஸ்வீகரித்துச் செண்பகத்தி ருவாசலுக்குள்ளேபுகுந்து தண்டன்ஸமர்ப்பித்து ப்ரதக்ஷிணமாகவெ ழுந்தருளி, திவ்யவிமாநத்தையும் சேனைமுதலியாரையும் வேங்கடத் தரியையும் ஸேவிப்பதாக உள்ளேயெழுந்தருள ; திருவேங்கட முடையானும், (அடிக்கீழமர்ந்துபுகுந்து அடியீர்வாழ்மின்) என்று அருள்கொடுத்தருள ; அவற்றை, உடையவரும், ( அலர்மேல் மங்கையுறைமார்பா உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேன்) என்றுபிராட்டி முன்னிலையாக * பூவார்கழல்களைக்கிடடி, (செங்கமலக்கழலில்) என்கிறபடியே பாதாதிகேசாந்தமாசஸேவித்து, (యత్పదాంభోరుహధ్యాన విధ్వస్తాశేషకల్మషః। వస్తుతాముపయాతోహం యామునేయంనమామితమ్)(யத்பதாம் போருஹத்யாநவித்வஸ்தாசேஷகல்மஷः । வஸ்துதாமுபயாதோஹம் யாமுநேயம்நமாமிதம்)என்றும்,(శ్రీనామసూక్తిర్మాలా యామునార్యేణనిర్మితా। ఋషిశుక్తిసముద్భూతైర్నిర్దోషైశ్శ్రుతిసాగరైః॥ ఆరాధనాయహరయేజగదానన్దదాయినే। శ్రీనాథనాయకవతీనారాయణగుణాన్వితా॥ సర్వకల్యాణజననీజగన్మఙ్గళవైభవా। మనీషిభిర్మహాభాగైర్వైష్ణవైర్ధ్రియతామియమ్) (ஸ்ரீர்நாமமௌக்திகைர்மாலாயாமு நார்யேணநிர்மிதா । ரிஷிசுக்திஸமுத்பூதைர்நிர்தோஷைச்ச்ருதிஸா கரைः।। ஆராதநாயஹரயேஜகதாநந்ததாயிநே । ஸ்ரீநாதநாயகவதீநாரா யணகுணாந்விதா।।ஸர்வகல்யாணஜநநீஜகந்மங்களவைபவா । மநீஷிபிர் மஹாபாகைர்வைஷ்ணவைர்த்ரியதாமியம்) என்றநுஸந்தித்துக்கொண்டு, (శ్రీమన్నారాయణాధీశ శ్రీమదఞ్జనశైలప। శ్రీమద్వృషభశైలేన్ద్ర శ్రీమత్సింహనగాధిప॥ శ్రీశేషగోత్రాభరణ శ్రీనివాసేతికీర్తయే। అచ్యుతానన్త గోవిన్దముకున్దగరుడధ్వజ॥ జగదానన్దజనక జగజ్జన్మాదికారణ। నారాయణ జగన్నాథ శరణాగతవత్సల॥ సత్యసఙ్కల్పసర్వజ్ఞ సత్యకామసనాతన। నిస్సమాభ్యధికస్వస్థ స్వేమహిమ్నిప్రతిష్ఠిత॥ త్రివిక్రమత్రిలోకేశ శఙ్ఖచక్రగదాధర। రమానాథరసానాథ నీళానాథనిరఞ్జన॥ నిత్యనిర్దోషనిస్సీమ మహావిభవ

శాశ్వత। త్రిగుణాతీతషాడ్గుణ్యపరిపూర్ణపరాత్పర॥ పురుషోత్తమమన్నాథపుణ్యశ్రవణకీర్తన। నిర్వికారనిరాతఙ్కనిత్యానన్దనిరామయ॥ యజ్ఞేశయజ్ఞపురుషపుణ్డరీకాక్షమాధవ। వాసుదేవవిభోవిష్వక్సేనవైకుణ్ఠవామన॥ నీలవర్ణార్ణవశయా శ్రీవల్లభజగత్పతే। త్రైయన్తగీతాసఙ్ఖ్యేయసన్మఙ్గళగుణాకర॥ రమారమణరాజీవదళచారువిలోచన। నిత్యయౌవనసౌన్దర్యశీలదివ్యగుణార్ణవ॥ వేదవేద్యవిశాలాక్షవిశ్వమ్భరధరాపతే। దాశార్హదేవదేవేశదామోదరదయానిధే॥ ధరణీధారకాధారనిలయాధోక్షజావ్యయ। యోగిధ్యేయజగద్వన్ద్యజగత్స్వామిన్ జనార్దన॥ నారసింహహయగ్రీవహరేప్రహ్లాదవత్సల।లోకాధారపరాధారఆత్మాధారధరాధర॥ రథాఙ్గపాణేసర్వేశసర్వలోకసమాశ్రయ। భూతభవ్యభవన్నాథవేఙ్కటాచలనాయక॥ కృష్ణవిష్ణోవిశాలాక్షశ్రీజయస్త్రీవిరాజిత।క్షీరార్ణవశయానన్తశరణ్యాశ్రితవత్సల॥ సర్వాత్మన్ సర్వలోకేశసర్వసర్వాత్మనాయక। కరుణాకరకాలజ్ఞసర్వలోకనియామక॥ ముఞ్జకేశహృషీకేశకేశిమర్దనకేశవ। నరకాన్తకకాకుత్స్థకాలాత్మన్ కాలపాచక॥ కరీన్ద్రవరదానన్దశ్రీధరశ్రీనికేతన।నిరవద్యపరబ్రహ్మన్ సర్వలోకపరాశ్రయ॥ నాథసేవ్యపదామ్భోజవకళాభరణాశ్రయ।రమారామాభిరామాఙ్గరామకృష్ణేతికీర్తనే॥ శ్రీమద్వేఙ్కటనాథమాదిపురుషంపూర్ణంపరంశాశ్వతంశ్రీనాథంశరణాగతార్తిహరణంనారాయణంసంశ్రయే।కృష్ణంవిష్ణుమనన్తమచ్యుతమజంగోవిన్దమిన్దీవరశ్యామం నన్దకశఙ్ఖచక్రరుచిరంధ్యాయన్ భజేకీర్తయే॥ యేనైతత్పఠ్యతేనామ్నామష్టావింశోత్తరంశతమ్।అనిష్టపక్షక్షపణమిష్టావాప్తిరవాప్యతే)(ஸ்ரீமந்நாராயணாதீச ஸ்ரீமதஞ்ஜநசைலப। ஸ்ரீமத்வ்ருஷபசைலேந்த்ர ஸ்ரீமத்ஸிம்ஹநகாதிப॥ ஸ்ரீசேஷகோத்ராபரண ஸ்ரீநிவாஸேதிகீர்த்தயே। அச்யுதாநந்தகோவிந்தமுகுந்த கருடத்வஜ॥ ஜகதாநந்தஜநக ஜகஜ்ஜந்மாதிகாரண। நாராயணஜகந்நாதசரணாகதவத்ஸல॥ ஸத்யஸங்கல்பஸர்வஜ்ஞஸத்யகாமஸநாதந। நிஸ்ஸமாப்யதிகஸ்வஸ்தஸ்வேமஹிம்நிப்ரதிஷ்டித॥ த்ரிவிக்ரமத்ரிலோகேசசங்கசக்ரகதாதர। ரமாநாதரஸாநாதநீளாநாதநிரஞ்ஜந॥நித்யநிர்த்தோஷநிஸ்ஸீமமஹாவிபவசாச்வத। த்ரிகுணாதீதஷாட்குண்யபரிபூர்ணபராத்பர॥ புருஷோத்தமமந்நாத புண்யச்ரவணகீர்த்தந। நிர்விகாரநிராடங்கநித்யாநந்தநிராமய॥ யஜ்ஞேசயஜ்ஞபுருஷபுண்டரீகாக்ஷமாதவ। வாஸுதேவவிபோவிஷ்வக்ஸேநவைகுண்ட்வாமந॥ நீலவர்ணார்ணவசயா ஸ்ரீவல்லபஜகத்பதே। த்ரையந்தகீதாஸங்க்யேயா ஸந்மங்களகுணாகர॥ ரமாரமணராஜீவதளசாருவிலோசந। நித்யயௌவந ஸௌந்தர்யசீலதிவ்யகுணார்ணவ॥ வேதவேத்யவிசாலாக்ஷவிச்வம்பரதராபதே।தாசார்ஹதேவதேவேசதாமோதரதயாநிதே॥ தரணீதாரகாதாரநிலயாதோக்ஷஜாவ்யய। யோகித்யேயஜகத்வந்த்யஜகத்ஸ்வாமிந்ஜநார்த்தந॥ நாரஸிம்ஹஹயக்ரீவஹரேப்ரஹ்லாதவத்ஸல।லோகாதாரபராதார ஆத்மாதாரதராதர॥ ரதாங்கபாணேஸர்வேசஸர்வலோகஸமாச்ரய। பூதபவ்யபவந்நாதவேங்கடாசலநாயக॥

க்ர்ஷ்ணவிஷ்ணோவிசாலாக்ஷவைஜயந்திவிராஜித। க்ஷீரார்ணவசயாநந்த சரண்யாச்ரிதவத்ஸல॥ஸர்வாத்மந்ஸர்வலோகேசஸர்வஸர்வாத்மநாயக। கருணாகரகாலஜ்ஞஸர்வலோகநியாமக॥ முஞ்ஜகேசஹ்ர்ஷீகேசகேசிமர்த்தநகேசவ। நரகாந்தககாகுத்ஸ்த்தகாலாத்மந்காலபாசக॥கரீந்த்ரவரதாநந்தஸ்ரீதரஸ்ரீநிகேதந। நிரவத்யபரம்ப்ரஹ்மந்ஸர்வலோகபராச்ரய॥ நாதஸேவ்யபதாம்போஜவகுளாபரணாச்ரய।ரமாராமாபிராமாங்கராமக்ர்ஷ்ணேதிகீர்த்தயே॥ ஸ்ரீமத்வேங்கடநாதமாதிபுருஷம்பூர்ணம்பரம்சாச்வதம் ஸ்ரீநாதம்சரணாகார்த்திஹரணம் நாராயணம்ஸம்ச்ரயே। க்ர்ஷ்ணம் விஷ்ணுமநந்தமச்யுதமஜம் கோவிந்தமிந்தீவரச்யாமம்நந்தக சங்கசக்ரருசிரம்த்யாயந்பஜேகீர்த்தயே॥ யேநைதத்பட்யதேநாமமஷ்டவிசோத்தரம்சதம்। அநிஷ்டபக்ஷக்ஷபணமிஷ்டாவாப்திரவாப்யதே) என்றுஸேவித்துக்கொண்டிருக்க;

அவ்வளவிலே திருவேங்கடமுடையானும்மிகவுமுகந்து உடையவருக்கு தீர்த்தப்ரஸாதமும் களபப்ரஸாதமும் ஸ்ரீசடகோபனும்ப்ரஸாதித்துவிடைகொடுத்தருள; உடையவரும் பெரியதிருமலைநம்பிமுதலானமுதலிகளோடேபுறப்பட்டருளிப் பெரியதிருமலைநம்பிதிருமுகமண்டலத்தைப்பார்த்து, "(பெரியார்க்காட்பட்டக்கால் பெறுதபயன் பெறுமாறு) என்று – தேவரீருக்காகத் திருவேங்கடமுடையான் அடியேனைவாழ்வித்தருளினார்" என்றுவிண்ணப்பம்செய்து, "இநு*விண்ணோர்வெற்பாகையாலே 'நித்யஸூரிகளன்றோ இங்கே வர்த்திப்பர்கள், ஆகையாலே நாம் இப்போதேஇழியவேணும்" என்று (க) உத்யோகிக்க; திருமலைநம்பியும், எம்பெருமானாரைப்பார்த்து, "திவ்யதேசத்திலே மூன்றுநாளெழுந்தருளியிருக்கவேணும்" என்று அருளிச்செய்ய; ராமாநுசனும் ஸம்மதித்தருளி மூன்றுநாளும் அமுதுசெய்தருளாமல் திருவேங்கடமுடையானை ஸேவித்துக்கொண்டிருந்து அதுவேதாரகமாக வெழுந்தருளியிருந்து பெரியதிருமலைநம்பியை ஸேவித்துக்கொண்டு இழிந்தருளினார்.



கோவிந்தப்பெருமாள், பாம்பின்வாயிலிருந்த முள்ளையெடுத்தது.

பின்பு, பெரியதிருமலைநம்பிதிருமாளிகையிலேயெழுந்தருளி அங்கே அமுதுசெய்தருளி அவர்ஸந்நிதியிலே இதிஹாஸச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்துக்கு அர்த்தங்கேட்டுக்கொண்டு எழுந்தருளியிருக்கச்செய்தே, கோவிந்தப்பெருமாள் திருமலைநம்பிக்கு ஸகலவிதகைங்கர்ய

ங்களும்செய்துகொண்டுபோருகிறகாலத்திலே ஒருநாள் பெரியதிருமலைநம்பி ராமாநுசன்திருநந்தவநத்தைநோக்கியெழுந்தருள ; அங்கே கோவிந்தப்பெருமாள் ஒருபாம்பின்வாயிலேகையிட்டு மீளவும்நீராடியருளி கைங்கர்யத்திலேபுகுர; உடையவரும் அத்தைக்கண்டு, "கோவிந்தப்பெருமாளே ! என்செய்திர் ?" என்ன ; கோவிந்தப்பெருமாளும் உடையவரைப்பார்த்து, " ஒருபாம்பு நாக்கைநீட்டிக்கொண்டு நோவுபடும்படிகண்டு ஸமீபத்திலேபோய்ப்பார்க்குமளவில் அதின்நாக்கிலே முள்ளிருக்கக்கண்டு அந்தமுள்ளைவாங்கினேன்" என்று விண்ணப்பம் செய்ய ; உடையவரும், "(మైత్రీభజత్వంసర్వత్ర)(மைத்ரீபஜத்வஂஸர்வத்ர)' என்று " இவருடைய பூததயையிருந்தபடியென்" என்று மிகவுமுகந்தருளினார்.

—❧❧✻☙☙—

## திருமலைநம்பிக்குப் படுத்தபடுக்கையில் கோவிந்தப்பெருமாள் படுத்துக்கொண்டுபார்த்தது.

பின்னையுமொருநாள் கோவிந்தப்பெருமாள், திருமலைநம்பிக்குத் திருப்படுக்கைபடுத்துத் தாம்முதலடியிலே படுத்துக்கொண்டுபார்க்க; உடையவரும் இத்தை ஒருநாள்கண்டருளி திருமலைநம்பிக்கு விண்ணப்பம்செய்ய ; திருமலைநம்பியும் கோவிந்தப்பெருமாளையழைத்தருளி, "நீர் நமக்குப்படுத்தபடுக்கையிலே படுத்துக்கொண்டிருந்தீர் என்று கேட்டோம், இப்படிசெய்யலாமோ? இதுக்குபலமேது? 'என்றுகேட்டருள ; கோவிந்தப்பெருமாளும், "நரகம்" என்ன ; நம்பியும், "இப்படியறிந்திருந்துசெய்வானேன்" என்ன ; கோவிந்தப்பெருமாளும், " தேவரீர்திருமேனியிலே ஒன்று உறுத்துதல், கடித்தல்செய்யாமல் கண்வளர்ந்தருளப்புக்கால்அடியேனுக்குநரமேயமையும்" என்றுவிண்ணப்பம்செய்ய;நம்பியும் இதொருப்ரதிபத்திபிருந்தபடியென்" என்று மிகவும் உகந்தருளினார்.

—❧❧✻☙☙—

## பெரியதிருமலைநம்பி, உடையவருக்கு, ஸ்ரீராமாயணத்தை த்வயபரமாக அர்த்தமருளிச்செய்தது.

பின்பு ஸ்ரீராமாயணத்துக்குஅர்த்தமருளிச்செய்துசாற்றி,திருமலைநம்பிதிருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து, " அடியேன் ✻ திருவரங்கப்பெருமாநகரைக்குறித்து விடைகொள்ளுகிறேன்" என்று விண்ணப்பம்செய்ய ; திருமலைநம்பியும், " ஸ்ரீராமாயணத்தை த்வயபரமாகஅர்த்தஞ்சொல்லுகிறோம்" என்று அருளிச்செய்தருளினார். எங்ஙனேயென்னில் ;- ஸ்ரியஃபதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ஸ்ரீவைகுண்டநிகேதநனாய் ஸ்ரீமதநந்தமுகநித்யஸூரிபரிஷந்நிஷேவ்யமாணனாய் அகிலமங்களகுண ஸ்வரூபனாயிருக்கிற ஸர்வேச்வரன், (క్షయన్తమస్యరజస్పరాకే) (க்ஷயந்தமஸ்யரஜஸஃபராகே) என்றும் (త్రిపాదస్యామృతందివి) (த்ரிபாதஸ்யாம்ர்தஂதிவி) என்றும்(తదక్షరేపరమేవ్యోమన్) (యోఽస్యాధ్యక్షఃపరమేవ్యోమన్)

(ததக்ஷரே பரமே வ்யோமந், யோ அத்யாத்த்யக்ஷ: பரமே வ்யோமந்) என்றும், (తద్విష్ణోః పరమం పదం సదా పశ్యన్తి సూరయః) (தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய:) என்றும், (వైకుణ్ఠేతు పరేలోకే శ్రీసహాయో జనార్దనః ఉభాభ్యాం భూమినీళాభ్యాం సేవితః పరమేశ్వరః) (வைகுண்டே து பரே லோகே ஸ்ரீஸஹாயோ ஜநார்த்தந: । உபாப்யாம் பூமிநீளாப்யாம் ஸேவித: பரமேச்வர:) என்றும், (వైకుణ్ఠేతు పరేలోకే శ్రియాసార్ధం జగత్పతిః । ఆస్తే విష్ణురచిన్త్యాత్మా భక్తైర్భాగవతైస్సహ) (வைகுண்டே து பரே லோகே ஸ்ரீயா ஸார்த்தம் ஜகத்பதி: । ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ்ஸஹ) என்றும், (சுடரொளியாய்நின்ற தன்னுடைச்சோதி) என்றும், (தெளிவிசும்பு) என்றும், (అత్యర్కానలదీప్తం తత్ స్థానం విష్ణోర్మహాత్మనః। స్వయైవ ప్రభయా రాజన్ దుష్ప్రేక్ష్యం దేవదానవైః) (அத்யர்க்காநலதீப்தம் தத் ஸ்தாநம் விஷ்ணோர்மஹாத்மந:। ஸ்வயைவ ப்ரபயா ராஜன் துஷ்ப்ரேக்ஷ்யம் தேவதாநவை:) என்றும், (అక్రీడా వివిధా రాజన్ పద్మిన్యశ్చామలోదకాః । యేతే వై నిరయాస్తాత స్థానస్య పరమాత్మనః) (அக்ரீடா விவிதா ராஜன் பத்மிந்யச்சாமலோதகா: । யே தே வை நிரயா ஸ்தாத ஸ்தாநஸ்ய பரமாத்மந:) என்றும், (కాలం స పచతే యత్ర న కాలస్తత్ర వై ప్రభుః) (காலம் ஸ பசதே யத்ர ந காலஸ்தத்ர வை ப்ரபு:) என்றும், (అణ్డకోశాత్సావరణాదముష్మాత్పరతః ప్రభో । స్థితోహం పరమే వ్యోమ్ని అప్రాకృతశరీరవాన్) (அண்டகோசாத் ஸாவரணாத முஷ்மாத் பரத: ப்ரபோ। ஸ்த்திதோஹம் பரமே வ்யோம்நி அப்ராக்ருதசரீரவான்) என்றும், (యత్తత్పురాణమాకాశం సర్వస్మాత్పరమం ధ్రువమ్ । యత్పదం ప్రాప్యతత్త్వజ్ఞా ముచ్యన్తే సర్వకిల్బిషైః) (யத்தத்புராணமாகாசம் ஸர்வஸ்மாத்பரமம் த்ருவம் । யத்பதம் ப்ராப்ய தத்த்வஜ்ஞா முச்யந்தே ஸர்வகில்பிஷை:) என்றும், (అణ్డస్య పరతో నిత్యం త్రిపాదేన విరాజతే। ఇతరేణతు పాదేన ప్రాకృతేణ్డే విరాజతే) (அண்டேப்ய: பரதோ நித்யம் த்ரிபாதேந விராஜதே । இதரேண து பாதேந ப்ராக்ருதேண்டே விராஜதே) என்றும் இத்யாதிகளாலே யோகயாஜ்ஞவல்க்ய பஞ்சமவேத புராண ரத்நஸமுதஞ்சித ப்ராமாண்ய பஞ்சராத்ராதி வசநஸஞ்சயங்களிலும், (நலமந்தமில்லதோர்நாடு) என்றும், (சுடரொளியாய்நின்ற தன்னுடைச்சோதி) என்றும், (தெளிவிசும்பு திருநாடு) என்றும், (மாகவைகுந்தம்) என்றும், (தெளிதாகியசேண்விசும்பு) என்றும் இத்யாதிவாக்யசதங்களாலே * மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களாலே அறுதியிடப்பட்டுள்ள அந்த ஏற்றத்தையுடைத்தாய், (గుణః ప్రధానం పురుషః పరం పదం పరాత్పరం బ్రహ్మచతే విభూతయః) (குணா: ப்ரதாநம் புருஷம் பரம் பதம் பராத்பரம் ப்ரஹ்ம ச தே விபூதய:) என்றும், (పరమయోగివాఙ్మనసాపరిచ్ఛేద్య స్వరూపస్వభావః) (பரமயோகிவாங்மநஸாபரிச்சேத்ய ஸ்வரூப ஸ்வபாவ:) என்று தொடங்கி, (నిరతిశయవైకుణ్ఠనాథా) (நிரதிசய வைகுண்டநாதன்) என்றும், (యద్దూరే మనసో యదేవ తమసః పారే యదత్యద్భుతమ్) (யத்தூரே மநஸோ யதேவ தமஸ:

பாரேயதத்யப்புதம்)என்றும்இப்படி ஸர்வதேசிகஸ்தோமப்ரசஸ்தமாய் வேதாந்தங்களாலும், ரிஷிகளாலும் ஆழ்வார்களாலும் ஆசார்யர்களாலும்ஏககண்டமாக ப்ரதிபாதிக்கப்பட்டுள்ளப்ரபாவாதிசயத்தையுடைய பரமபதத்திலே, (ప్రాకారైశ్చవిమానైశ్చసౌధైరత్నమయైర్వృతః) (ப்ராகாரைஶ்ச விமானைஶ்சஸௌதைரத்நமயைர்வ்ர்த:) என்றும், (మణితోరణచిత్రైశ్చ విచిత్రధ్వజమాలినీ) என்றும்,(కోటివైశ్వానరప్రఖ్యైఃగృహపఙ్క్తిభిరావృతాః) * என்றும், கொடியணிநெடுமதிள்கோபுரங்களையுடைத்தான திருப்படைவீட்டிலே *மணிமாடமாளிகைகளாலேசூழப்பட்டசெம்பொன்செய்கோயிலிலே, (సహస్రస్థూణవిచిత్రితేదృఢఉచ్ఛ్రే,యత్రదేవానామధిదేవఆస్తే)(ஸஹஸ்ரஸ்த்தூணவிசித்ரிதேத்ர்டஉச்ச்ரே,யத்ரதேவாநாமதிதேவஆஸ்தே)என்றும், (మధ్యేతుమణ్టపేదివ్యేరాజస్థానంమహచ్ఛ్రియమ్। మాణిక్యస్తమ్భసాహస్రజుష్టంరత్నమయంశుభం। నిత్యముక్తైస్సమాకీర్ణం సామగానోపశోభితమ్। అతీవతత్సదాపూర్ణమ్)(மத்த்யேதுமண்டபே திவ்யேராஜஸ்தாநமஹச்ச்ரியம் । மாணிக்கஸ்தம்பஸாஹஸ்ரஜுஷ்டம் ரத்நமயம்ஶுபம்॥ நித்யமுக்தைஸ்ஸமாகீர்ணம்ஸாமகாநோபஶோபிதம் । அதீவதத்ஸதாபூர்ணம்)என்றும்சொல்லுகிறபடியே (மாமணிமண்டபத்தந்தமில்பேரின்பத்து,என்றும் சொல்லப்பட்டுள்ள* ஆமோதைகார்ணவமான திருமாமணிமண்டபத்திலே பர்யங்காநவத்யமாஹாத்ம்யமானதிவ்யாஸ்தாநமண்டபத்திலேஉபயவிபூதியும்தொழிலாகவகுப்புண்டு * கோப்புடைய சீரியசிங்காசநத்திலே, (హిరణ్మయేపరేలోకే విరజంబ్రహ్మనిష్కళమ్। తచ్ఛుభ్రంపరంజ్యోతి స్తద్వదాత్మవిదోవిదుః) (ஹிரண்மயேபரேலோகே விராஜிதம் ப்ரஹ்மநிஷ்களம், தச்சுப்ரம்பரம்ஜ்யோதிஸ்தத்வதாத்மவிதோவிது:) என்றும், (నతత్రసూర్యోభాతి నచన్ద్రతారకంనేమేద్యావాపృథివీనవిద్యుతః) (நதத்ரஸூர்யோபாதிநசந்த்ரதாரகம் நேமேத்யாவாப்ர்திவீநவித்யுத:) என்றும்(కుతోయమగ్నిఃతమేవభాన్తమనుభాతి,తస్యభాసాసర్వమిదంవిభాతి) ( குதோயமக்நி:தமேவபாந்தமநுபாதி, தஸ்யபாஸாஸர்வமிதம்விபாதி) என்றும், (దివిసూర్యసహస్రస్యభవేద్యుగపదుత్థితా । యదిభాస్సదృశీసాస్యాత్ భాసస్తస్యమహాత్మనః)(திவிஸூர்யஸஹஸ்ரஸ்யபவேத்யுகபதுத்திதா।யதிபாஸ்ஸத்ர்ஶீஸாஸ்யாத்பாஸஸ்தஸ்யமஹாத்மந:)என்றும்,(స్రగ్వస్త్రాభరణైర్యుక్తైస్స్వానురూపైరనూపమైః।చిన్మయైస్స్వప్రకాశైశ్చఅన్యోన్యరుచిరఞ్జితైః) (ஸ்ரக்வஸ்த்ராபரணைர்யுக்தைஸ்ஸ்வாநுரூபைரநூபமை: । சிந்மயைஸ்ஸ்வப்ரகாஶைஶ்வ அந்யோந்யருசிரஞ்ஜிதை:)என்றும்,(சுழிபட்டோடும்சுடர்ச்சோதி)என்றும்,(சோதிவெள்ளத்தினுள்ளேயெழுவதோருரு)என்றும்சொல்லுகிறபடியேநிரவதிகதேஜோரூபமாய்,ஸதைகரூபமாய்,நித்யஸித்தபரமேஷ்ட்யாதிபஞ்சோபநிஷண்மயமாய்,ஸ்வாநுரூபமாய்,சிந்மயமாய்விளங்குகிறகிரீடாதிநூபுராந்தமானதிவ்யஸ்ரக்வஸ்த்ராபரணபூஷிதமாய், ஆயுதகோடியிலும்ஆபரணகோடியிலும்மெய்க்காட்டுகிறதிவ்யாயுதங்களாலே

தீப்யமாநாதிசய ஸௌந்தர்யஸௌகுமார்யலாவண்ய யௌவநாத்ய நந்தகுணகணநிதியாய், திவ்யமங்களவிக்ரஹவிசிஷ்டனுய், வடிவழகட்டிக்கக் காட்டிலெறித்த நிலாவாகாமே, ( బృహచ్ఛరీరో౽పి విమానదేహో యువాకుమారత్వముపేయివాన్ హరిః। రేమే శ్రియా సౌజగతాంజనన్యా సుజ్యోత్స్నయా చన్ద్ర ఇవామృతాంశుః) (ப்ர்ஹச்சரீரோபிவிமாநதேஹோ யுவாகுமாரத்வமுபேயிவாந்ஹரிః । ரேமேஶ்ரியாஸௌஜகதாஂஜநந்யாஸுஜ்யோத்ஸ்நயாசந்த்ரஇவாம்ர்தாஂசுః) என்றும், (உடனமர்காதல்மகளிர் திருமகள்மண்மகளாயர்மடமகள்) என்றும் சொல்லுகிறபடியே இரண்டாற்றிலுமிருந்தநுபவிக்கிற * கூந்தல்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும்குலவாயர்கொழுந்துக்கும் கேள்வனைக்கொண்டு ஸ்ரீபூமிநீளைகளுடனே கூட வீற்றிருந்து * கண்ணன்விண்ணூரிலே திவ்யபோகம்நடவாநிற்க அச்சேர்த்தியழகைக்கண்டநுபவித்து நிர்ப்பரஸ்துதிபண்ணி, (நமః) என்பது, (ஜிதம்) என்பது, (பல்லாண்டு) என்பது, அக்ரமமாக * பிணங்கி அமரர்பிதற்றுமதுகண்டு, (ஆங்காரவாரமதுகேட்டழலுமிழும் பூங்காரரவணை) என்கிறபடியே, அஸ்தாநேரக்ஷாவ்யஸநிகளாய், தாஸ்யதர்ஷ்ணுகலிதபரிகரராய், ( సూరయో నిత్యసంసిద్ధాస్సర్వదా సర్వదర్శినః ) (ஸூரயோநித்யஸம்ஸித்தாஸ்ஸர்வதாஸர்வதர்சிநః) என்கிற * அயர்வறுமமரர்களாலும், ( సూర్యకోటిప్రతీకాశాః పూర్ణేన్ద్వయుతసన్నిభాః। యస్మిన్ పదే విరాజన్తే ముక్తాస్సంసారబన్ధనాత్) (ஸூர்யகோடிப்ரதீகாஶாః பூர்ணேந்த்வயுதஸந்நிபாః । யஸ்மிந்பதேவிராஜந்தே முக்தாஸ்ஸம்ஸாரபந்தநாத் ) என்றும் சொல்லுகிறபடியே அநந்தவைநதேயாத்யந்தரங்கரான அநந்தமுகபர்ந்தங்களாலும் அநவரதபரிசர்யமாணசரணநளிநனைக்கொண்டு, (రాజాధిరాజస్సర్వేషాం విష్ణుర్బ్రహ్మమయో మహాన్। ఈశ్వరం తం విజానీమః స పితా స ప్రజాపతిః (ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம்விஷ்ணுப்ரஹ்மமயோமஹாந் । ஈச்வரம்தம் விஜாநீமःஸபிதாஸப்ரஜாபதிः) என்கிற வேண்டப்பாடுதோற்ற * ஏழுலகும்தனிக்கோல்செல்லவீற்றிருந்து, (பொங்கோதஞ்சூழ்ந்தபுவனியும் விண்ணுலகு । மங்காதுஞ்சோராமேயாள்கின்றவெம்பெருமான் । செங்கோலுடையதிருவரங்கச்செல்வனர்) என்றும் சொல்லுகிறபடியேஉபயவிபூதிநிர்வாஹகனுய், ( கண்டவாற்றல்தனதேயுலகெனநின்றான் ) என்கிறபடியே – காட்சியிலே உபயவிபூதிநாயகனைமைதோற்றவெழுந்தருளியிருந்து, (స్వేతరసమస్తవస్తువిలక్షణజ్ఞానానన్దైకస్వరూపః, (ஸ்வேதரஸமஸ்தவஸ்துவிலக்ஷணஜ்ஞாநாநந்தைகஸ்வரூபः) என்கிறபடியே தானும் நிரதிசயாநந்தயுக்தனுய், (அயர்வறுமமரர்கள்) என்கிறபடியே நித்யாஸங்குசிதஜ்ஞாநராயிருந்துள்ள அநந்தகருடவிஷ்வக்ஸேநப்ரமுகரான நித்யஸூரிகளையும், (இயக்கெலாமறுத்து) என்கிறபடியே நிவர்த்தஸம்ஸாரருமாய் அஸங்குசிதஜ்ஞாநருமான நித்யரோபாதி லப்தகைங்கர்யரான முக்தரையும் ஆநந்திப்பித்துக்கொண்டுபோராநிற்க ; இவர்க

ளோபாநிஸம்ஸாரிகளும் நம்மையநுபவித்து, அநுபவஜநிதப்ரீதிகாரிதாஉசேஷாவஸ்த்தோசிதா உசேஷசேஷகைகரதிரூப நித்யநிரவத்ய நிரதிசயகைங்கர்யமாகிற மஹாஸம்பத்தைப்பெற்றுவாழுகைக்குயோக்யதையுண்டாயிருக்கச்செய்தே "இழந்திருப்பதே!" என்று அங்குத்தைநிலநுபவங்களொன்றும்உண்டாருக்காட்டாதே இவன் தனியரைப்போலே, (ஸ்வகாகிநரமேத) (ஸவுகாகிநரமேத) என்கிறபடியே போரநொந்து, இவர்கள் கரணகளேபரசூந்யராய் இறகொடிந்தபக்ஷிபோலேயிருக்கிறபடியைக்கண்டு,(கரணகளேபரைர்க்கடயிதும்தயமாநமநா:)(கரணகளேபரைர்க்கடயிதும்தயமாநமநா:) என்றும், (பல்லுயிர்க்குமாக்கைகொடுத்தளித்தகோன்) என்றும்சொல்லுகிறபடியே பரமதயாளுவாய்க்கொண்டு ஸகலாத்மாக்களுக்கும் கரணகளேபரப்ரதாநத்தைப்பண்ணியருள; ஸமிதைதறிக்கக்கொடுத்தகத்திகொண்டு பசுவின்வாலைத்தறிப்பாரைப்போலேயும், களையெடுக்கக்கொடுத்தகோலைக்கொண்டு கண்ணைக்கலக்கிக்கொள்ளுவாரைப்போலேயும், ஆறுநீஞ்சக்கொடுத்த தெப்பத்தைக்கொண்டுஅக்கரையேறலாயிருக்கஅதுசெய்யாதேநீர்வாய்ப்பாலேயொழுகிக் கடலிலேபுகுவாரைப்போலேயும், (விசித்ரா தேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும்। பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா) (விசித்ராதேஹஸம்பத்திரீச்வராயநிவேதிதும் । பூர்வமேவக்ர்தாப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா) என்றும், (நாடாதமலர்நாடி நாடோறும்நாரணன்றன் । வாடாதமலரடிக்கீழ்வைக்கவேவகுக்கின்று) என்றும், (மாயவன் தன்னைவணங்கவைத்தகரணமிவை) என்றும் சொல்லுகிறபடியே, (தேனேமலரும்) என்கிற ஸ்வசரணகமலபரிசரணத்துக்குறுப்பாக கரசரணாத்யவயவஸங்காதாத்மகமான சரீரத்தைக்கொடுக்க; அதின்படிசெய்யாதே*ஆக்கையின்வழியுழன்று சப்தாதிவிஷயப்ராவண்யத்துக் குறுப்பாக்கி கர்மப்ரவாஹத்தால் * பிறவியென்னும்பெருங்கடலிலேபுகுந்து துக்கப்படுகிறபடியைக்கண்டு நல்வழிகண்டு நடக்கைக்குடலாக, (ஶாஸநாச்சாஸ்த்ரம்) (சாஸநாச்சாஸ்த்ரம்) என்றும் (ஹர்த்தும் தமஸ்ஸதஸதீ ச விவேக்துமீஶோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி) (ஹர்த்தும்தமஸ்ஸதஸதீசவிவேக்துமீசோ மாநம்ப்ரதீபமிவகாருணிகோததாதி) என்றும், (கலைகளும்வேதமும் நீதிநூலும் கற்பமும்சொற்பொருள்தானும்மற்றநிலைகளும்வானவர்க்கும்பிறர்க்கும் நீர்மையினலருள்செய்து)என்றும், (தொண்டேசெய்தென்றும்தொழுதுவழியொழுகப்பண்டேபரமன்பணித்தபணிவகை) என்றும், க்ர்பையால்சாஸ்த்ரப்ரதாநத்தைப்பண்ணினவிடத்திலும் அதின்படிசெய்யாதே, (ஈஶ்வரோ(அ)ஹமஹம் போகீ ஸித்தோ(அ)ஹம் பலவாந் ஸுகீ। ஆட்யோ(அ)பிஜநவாநஸ்மி கோ(அ)ந்யோ(அ)ஸ்தி ஸத்ருஶோ மயா) (ஈஶ்வரோஹமஹம் போகீஸித்தோஹம்பலவாந்ஸுகீ । ஆட்யோபிஜநவாநஸ்மிகோந்யோஸ்தி ஸத்ர்சோமயா) என்றும், (யோ(அ)ந்யதா ஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே।

ఇత్థేనవక్ర్థంపాపంచోరేణాత్మాపహారిణా)(யோங்யதாஸந்தமாத்மாநமங்யதாப்ரதி பத்யதே । கி0தேநநக்ர்தம்பாப0சோரேணாத்மாபஹாரிணா ) என்றும், ( கொல்வனமுதலாவல்லன ) என்கிறபடியே அகிலபாபஹேதுவாய் ஸ்வஸ்வாதந்த்ர்யரூபமான ஆத்மாபஹாரத்தைப்பண்ணி, அநாதிகர்ம வாஸநாதோஷதூஷிதராயிருக்கிறபடியைக்கண்டு, ஓலைப்புறத்துச்செல் லாதராஜ்யத்தை எடுத்துவிட்டுச்செலுத்திக்கொள்ளும் ராஜாக்களைப் போலே, "நாமேபோய்த்திருத்தவேணும்" என்று திருவுள்ளம்பற்றி, (అజాయమానోబహుధావిజాయతే।తస్యధీరాఃపరిజానన్తియోనిమ్) (அஜாயமாநோ பஹுதாவிஜாயதே,தஸ்யதீராஃபரிஜாநந்தியோநிம்) (పితాపుత్రేణపిత్ర్మాన్ యోనియోనౌ ) ( பிதாபுத்ரேணபித்ர்மாங்யோநியோநௌ ) என்றும், (పరిత్రాణాయసాధూనాంవినాశాయచదుష్కృతామ్ । ధర్మసంస్థాపనార్థాయసమ్భవామి యుగేయుగే) (பரித்ராணாயஸாதூநா0விநாஶாயசதுஷ்க்ர்தாம்।தர்மஸ0ஸ் த்தாபநார்த்தாயஸம்பவாமியுகேயுகே)என்றும்,(பலபிறப்பாயொளிவரு முழுநலம்) என்றும், (மீனோடாமைகேழலரிகுறளாய் முன்னுமிராம னாய்) என்றும்சொல்லுகிறபடியே - மத்ஸ்யாத்யநேகாவதாரங்களைப்ப ண்ணினவிடத்திலும் ;

மத்ஸ்யாவதாரம் ஜ்ஞாநப்ரதமேயாகிலும் ஜலாசயஸம்பந்த மொழியத்தரியாதபடியாலும், கூர்மாவதாரம் ஸகலஜகதுத்தாரஹே துவேயாகிலும் பர்வதாக்ராந்தமாய் வநமத்யே அதஃபதிதமானகை யாலும், ஸ்ரீவராஹாவதாரம் பூம்யுத்தரணப்ரவர்த்தமாய் பூதார மாய்ப்போருகையாலும், ஸ்ரீந்ர்ஸி0ஹாவதாரம் ப்ரஹ்லாதைகஜீவாது வேயாகிலும் கண்டாதுபரி பஹுமுகமாகையாலும், ஸ்ரீவாமநாவதாரம் க்ரமேணநிஜபதாஸ்ரித கார்யகரமாயிருந்ததேயாகிலும் ஸகலலோகதா னைகமார்க்கணமாயிருக்கையாலும், பரசுராமாவதாரம் மழுவேந்தினு லும்பரப்ரத்யயம்பிறவாதபடியாலும் ஒருவர்திருந்தக்காணாமையாலும், (రామోరామోరామఇతిప్రజానామభవన్ కథాః। రామభూతంజగదభూద్రామేరాజ్యంప్రశా సతి) (ராமோராமோராமஇதி ப்ரஜாநாமபவங்கதாஃ। ராமபூத0ஜகதபூத் ராமேராஜ்ய0ப்ரசாஸதி) என்றும், (యశ్చరామంనపశ్యేత్తుయఞ్చరామోనప శ్యతి।నిన్దితస్సవసేల్లోకేస్వాత్మాప్యేనంవిగర్హతే ) (யஶ்சராமோநபச்யேத்துயஞ்ச ராமோநபச்யதி । நிந்திதஸ்ஸவஸேல்லோகேஸ்வாத்மாப்யேந0விகர்ஹ தே) என்றும்சொல்லுகிறபடியே சாஸ்த்ரசஸ்த்ரம்மூனமடிந்தால்எடு க்கும் ப்ரஹ்மாஸ்த்ரம்போலே * பு0ஸா0த்ர்ஷ்டிசித்தாபஹாரியான வடிவழகாலே திருத்தவேணுமென்று திருவுள்ளம்பற்றித்ரேதாயுகத்தி லே திருவயோத்த்யையிலே சக்ரவர்த்திதிருமகனாய் வந்தவதரித் தருளினார்.

கோபித்துவிட்டவாறே அப்போது என்னநினைத்திருந்தீர்'' என்ன; ஆழ்வானும, '' உடைமை உடையவனிட்டவழக்காயிருக்குமாகையால்லை அடியேனுக்கு இதில் அந்வயமில்லை'' என்று அருளிச்செய்தருளினார்.

உடையவரும், பின்புவாக்யத்தை ஆலோசித்து ஆழ்வானையழைத்து, பகவச்சேஷத்வத்தோடேகூடின வாக்யமருளிச்செய்தருள; ஆழ்வானும், அதிசீக்ரமாகத் திருவெழுத்துச்சாத்த; இப்படியே ஸ்ரீபாஷ்யஞ்செய்தருளி ஆளவந்தாருடையப்ரதமமான இழவைத்தீர்த்தருளினார். உடையவரும், ''ஸ்ரீகோசத்தை சாரதாபீடத்தேறவனுப்பி, லோகத்திலே விசதமாக்கவேணும்'' என்று தம்முடையஸந்நிதியில் கிடாம்பியாச்சான், கிடாம்பிப்பெருமாள்முதலானஸ்ரீவைஷ்ணவர்கள்கையில் ஸ்ரீகோசத்தைக்கொடுத்துப்போகவிட்டருள ; அவர்களும் அப்படியே கொண்டுசெல்ல ; ஸரஸ்வதியும் அத்தைக்கண்டு பண்டுபோலே ஸத்கரித்து ஸ்ரீகோசத்தைசிரஸாவஹித்து உடையவருக்கு ''ஸ்ரீபாஷ்யகாரர்'' என்று திருநாமம்சாத்தி பஹூபசாரத்துடனேபோகவிட ;

—※—

கிடாம்பியாச்சான்,தும்பையூர்கொண்டியென்பவளுக்குக்கொடுத்த முறிப்படியே திருவேங்கடமுடையான் பரமபதமளித்தது.

அவர்களும் அப்படியேவருகிறவளவிலே,''தும்பையூர்கொண்டி'' என்பாளொருகோபாங்கனை ததிவிக்ரயம்பண்ணித்தந்தவள், க்ரயத்ரவ்யார்த்தமாகவந்து,''கிடாம்பியாச்சான்,ப்ரஸாதித்தருளினஸ்ரீபாததீர்த்த தளிகைப்ரஸாதத்தாலேஸம்யஜ்ஞாநோதயமுண்டாய்,''அடியேனுக்கு ததிமூல்யம்வேண்டா, லோகாந்தரம்வேணும்''என்ன; ''அதுக்குத்திருவேங்கடவனேகடவன்''என்ன;''அவர்க்குதேவரீர்ஒருசிறுமுறிப்ரஸாதித்தருளவேணும்''என்ன;அவரும்எழுதிகொடுக்க;அவளும் அத்தைக்கொண்டுதிருமலையிலேசெல்ல;திருவேங்கடமுடையான்எதிரேசென்று முறியைவாசித்துக்கொண்டு திருநாடுப்ரஸாதித்தருளினார். இந்தவர்த்தாந்தத்தை, (శ్రీభాష్యం దర్శయిత్వా యతిపతిరచితం శారదాయై నివృత్య నత్వా శ్రీవేంకటేశం పదపరమపదం దత్తవాన్ గోపికాయై । ఆఖ్యం వేదోత్తమాంగోదయన ఇతిదధత్ భాష్యకారేణ దత్తా మాత్రేయాచార్యవిష్ణో రనుజమనుదినం సాదరం తం నమామి ) ( ஸ்ரீபாஷ்யம் தர்ஶயித்வா யதிபதிரசிதம் ஶாரதாயைநிவ்ர்த்ய நத்வாஸ்ரீவேங்கடேசம் பதிபரமபதம் தத்தவாந்கோபிகாயை। ஆக்யாம்வேதோத்தமாங்கோதயந இதிதத்பாஷ்யகாரேணதத்தா மாத்ரேயாசார்யவிஷ்ணோரநுஜமநுதினம்ஸாதரம்தம்நமாமி) என்றார்களிறே ; ( పురా స్తూత్రైర్వ్యాసః శ్రుతిశతశిరోర్థం గ్రథితవాన్ విదవ్రేతం శ్రావ్యం వకుళధర రాహేత్యస పునః। ఇదానీంతౌ గ్రన్థౌ ఘటయితుమలం యద్గిరస్సౌ పునర్జజ్ఞే రామావరజ ఇతి సర బ్రహ్మముకురః) என்றும், ( ఇత్యేవం విప్లవంద్యో భగవాన్ భావయితుం హరిః । బాదరాయణసంజ్ఞస్య మునేర్వర్యయితుం మతమ్॥ శారీరక

(Telugu-script Sanskrit passage) என்றும் இப்படி இவர் ஸ்ரீபாஷ்யநிர்மாணவைபவம் சொல்லப்பட்டது.

திருக்குருகைப்பிரான்பிள்ளான், திருவாய்மொழிக்கு ஆறுயிரம் க்ரந்தத்தில் ஒருவ்யாக்யாநஞ்செய்தருளினரென்பது.

விசேஷித்து ஆழ்வார்திருநாமத்தையுடையராய்த் தமக்கு சிஷ்ய புத்ரரான திருக்குருகைப்பிரான்பிள்ளான், மிகவுமநுவர்த்தித்து, (எதிராசர்பேரருளால்) என்னும்படி அருளோடேகூடின அநுமதியுடனே திருவாய்மொழிக்கு ஸ்ரீவிஷ்ணுபுராணஸங்க்யையிலே ஆறுயிரம்க்ரந்தஸங்க்யையாம்படி ஒருவ்யாக்யாநம்செய்தருளினர்; ஒன்பதினாயிரம் க்ரந்தஸங்க்யையான ஸ்ரீபாஷ்யத்துக்கும் அவரேப்ரவர்த்தகரிறே.

உடையவர், எழுபத்துநாலுஸிம்ஹாஸநாதிபதிகளும், ஒன்பதினாயிரம் ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றவர்களும் ஸேவிக்க வாழ்ந்தருளினரென்பது.

இப்படிஸம்ஸ்க்ர்தத்ராவிடவேதமென்னும்படியானஉபயவேதாந்தங்களிலும் ப்ரதிபாதிக்கப்படுமவனாய் ஸர்வேச்வரனாய்ஸர்வஸ்மாத்பரனாய் ஸ்ரீமந்நாராயணனானபெரியபெருமாள்வைபவத்தைப்ரகாசிப்பித்துக்கொண்டு அவர்க்கு ப்ராணபூதராய் ப்ரபந்நஜநகூடஸ்த்தராயிருக்கிற இந்த எம்பெருமானாருடையப்ரபாவம்எங்ஙனேயென்றால்;- (தென்புலன்மன் பதிசாராவகைதிருத்துமாரிய, ரென்பர்களெழுபத்துநான்கெதிகளெழுநூற்றுவர், ஒன்பதினாயிரமுபவீதமுடை பாகவதர், அன்பர் சாத்தாதவர்களாறிரண்டாயிரத்தவரே|| தென்னரங்கநகர்செறிந்தபாகவததிரட்கெல்லே, சொன்னதொகைதிசைகள்தனில் சுற்றுள்ளதிருப்பதிகள், தன்னிலங்கங்கெதிராசர் சரண்திருத்திச்சார்ந்தவரைப், பன்னவரிதெண்ணிடினுமநந்தமெனப்பகர்வாரே) என்று இங்ஙனேயிறேயிருப்பது.

இப்படிபெருக்கத்துடனே த்வயவர்த்தகராய் வாழ்ந்துபோருகிறகாலத்திலே, ஒருநாள் பெரியதிருநாளிலே தீர்த்தமானதிருவுத்திரத்தினன்று பெருமாளும் நாய்ச்சியார்கோயிலிலேசேர்த்தியிலே, * வீற்றிருந்தேழுலகில்படியே இனிதுடன்வீற்றிருந்துரஸோத்தரராயெழுந்தருளியிருக்க; எம்பெருமானாரும், ஏகாந்தமாக ஸேவித்துக்கொண்டு, (அடிமைசெய்வார் திருமாலுக்கே) என்கிறபடியே இருவருமானசேர்த்தியிலே, தாமும் ராமாநுசனனமைதோற்ற, (Telugu-script Sanskrit) (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்று எடுத்துக்கைநீட்டிக் கொண்டுநிற்கிறவர், தம்முடையபூர்வவ்ர்த்தத்தை அநுஸந்தித்து ஆர்த்

தராய், (భగవన్నారాయణాభిమతానురూప) (பகவந்நாராயணாபிமதாநுரூப) என்றுதொடங்கி, (అఖిలజగన్మాతరమస్మిన్మాతరమ్-అనన్యశరణశ్శరణమహంప్రపద్యే) (அகிலஜகந்மாதரமஸ்மிந்மாதரம்-அநந்யஶ்ரஶ்ஶரணமஹம்ப்ரபத்யே) என்றுதம்முடையஅபராதங்களையும்பார்த்துஉபேக்ஷியாதபடி*விஷ்ணுவக்ஷஸ்த்தலேயாயிருக்கிற லக்ஷ்மியை புருஷகாரமாகப்பற்றி, தாம்பண்ணுகிறசரணாகதி யதாவஸ்த்திதமாம்படி அபேக்ஷிக்க ; அவளும், (అస్తుతేతయైవసర్వంసంపత్స్యతే) (அஸ்துதேதயைவஸர்வம்ஸம்பத்ஸ்யதே) என்ன; அநந்தரம், அவள்முன்னாக, (అఖిలహేయప్రత్యనీక) (அகிலஹேயப்ரத்யநீக) இத்யாதி சூர்ணிகைகளாலே ஸ்வரூபரூபகுணவிபூதிகளாலே பரிபூர்ணனாயிருக்கிற ஸ்ரீமந்நாராயணசரணவரணம்பண்ணி ப்ராப்யமானகைங்கர்யத்தை அபேக்ஷித்து, அநந்தரம், (మదీయానాది) (மதீயாநாதி) இத்யாதிசூர்ணிகையாலே உத்தரவாக்யத்தில் கைங்கர்யவிரோதிநிவ்ருத்தியையும் இவர் அபேக்ஷிக்கிறபடியே, “ அத்தைநாமேபோக்குகிறோம், நீர்பேற்றில்நிஸ்ஸம்ஶயராயிரும்” என்று பெரியபெருமாள்தேற்றியருளின சரணாகதிகத்யத்தையும், அநந்தரம் அத்தையநுவதித்து ஸ்வதோஷஜ்ஞாபநபூர்வகமாகப்பெரியபெருமாள் திருவடிகளிலேசரணம்புக்குதத்விஷயத் திலே ஸ்வதசையைப்பேசுகிற ஸ்ரீரங்ககத்யத்தையும், தத்பலபரம்பரைகளை ஸ்ரீவைகுண்டநாதன்விஷயத்தில் ப்ரபத்தியாலேபெறுவதாகத்தலைக்கட்டுகிறஸ்ரீவைகுண்டகத்யத்தையுமருளிச்செய்து, (సవిశేషసాక్షాత్కర్తృకర్ణదత్తాన్ నిక్షేపవిద్యానిరవద్యభూమా। గద్యాత్మనాకర్తృస్వజనోపభోగ్యాంసంవాదరూపాం విదధేదయాలుః) (ஸவிஶேஷஸாக்ஷாத்கர்த்தகர்ணதத்தாந் நிக்ஷேபவித்யாநிரவத்யபூமா । கத்யாத்மநாகர்த்ஸ்நஜநோபபோக்யாம் ஸம்வாதரூபாம் விததேதயாலுः என்றும், (లక్ష్మీపతేర్యతిపతేశ్చదయైకధామ్నోర్యోసౌపురాసమజనిష్టజగద్ధితార్థమ్ । ప్రాప్యంప్రకాశయతువఃపరమంరహస్యం సంవాదఏషశరణాగతిమంత్రసారః) (லக்ஷ்மீபதேர்யதிபதேஶ்சதயைகதாம்நோர்யோஸௌபுராஸமஜநிஷ்டஜகத்திதார்த்தம் ப்ராப்யம்ப்ரகாஶயதுவஃபரமம் ரஹஸ்யம் ஸம்வாதஏஷசரணாகதிமந்த்ரஸாரः) என்றும், (ప్రపత్తివిషయేగద్యత్రయంచాకరోత్) (ப்ரபத்திவிஷயேகத்யத்ரயஞ்சாகரோத்) என்கிறபடியே- (న్యాస ఇతిబ్రహ్మ. న్యాసఇత్యాహుర్మనీషిణోబ్రహ్మణమ్, తస్మాన్న్యాసమేషాంతపసామతిరిక్తమాహుః) (ந்யாஸ இதிப்ரஹ்ம, ந்யாஸ இத்யாஹுர்மநீஷிணோ[illegible], தஸ்மாந்யாஸமேஷாமதிரிக்தமாஹு: ) என்று ஓ[illegible]தவாநாம்குஹ்யமாயிருக்கிற பரமரஹஸ்யத்தைப்ரகாசிப்பித்[illegible], அநந்தரம், நித்யதிருவாராதநக்ரமத்தையுமருளிச்செய்து உபகரித்தருளினாரிறே ; இதுதான் ஸ்ரீகத்யத்தில்ப்ரார்த்தித்தருளின நித்யகைங்கர்யத்தை மேல் நித்யமாகப் போரும்படிக்கு இங்கே சிக்ஷிதமாம்படி செய்தருளினதாய்த்து. ஏவம்விதமான பரமரஹஸ்யத்தை, தாமும் பெரியபெருமாளிந்ததாகஅநுஸந்தித்துவிடவமைந்திருக்களெல்லாநுமநுஸந்திக்கும்படி

ப்ரபந்தீகரித்து உபகரித்தருளினாரிறே தம்முடையபரமக்ருபையாலே ; பனிநிழல்போலே தம்மளவில்பர்யவஸிக்கையன்றிக்கே, (பொற்கற்பகமெம்மிராமாநுசமுனி) என்கிறபடியே கல்பகவ்ருக்ஷச்சாயையைப்போலே (రామానుజపదచ్ఛాయా) (ராமாநுஜபதச்சாயா) என்று எல்லார்க்கும் ஒதுங்கும்படியாயிருக்குமவராகையாலே தம்மைப்பற்றினவர்களெல்லாரும், பாஷ்யத்திலே கர்மஜ்ஞாநஸஹக்ருதையானபக்தியை உபாயமென்று சொல்லுகையாலே, "துஸ்ஸாதைகயானபக்தி எங்ஙனேஉபாயமாகிறது" என்று மந்தமதிகள்ஸந்தேஹித்து பயப்படாமல்நிர்ப்பயராம்படி தம்மைவிச்வஸித்திருக்குமவர்களுக்கு உஜ்ஜீவநத்துக்குடலாகவிறே இத்தைவெளியிட்டருளிற்று.

—*—

பட்டினியேகண்வளர்ந்தருளின கூரத்தாழ்வான், நம்பெருமாள் வரவிட்ட அக்காரவடிசில்தளிகையைத் தாமும்தேவிகளும் அமுதுசெய்ய, அதுவேஹேதுவாக பட்டரும் சீராமப்பிள்ளையும் அவதரித்தார்களென்பது.

இப்படி * ஊரும்நாடுமுலகமும் தம்மைப்போலேயாக்கி வாழுங்காலத்திலே, இவர்ஸ்ரீபாதத்திலே ஆச்ரயித்தமுதலிகளிலேகூரத்தாழ்வான்ஸகலசாஸ்த்ரவித்தமராய் ஆசார்யபதைகநிஷ்டராய் விஹிதவிஷயவிரக்தராய்,* అభిగమనోపాదానేజ్యాస్వాధ్యాయ யோகங்களென்கிற பஞ்சகாலபராயணராயிராநிற்க ; ஒருக்கால் வர்ஷகாலத்திலே மத்யாஹ்நமளவாக வர்ஷம்வர்ஷிக்க ; ஸங்கமநகாலம்தவற ; மாத்யந்திநமானவாறே உபாதாநகாலம்தவற ; அஹந்யஹநி * சிஷ்டாக்ரகண்யஜந க்ருஹங்களில் உபாதாநம்பண்ணிவந்தேதிருமேனியாத்ரைநடவாநிற்க ; அற்றைக்குத்திருமாளிகையிலே ஸஞ்சிதபதார்த்தங்களொன்றுமில்லாமலிருக்கையாலே ஒருபலத்தையும் நினையாமல்நீராடியெழுந்தருளித் திருமண்காப்புச்சாத்தியருளிதம்முடையதிருவாராதநஎம்பெருமானையும் திருவாராதநஞ்செய்தருளித் தீர்த்தஸ்வீகாரமபண்ணியருளித் தாமும் தீர்த்தஸ்வீகாரம்பெற்று, திருவாய்மொழியநுஸந்தித்துக்கொண்டிருந்து ஸாயங்காலமானவாறே காலோசிதமானகர்மாநுஷ்டாநங்களையுஞ்செய்து நம்பெருமாளையும் திருவடித்தொழுதுமீண்டெழுந்தருளித் திருவாய்மொழியநுஸந்தித்துக்கொண்டு அதுவேதாரகமாகக்கண்வளர்ந்தருள ; அவ்வளவிலேபெருமாள் அவஸரமமுது செய்து திருச்சின்னம்பணிமாறினவாறே ஆண்டாளும் காஹளநாதங்கேட்டு, "உம்முடையபக்தர் இப்படிப் பட்டினியிருக்க நீர் என்ன குலாவிக்குலாவி அமுதுசெய்கிறீர்" என்ன ; அதுபெருமாள்திருச்செவியிலுற்று, திண்ணையிலேநித்ரைபண்ணுகிற உத்தமநம்பி கனவிலே பெருமாளெழுந்தருளி, "நம்பீ ! ஆழ்வான் இற்றைக்கு உபோஷிதரா

யிருக்கிறார், நம்மக்காரவடிசில்தளிகையிலேஒருதளிகையைசிரஸாவஹி த்துக்கொண்டு உபயசாமரவாத்யஸஹிதமாகக்கொண்டுபோம்'' என்றனுப்ப, அப்படியேநம்பியும் ஆழ்வான்திருமாளிகைவாசலிலேசெல்ல; ஆழ்வானும் பதறியெழுந்திருந்து, "இதென்'' என்று திகைத்து எதிரேசென்றவளவிலே, நம்பியும், "ஆழ்வான்! பெருமாள்உமக்கு அக்காரவடிசில்தளிகையனுப்பியருளினார், தளிகையைஅங்கீகரியும்'' என்ன; "மஹாப்ரஸாதம்'' என்று சிரஸாவஹித்துக்கொண்டு, "பெருமாள், அடியிலே அடியேனுக்கு ஸர்வாபீஷ்டமும்ப்ரஸாதித்தருளினார், ஆகையால் இது க்ரயத்தளிகையாயிருக்கும்'' என்று ஆண்டாளுக்கும் தமக்கும் இரண்டுதிரளையயங்கீகரித்து சேஷத்தைவிட்டு ஆண்டாளைப்பார்த்து, "என்னநினைத்தாய்'' என்ன ; ஆண்டாளும், "அடியேன் ஒன்றும்நினைக்கவில்லை, அவஸரமமுதுசெய்து திருச்சின்னம்பணிமாறினவாறே, "உம்பக்தர் இப்படி பட்டினியிருக்க நீர் இப்படி குலாவிக்குலாவி அமுதுசெய்தீர் என்றவித்தனை'' என்று விண்ணப்பஞ்செய்ய ; ஆழ்வானும், "இப்படிசொல்லலாமோ'' என்றுவெறுத்து ஆண்டாளுக்கு ஒருதிரளையைப்ரஸாதித்துதாமும்ஒருதிரளையையமுதுசெய்தருள ; பட்டரும் ஸ்ரீராமப்பிள்ளையும் அவதரிக்கைக்கு ஹேது இப்பிண்டங்களிறே.

—⁂—

எம்பாரெழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்த கூரத்தாழ்வான்குமாரருக்கு உடையவர் "பராசரபட்டர்'' என்று திருநாமம்சாத்தியது.

பின்பு சிலநாள்கழிந்தவாறே பெருமாளுடைய ப்ரஸாதத்தாலே ஆழ்வானுக்கு ஒருகுமாரர் திருவவதரிக்க ; ஆழ்வானும், "திருநாமமாதியான வுஜ்ஜீவநத்துக்கு உடையவரேகடவர்'' என்று நிச்சயித்து ஜாதகர்மாதிகளைச்செய்யாதிருக்க ; (ஸூதிகாகம்) என்றுநிவர்த்தியானவுடனே, எம்பெருமானாரும் முதலிகளோடே ஆழ்வான்திருமாளிகையேறவெழுந்தருளி எம்பாரைப்பார்த்து, "ஆழ்வான்குமாரரையெடுத்துக்கொண்டுவாரும்'' என்று அருளிச்செய்ய ; அவரும் அப்படியே உள்ளேயெழுந்தருளி ஆழ்வான்குமாரரை எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவாராநிற்கச்செய்தே, (ஸமஹாத்மா பவிஷ்யதி) (ஸமஹாத்மா பவிஷ்யதி) என்று ஹ்யேஷ்யமானதிவ்யகுணசக்திகளெல்லாம்சிசோரவஸ்தையிலேகிழலிடுகையாலேத்வயாநுஸந்தாநம்பண்ணிக்கொண்டு எழுந்தருளி, எம்பெருமானார் * தாமரைக்கண்களாலேநோக்கும்படிக்குத் திருக்கைத்தலத்திலேபிடிக்க ; எம்பெருமானாரும், (அவ்யாஹததமமைஸ்வர்யம்தேஜோ ஜீவதுபாலக:) (அவ்யாஹததமமைஸ்வர்யம்தேஜோஜீவதுபாலகஃ) என்றும், (ராமோராஜீவலோசநஃ) (ராமோராஜீவலோசநஃ) என்றும், (காமேவிவண்ணான் கமலநயநத்தன்) என்றும் பகுருபகுருஎன்ற தேஜே

விசேஷத்தைக்கொண்டு எம்பாரைப்பார்த்து, "கர்த்தவ்யாம்ஸத்துக்கு மூற்பட்டீரே" என்ன; இவரும் கண்ணெச்சில்ஏய்தாமல த்வயாநுஸந்தாநம்பண்ணிக்கொண்டு விடைகொண்டேன் என்ன; இவாதிருமேனிபேணுதலுக்கு மிகவுமுகந்து, "முன்னும் இவருஜ்ஜீவநத்துக்கு நீரேகடவீர்" என்று குமாரருக்கு பஞ்சாயுதத்திருவாபரணத்தையும் திருக்கைகளாலேசாத்தி, ஸ்ரீபராசரபகவானுடைய திருநாமத்தையும் சாத்தி, ( పుత్రీకృతోరఙ్గధురన్ధరేణపరాశరస్సూరకులప్రదీపః । గోవిన్దశిష్యస్సతుయామునార్యమనోరథంపూరితవాన్ద్వితీయమ్) (புத்ரீக்ருதோரங்கதுரந்தரேணபராஸரஸ்ஸூரகுலப்ரதீபः । கோவிந்தஸிஷ்யஸ்ஸதுயாமுநார்யமநோரதம்பூரிதவாந்த்விதீயம்) என்று ஆளவந்தாருடையத்விதீயமான இழவைத் தீர்த்தருளினர்.

—⁂—

சிறியகோவிந்தப்பெருமாளுக் குமாரர்திருவவதரித்தருளி ஆளவந்தாருடைய மூன்றுவது இழவைத்தீர்த்தருளியது.

பின்பு சிலநாள்கழிந்தவாறே, சிறியகோவிந்தப்பெருமாளுக்கும் ஒருகுமாரர் திருவவதரிக்க; உடையவரும் இத்தைக்கேட்டுத் திருவுள்ளமுகந்து, "ஆளவந்தார்க்ரிஷிபலம் லபிக்கப்பெற்றதே!" என்று எம்பாரைப்பார்த்து, "நம்மாழ்வார்திருநாமம்சாத்தும்" என்றுகட்டளையிட்டு, (గోవిన్దరాజాన్వయజోమనీషి పరాఙ్కుశోయామునవైమనస్యమ్ । అపాచకారప్రసభంతృతీయంవిరాజతేవృత్తమణిప్రదీపః) (கோவிந்தராஜாந்வயஜோமநீஷி பராங்குஸோயாமுநவைமநஸ்யம் । அபாசகாரப்ரஸபம்த்ருதீயம்விராஜதேவ்ருத்தமணிப்ரதீபः)என்று—ஆளவந்தாருடைய த்ருதீயமான இழவைத் தீர்த்தருளினர்.

—⁂—

பட்டர் புத்ராபிமாநஞ்செய்யப்பட்டுத்திருமணத்தூணருகே பெருமாளமுதுசெய்வதற்குமுன்பு அமுதுசெய்துவளர்ந்தாரென்பதும், அவர்கேட்டகேள்விக்கு ஆழ்வான் அநுபவத்திலே இசைவித்துக்காட்டியதும்.

பின்பு, பட்டரை நாய்ச்சியார்திருக்கையிலேகாட்டிக்கொடுத்து மஞ்சள்நீர்குடிப்பித்துத் திருமணத்தூணருகேதொட்டிலிட்டு நாய்ச்சிமார் சீராட்டிவளர்க்க வளர்ந்தருளுகிறவிவர், பெருமாளமுதுசெய்தருளுவதுக்குமுன்னே படைத்தகளிகையிலே அமுதுசெய்காய்த்து வளர்ந்தருளிற்று; பட்டர்க்கு அஞ்சுதிருநக்ஷத்ரத்திலே, * நெடுமாற்கடிமையநுஸந்திக்கிற ஆழ்வானை, "ஐயா! (சிறுமாமனிசர்) என்று (పరస్పరవిరుద్ధశ్చ) (பரஸ்பரவிருத்தஸ்ச) என்று விருத்தமாயிருக்க, தர்மத்வயமும் ஒருவஸ்துவிலேயிருக்குமோ, இரண்டையுமநுஸந்திப்பானேன்" என்றுகேட்க; ஆழ்வானும்கேட்டு, "'அழகியது, நீர்அதுயநீ

ராகையாலே சாஸ்த்ரங்களால் சொல்லவொண்ணாதே, ப்ரத்யக்ஷத்திலே இசைவித்துக்காட்டுகிறோம்' என்று, மேனிசிறுத்தும் ஜ்ஞானம்பெருத்திருக்கிறசிறியாச்சான், அருளாளப்பெருமாளெம்பெருமானார்போல்வாரைக்கிடீர் சிறுமாமனிசர் என்கிறது" என்று இசைவித்துக்காட்டியருளினார்.

—:—:—

பட்டர் அஞ்சுதிருநக்ஷத்ரத்திலே புழுதிவிளையாடும்போது "ஸர்வஜ்ஞன்" என்றுவிருதூதிவந்தவொருவனைவாய்மாளப்பண்ணியதும், அவன் அவரைப்பல்லக்கிலே யெழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோய்த் திருமாளிகையிலேவிட்டதும்.

பின்னையுமொருநாள் அஞ்சுதிருநக்ஷத்ரத்திலே திருவீதியிலே புழுதியள்ளிவிளையாடாநிற்க; அவ்வளவிலே "ஸர்வஜ்ஞன்வந்தான்" என்று ஒருவன் விருதூதிவர; பட்டரும் அத்தைக்கேட்டு, "அவனாரடா, ஆழ்வான், ஆண்டான், அருளாளப்பெருமாளெம்பெருமானார், எம்பார்முதலான பெரியோர்களிருக்கிறவிடத்திலே ஸர்வஜ்ஞன் வருகிறான்" என்று இரண்டுதிருக்கையாலும் கிடந்தபுழுதியையள்ளி, "இது எத்தனைபுழுதி" என்றுசொல்லென்ன; அவனும் அதுக்குஉத்தரஞ்சொல்லமாட்டாமல் வாயடைத்துக்கவிழ்ந்துகிடக்க; பட்டரும், "ஸர்வஜ்ஞன்" என்கிற விருதுகளையும் ஸம்ப்ரமங்களையும் போடுகாளத்தையும்பறியுங்கோள் என்றுபறித்து, அவனைப்பார்த்து, "கெடுவாய்! இது இரண்டுகைபுழுதி" என்றுசொல்லி ஸர்வஜ்ஞன் என்கிற விருதூதித்திரியாமல் அஜ்ஞனாய்விட்டாயே" என்ன; அவனும், இவரருளிச்செய்கிற மழலைச்சொல்லைக்கேட்டு, "இவர் ஆருடையபுத்ரர்" என்ன; "ஆழ்வான்குமாரர்" என்று அங்குள்ளார்சொல்ல; "பாறுகிறதின்குட்டி தவழுமோ" என்று பட்டரைத்தன்தண்டிகையிலே எழுந்தருளப்பண்ணிக்கொண்டு ஆழ்வான்திருமாளிகைவாசலிலேசெல்ல; பொன்னாச்சியாரும் எதிரேகண்டு இவர் * செய்த சிறுச்சேவகத்தைக்கேட்டு, "கண்ணெச்சிலாக இவரைத்தெருவீதியிலேபோகவிடுவார்களோ" என்று உள்ளேகொண்டுபுகுந்து த்வயத்தாலேரக்ஷையிட்டு ஸ்ரீபாததீர்த்தத்தையிட்டுத்தெளித்து வயிறுபிடித்தருளினார்.

—:—:—

பட்டர்உபநயநமானவாறே நான்குவேதங்களையும் ஒரேசந்தையிலே அப்யஸித்தாரென்பது.

பட்டர் உபநீதரானபின்பு வேதாத்யயநம் ஆரம்பித்துநடத்த; ஒருநாள்பட்டர் ஓதுகிறகடையிலே யெழுந்தருளி ஒருசந்தைகேட்டு மற்றைநாள் ஓதுகிறகடையிலே ஓதப்புக்கவாறே, "ஓதின

விடத்தையும் ஓதாநின்றார்கள்" என்று விளையாடிக்கொண்டுதிரிய; ஆழ்வானும் ஆண்டாளும் பட்டரையழைத்து, "அப்பரே! எல்லாரும் ஓதாநிற்க நீர்புறப்பட்டுவந்தீர்" என்ன; பட்டரும், "ஓதினவிடத்தை ஓதாநின்றார்கள்" என்ன; "நேற்றுசந்தையிட்டப்ரச்நத்தை 'உச்சரித்துக்காட்டீர்' என்ன; இவரும், ஒமெறிந்துசந்தையிட்டபடியே உச்சரித்துக்காட்ட; ஆழ்வானும் ஆண்டாளும் பயப்பட்டு, "இன்னமும் சிலநாள் இவரை ஓதுகடையிலேவைக்கவொண்ணாது" என்று தங்களிலே சிந்தித்திருந்தார்கள்.

---

பட்டருக்கும் ஸ்ரீராமப்பிள்ளைக்கும் பெரியநம்பிதிருவம்சத்திலே திருக்கல்யாணம்நடந்ததென்பது.

பின்பு சிலநாள்கழிந்தவாறே பட்டர் ஸாங்கோபாங்கமாகசதுர்வேதத்தையுமதிகரித்துஸகலவித்யாபாரங்கதரானபின்பு, ஆண்டாளும்ஆழ்வானைப்பார்த்து, "இவர்களுக்கு ஒருகார்யம்செய்விக்கவேண்டாவோ" என்ன; ஆழ்வானும்சென்று உடையவருடனே, "இவர்களுக்கு ஒரு கார்யம்செய்விக்கவேண்டாவோ, நம்முறவின்முறையார் ப்ராக்ர்தராயிருந்தார்கள்" என்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், பெரியநம்பிதிருமேனி ஸம்பந்தத்திலே ஸ்ரீவைஷ்ணவஸாந்தாநிகரிடத்திலே பட்டருக்கு ஸம்பந்தம்பண்ணினால் ஸ்வஸூத்ரசாகைகளுக்கும் ப்ராஹ்மண்ய வைஷ்ணவத்துக்கும் பெரியசரணம் என்று தட்டுபடாதிறே" என்ன; அவர்களும்ஸம்மதித்து, உடையவரைமுன்னிட்டுக்கொண்டு அவர்களிடத்திலே பெண்கேட்க; அவர்களும் "கொடுக்கிறோம்" என்றுஸம்மதித்து, பின்னையும், "புதுஸம்பந்தமன்றோ" என்று இசையாதிருக்க; பின்பு சிலநாள்கழிந்தவாறே ஆண்டாளும் ஆழ்வானுடனே, "இவர்களுக்கொருகார்யம்செய்விக்கவேண்டாவோ" என்ன; ஆழ்வானும், "ஈச்வரகுடும்பத்துக்குஎன்னையிருந்துகரையச்சொல்லுகிறாயோ" என்றருளிச்செய்து பெரியபெருமாள்ஸந்நிதியிலே எழுந்தருளிதண்டன்ஸமர்ப்பித்து தீர்த்தப்ரஸாதங்களும்ஸ்வீகரித்து மீண்டெழுந்தருளும்போது, "இவர்களுக்கு ஒருகார்யம்செய்விக்கவேண்டாவோவென்று சொல்லாநின்றார்களே" என்று விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும், "அதுக்கு நீரோகடவீர், நாமேதகுதியாகப்பண்ணிவைக்கிறோம், நீர்போம்" என்று திருவுள்ளமாய், அவர்களுக்கு மப்படியே ஸ்வப்நங்காட்டியருள; அவர்களும் ஸம்மதித்துத் தாங்களேகொடுக்கிறோம் என்று ஸம்மதித்துவந்து, அக்கச்சியையும், மண்ணியையும், பட்டர்திருத்தாயாரை விசாரித்து * பெருப்பெருத்தகண்ணாலங்கள்செய்து உதகபூர்வகமாக ஸமர்ப்பித்தார்கள்.

---

பட்டர், பெருமாளையும் நாய்ச்சிமாரையும், ஆழ்வானுமாண்டாளுமாக நினைத்துப்போந்தாரென்பது.

ஒருநாள் திரைவளைத்துக்கொண்டு, பெருமாள் ஏகாந்தமாகஎழுந்தருளியிருக்கச்செய்தே, பட்டர் பெருமாளைஸேவிப்பதாகவெழுந்தருள ; பெருமாளும்சீறிப் பிற்படவிடத்திருவுள்ளமாக; மீளவும் "அவனையழையுங்கோள்" என்ன ; பின்பு பட்டர்க்குஅருள்பாடிட்டருள ; ஸந்நிதியிலேசென்றவளவிலே, "நாம் பிற்படவிட்டபோது என்ன நினைந்திருந்தீர்" என்ன ; "பெருமாளும் நாய்ச்சிமாரும் என்றிருந்தேன்" என்ன ; "நீர்முன்புநம்மைநினைத்திருக்கும்படியெங்ஙனே" என்ன ; "ஆழ்வானுமாண்டாளுமாக நினைத்திருப்பேன்" என்ன ; "நம்மாணை, நீர்முன்புபோலே நினைத்திரும்" என்று திருவுள்ளமாயருளினார்.

—❧❧✻❧❧—

உடையவர் முதலியாண்டானை த்ரிதண்டஸ்தாநீயராக அபிமாநித்தருளியது.

உடையவர் ஆச்ரமப்ராப்திபண்ணியருளினபின்பு ஸ்ரீபாதத்தில் முதலிகளெல்லாரும், "சரீரஸம்பந்திகளைவிட்டுவிடவேண்டிற்றே" என்றுவிண்ணப்பஞ்செய்ய ; உடையவரும், "நம்முதலியாண்டானையொழிய ஸங்க்யஹித்தோம்" என்றருளிச்செய்ய ; "இப்படியருளிச்செய்யலாமோ" என்று முதலிகள்விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், "கையில்த்ரிதண்டத்தைக் கைவிடிலன்றோ முதலியாண்டானைக்கைவிடுவது" என்று அருளிச்செய்தருளினார்.

—❧❧✻❧❧—

முதலியாண்டான், உடையவர், அருளிச்செயலில் ஒருபாட்டருளிச்செய்யக்கேட்டு பரவசராயருளினாரென்பது.

முதலியாண்டான் திருவாய்மொழி ஓதினபடி ;- எம்பெருமானார் திருப்பள்ளிக்கட்டிலிலே ஏறியருளி ஒருபாட்டைச் சந்தைப்ரஸாதித்தருளினவளவிலே பரவசராயருளினார்;இத்தைக்கண்டு உடையவரும், (వేదవేద్యే పరే పుంసి జాతే దశరథాత్మజే । వేదః ప్రాచేతసాదాసీత్సాక్షాద్రామాయణాత్మనా) (வேதவேத்யே பரேபும்ஸி ஜாதே தஶரதாத்மஜே । வேத:ப்ராசேதஸாதாஸீத்ஸாக்ஷாத்ராமாயணாத்மநா) என்றுப்போலே வேதவேத்யனான பரமபுருஷன் தஶரதபுத்ரனாய்வந்தவதரித்தாப்போலே, அந்தவேதங்கள்தானும் ஸ்ரீவால்மீகிபகவான்முகேந இதிஹாஸோத்தமமான ஸ்ரீராமாயணமாய்க்கொண்டு ப்ரகாசித்தாப்போலே, வேதங்கள் ஆழ்வார்முகேநத்திருவாய்மொழியாய்வந்தவதரித்ததன்றோ, அத்தைக்கண்டன்றோ இவர்பரவசராயருளினார் என்றருளிச்செய்தருளினார்.

—❧❧✻❧❧—

உடையவர், நம்பெருமாள்அவப்ர்தங்கொண்டாடவெழுந்தருளும்
போது முதலியாண்டான்திருக்கைத்தலத்தைப்பற்றியெழுந்தருளி
மீண்டெழுந்தருளும்போது பிள்ளையுறங்காவில்லிதாஸர்
திருக்கையைபற்றியெழுந்தருளினரென்பது.

பெருமாள், பெரியதிருநாள்கொண்டருளி அவப்ர்தங்கொண்டாட்வெழுந்தருளும்போது, முதலியாண்டான்திருக்கைத்தலம்பற்றியெழுந்தருளி, நீராடிமீண்டெழுந்தருளும்போது பிள்ளையுறங்காவில்லிதாஸர்திருக்கைத்தலம்பற்றியெழுந்தருள; "இதுக்கடியென்" என்று முதலிகள்விண்ணப்பஞ்செய்ய; எம்பெருமானாரும், "ஜந்மம் உயர்ந்திருக்கச்செய்தே த்ரழநில்லாநின்றோமே" என்கிற அபிமாநமுண்டே நமக்கெல்லார்க்கும், அக்குறையுமில்லாதவரிறேயிவர்" என்றருளிச்செய்தார்.

—⁂—

பெரியநம்பிதிருமகளார்அத்துழாய்க்குச் சீதநவெள்ளாட்டியாக
அடிமைசெய்துவந்தமுதலியாண்டானை அழைக்கொள்ளும்
படிஅவர்புக்ககத்தார் உடையவரைத்தாழ்ந்துவேண்டிக்
கொள்ள; அவரைத்தம்மிடத்துக்குஅழைத்துக்
கொண்டாரென்பது.

பெரியநம்பிதிருமகளார் அத்துழாய் புக்ககத்திலேவாழுங்காலத்திலே ஒருநாள்வேளையிலே தீர்த்தமாடவேண்டி, மாமியாரை, "துணைவரவேணும்" என்றபேக்ஷிக்க; மாமியாரும் "உன்சீதநவெள்ளாட்டியைக்கொண்டுபோ" என்று கடுத்துச்சொல்ல; அத்துழாயும்பிறந்தகத்தேவந்து, "ஐயா! என்னை இப்படிசொன்னாள்" என்று பெரியநம்பிக்குவிண்ணப்பஞ்செய்ய; நாமறிவோமோ, உடையவர்க்குவிண்ணப்பம்செய்யும்" என்ன; அத்துழாய் உடையவர்ஸந்நிதியிலேசென்று அச்செய்தியைவிண்ணப்பஞ்செய்ய; உடையவரும் அருகிருந்தமுதலியாண்டானையழைத்து, "இந்தாரும் உமக்குச்சீதநவெள்ளாட்டி" என்று கூட்டியனுப்ப; முதலியாண்டானும் அவரை நீராடப்பண்ணிக்கொண்டுவந்து அவர்புக்ககத்திலேயிருந்து தாஸ்யவ்ருத்தியைச்செய்யத்தொடங்கினர்; அவர்புக்ககத்தார், பெரியநம்பிதிருவடிகளிலேதண்டன்ஸமர்ப்பித்து முதலியாண்டானையனுப்பி, "எங்களை இப்படி அதோகதியிலே தள்ளவேணுமோ" என்று விண்ணப்பஞ்செய்ய; நம்பியும், "நாமறிவோமோ, உடையவருக்கு விண்ணப்பஞ்செய்யுங்கோள்" என்ன; அவர்களும் உடையவர்ஸந்நிதியிலேசென்று தண்டன்ஸமர்ப்பித்து, முதலியாண்டானையனுப்பி எங்களை அதோகதியிலேதள்ளவேணுமோ" என்றுவிண்ணப்பஞ்செய்ய; பின்பு ஸ்ரீபாஷ்யகாரரும், முதலியாண்டானையழைத்துஅத்துழாய்க்குச்சீதநவடிமை

யாக்கொடுத்துவிட்டோம், அங்கிருந்து அவர் அடிமைசெய்கிறது உங்களுக்கநிஷ்டமாகில் இங்கேயிருந்தடிமைசெய்கிறார்'' என்று அழைப்பித்துக்கொண்டருளினார்.

—※—

மாறனேரிநம்பி தம்சரமதசையிலே ச்லோகத்வயத்தை யருளிச்செய்து த்வயநிஷ்டர்வைபவத்தை பெரியநம்பியைக்கொண்டு வெளியிட்டருளியது.

அதுக்குமேலே மாறனேரிநம்பிசரமதசையிலே அவர்கலக்கங்கண்டு திருவுள்ளங்கலங்கினபெரியநம்பிதிருவுள்ளந்தேறும்படி, ஸுகல்பமானச்லோகத்வயத்தையும் உதாஹரித்தருளியும், ஏதந்மூலமாக த்வயநிஷ்டர்வைபவத்தைத் தம்முடையப்ரச்நத்துக்கு உத்தரமாகப் பெரியநம்பிமுகேந வெளியிடுவித்தும்செய்தருளினாரிறே.

—※—

பெரியநம்பி, தம்குமாரரானபுண்டரீகரை உடையவர்திருவடிகளிலே ஆச்ரயிப்பித்தது.

பெரியநம்பி அத்துழாயும்தாமுமாக எழுந்தருளியிருக்கச்செய்தே உடையவரும்முதலிகளுமாகவெழுந்தருள; பெரியநம்பிஎழுந்திருந்துகண்டனிட; இப்படிசெய்யலாமோ, உம்முடையசிஷ்யரன்றோ'' என்று அத்துழாய்சொல்ல; நம்பியும், "அத்தாளுக்குத்தக்கதலைகாண்'' என்றருளிச்செய்து, தம்முடையகுமாரரானபுண்டரீகரையும் உடையவர்திருவடிகளிலே ஆச்ரயிப்பித்தருளினார்.

—※—

மாறனேரிநம்பி த்வயாநுஸந்தாநத்துடனே திருநாட்டுக்கெழுந்தருள; பெரியநம்பி அவரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்தாரென்பது.

பெரியநம்பி, மாறனேரிநம்பியைப்ரஹ்மமேதத்தாலேஸம்ஸ்கரித்துப்பள்ளிபடுத்தருளினார்; இத்தைக்கேட்டு உடையவரும் பெரியநம்பி திருமாளிகையிலேயெழுந்தருளி தண்டன்ஸமர்ப்பித்து, "அடியேன் ஸம்ஸாரஞ்சிலுகிடாதபடி ஒருவழியிலேவரம்புகட்ட; தேவரீர் ஒருவழியிலேபிரித்தருளாநின்றதே!'' என்றுவிண்ணப்பஞ்செய்ய; பெரியநம்பியும், "வாரீர்உடையவரே! இக்ஷ்வாகுவம்சத்திலேதிருவவதரித்து ஸாமாந்யதர்மத்தைவெளியிடுகிற பெருமாளைக்காட்டில் நான்பெரியவனோ?, பெரியவுடையாரைக்காட்டில் இவர்தண்ணியரோ?, ஸாமாந்யதர்மநிஷ்டரைக்காட்டில் நான்பெரியவனோ?, ஸ்ரீவிதுரரைக்காட்டில் இவர்தண்ணியரோ?, ※ பயிலுஞ்சுடரொளி ※ நெடுமாற்கடிமை கடலோசையோ'' என்ன; அவரும்நிருத்தரராயிருந்தார்.

28-6-96.

பெரியநம்பிஉடையவருடனே,மாறனேரிநம்பிதிருநாட்டுக்கெழுந்தருளுகிறபோது, "பெரியபெருமாள்திருவடிகளேசரணம்,ஆளவந்தார்திருவடிகளேசரணம் என்றுசொல்லக்கண்டிலோம்" என்றருளிச்செய்ய; உடையவரும், "அவர்க்குச்லோகத்வயாநுஸந்தாநமாகக்கொள்ளீர்" என்றருளிச்செய்ய ; "அதுபெண்கண்டபிச்சன்வார்த்தையன்றோ" என்று பெரியநம்பிஅருளிச்செய்ய ; "பெண்ணினுடையநித்யயோகத்தைத் திருவுள்ளம்பற்றாதொழிகிறதென்" என்றருளிச்செய்தருளினார்.

—⁂—

உடையவர் ஒருஊமைக்குத் தம்முடையதிருமேனியைரக்ஷகமாகக் காட்டியருள, அத்தைக்கண்ட கூரத்தாழ்வான், "எம்பெருமானார்திவ்யமங்களவிக்ரஹமேதஞ்சம் என்கிறநிஷ்டைக்கு அநதிகாரியாய்விட்டேனே" என்று தம்மை வெறுத்தருளியது.

ஒருநாள் உடையவர் ஒருஊமையைக்கடாக்ஷித்து ஏகாந்தத்திலே வைத்துக்கொண்டு ஊமைக்குத்தம்முடையதிருமேனியைரக்ஷகமாகக் காட்டியருள ; ஆருக்கும்ஸித்தியாத விசேஷகடாக்ஷத்தை கூரத்தாழ்வான் கதவுபுரையிலேகண்டு மூர்ச்சித்துத்தெளிந்து, "ஐயோ! ஒன்றுமறியாதேபிறந்தேனாகில் இப்பேற்றைஉடையவர் அடியேனுக்குமிரங்கியருளுவர், கூரத்தாழ்வானாய்ப்பிறந்து சாஸ்த்ரங்களைக்கற்கையாலேயன்றோ தம்முடையதிவ்யமங்களவிக்ரஹத்தை அடியேனுக்குக்காட்டித்தந்தருளாமல் ப்ரபத்தியைஉபதேசித்துவிட்டார் ; ஆகையால் எம்பெருமானார் திவ்யமங்களவிக்ரஹம் அடியேனுக்குத்தஞ்சம் என்கிறநிஷ்டைக்கநதிகாரியாய்விட்டேனே" என்று ஆழ்வான் வெறுத்துக்கொண்டருளினார்.

—⁂—

பெரியநம்பி, உடையவருக்கு "ஸதாசார்யவிக்ரஹமே ஸதாத்யேயம், தந்நாமமேஸதாஜப்யம்" என்றருளிச்செய்தது.

நம்பிதான் திருக்கோட்டியூரிலே திரைவளைத்துக்கொண்டு எழுந்தருளியிராநிற்க ; உடையவர் அங்கேயெழுந்தருளி தண்டன்ஸமர்ப்பித்து, அவரைப்பார்த்து, "திரைவளைத்துக்கொண்டு எழுந்தருளியிராநின்றீர், த்யாநமேது, மந்த்ரமேது" என்றுகேட்டருள ; நம்பியும் "ஆளவந்தார்வடவாற்றிலே நீராடியருளும்போது திருமுதுகிருக்கும்படி, வலியகடாரம்கவிழ்த்தாப்போலேகாணுமிருப்பது, அது எனக்குத்யாநம், யமுனைத்துறைவரென்கிறது மந்த்ரம், நீரும்அத்தைமறவாமல் நினைத்திரும்" என்றருளிச்செய்தார். இத்தால் – "ஸதாசார்யவிக்ரஹமேஸதாத்யேயம் என்றும், தந்நாமமேஸதாஜப்யம்" என்றும் அருளிச்செய்தாராய்த்து.

அதுக்குமேலே பெருமாள்திருவுள்ளக்கருத்தையுமறிந்து அவர்க்கு உயிர்நிலையாய்த் திருமுடித்துறையிலே தத்நுபவஜநிதப்ரீதிகாரித கைங்கர்யநிரதராய்வர்த்தித்துப்போருகிற பட்டினிப்பெருமாளை யுங் கிட்டி, அட்டத்திலே பலநாளும்ஸேவித்து அவர்லோகயாத்ரையில் கண்வையாதே பகவதநுபவைகபரரான ஆகாரத்திலேதாம்வித்தராய் ப்ரீதியாலே, "பெருமாளே! பெருமாளே" என்ன; அவரும், "தம் கைங்கர்யம்பலித்தது" என்று, "ஜீயா! ஜீயா!" என்ன; அவர்கருத்தறிந்து அவர்க்கு ஜீவநாவதியும்கற்பித்தருளி, தாமும் அப்படியே, (భగవన్తం నారాయణం ధ్యానయోగేన ద్రుష్ట్వా) (பகவந்தம்நாராயணம்த்யாநயோகேநத்ர்ஷ்ட்வா) என்றுபகவதநுபவம்பண்ணி அநுபவஜநிதப்ரீதிகாரிதகைங்கர்யங்களோடே காலங்கழியாநின்றுகொண்டுபோராநிற்கிறகாலத்திலே,



கூரத்தாழ்வான், உடையவராலே "இளையாழ்வாரான ராமாநுசன்" என்று திருநாமம்சாத்தபெற்ற தம்குமாரரான கந்தாடையாண்டானை ஆட்கொண்டவில்லிஜீயரிடத்திலே ஆச்ரயிப்பித்தது.

முதலியாண்டானுக்கும் ஒருகுமாரர் ஆசார்யகைங்கர்யத்துக்கு அர்ஹராகவவதரிக்க; அவரையும் அப்படியே அபிமாநித்தருள; அநந்தரம்முதலியாண்டானும்உடையவர்ஸந்நிதியிலே, இந்தசிசுவை தேவரீர் திருநாமம்சாத்தவேணும்என்றுவிண்ணப்பஞ்செய்ய; அப்படியே "இளையாழ்வாரானராமாநுசன்" என்று கந்தாடையாண்டானுகருத் திருநாமம் சாத்தியருள; அவரும், (రామానుజాయ భూయిష్ఠం నమఉక్తిం ప్రచక్ష్మహే। యతీన్ద్ర కరసంస్పర్శ సౌఖ్యం యేనాన్వభూయత।) (ராமாநுஜாயபூயிஷ்டாம்நமஉக்திம்ப்ரசக்ஷ்மஹே। யதீந்த்ரகரஸம்ஸ்பர்ஸஸௌக்யம்யேநாந்வபூயத।) என்னும்படிகடாக்ஷகதாரகராய் வளர்ந்துபோந்தார்; அவரை ஆட்கொண்டவில்லிஜீயரிடத்திலே ஆச்ரயிப்பித்தருளினர்; மற்றுமுண்டான ஆசார்யபுருஷர்களுக்கும் இப்படி ஸத்ஸந்தாநங்களுமுண்டாய்த்து. இப்படி இவர்களெல்லாரும் * கோயில்பிள்ளைகளாய்வளர்ந்து ஸகல வித்யைகளும் அதிகரித்துக்கொண்டுபோந்தார்கள். மற்றும்திருவடிகளை ஆச்ரயித்தமுதலிகளெல்லாரும் தந்தாம்புத்ரர்களையும் உடையவர்திருநாமம்சாத்தினர்கள். ஸ்ரீவைஷ்ணவவண்ணாத்தானும் அப்படியேதிருநாமஞ்சாத்த; அந்தப்பிள்ளையை உடையவர்எடுத்துக்கொண்டுமிகவும் உகந்தருளினர். அத்தைக்கண்டு எல்லாரும் "அந்தப்பிள்ளையுடைய பேறிருந்தபடியென்!" என்று ப்ரீதரானர்கள். (రామో రామో రామఇతి ప్రజానామభవన్ కథాః) (ராமோராமோராமஇதிப்ரஜாநாமபவந்கதா:) என்னுமாப்போலே ஜகத்தெல்லாம்ராமாநுஜன்திருநாமத்தாலே உஜ்ஜீவித்துப்போர,

பெரியநம்பி தெற்கேஎழுந்தருளும்போது மணலைமந்த்ரித்துத் தெளித்து கோயிலுக்குரக்ஷையிட்டருளினரென்பது.

அக்காலத்திலே இத்தைஅஸஹியையாலே ஸஹிக்கமாட்டாதகிழக்குத்தையில் ராஜாக்களாலே அத்தேசத்துக்கு உபத்ரவமுண்டாகத்தேட; அத்தை எம்பெருமானர், பெரியநம்பிக்கு அறிவிப்பித்தருள; "தத்பரிஹாரார்த்தமாகப்பெருமாளுடையதிருவெல்லையை நான் ஒருப்ரதக்ஷிணம்பண்ணும்படி யென்பின்னேஙிரபிமாநராய் வரும்படிக்கு உம்முடையசிஷ்யர்களிலே ஒருவரைப்போரவிடும்" என்ன; உடையவரும், "அதுக்காவாரை தேவரீரேகூட்டிக்கொண்டெழுந்தருளலாகாதோ" என்ன; (பலரடியார்முன்பருளிய) என்கிறபடியே பெரியநம்பியும் ஆழ்வானைக்கையைப்பிடித்துக்கொண்டு எழுந்தருளி, (நவஞ்செய்மலர்ப்பொழில்கூரநாதன்மணல்கொண்டோதிநானிலமெண் திருவரங்கங்காத்தளித்தோன்) என்னும்படி அவர்பின்னே ஆழ்வான் மடியிலேகட்டிக்கொண்டுசென்றமணலைதிரக்ஷைபண்ணிவலஞ்செய்தருளினர். இப்படியாய்த்துபெரியநம்பிபெரியகோயிலைக்காத்தருளினபடி. அந்தரக்ஷையேயிறே ஸர்வரக்ஷகனுக்கும் எப்போதும்ரக்ஷையாய்த்து.

உடையவர் வேதாந்தார்த்தத்தை விசதீகரித்துக்கொண்டுகோயிலிலே அறுபதுஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்தாரென்பது.

இப்படி, பாரெல்லாம்பரம்பும்படியான திருநாமத்தால்வந்தபெருமையையுடைய எம்பெருமானரும், ஜகத்தெல்லாம் * திருமால்திருக்கை திருச்சக்கரமான திருவிலச்சினை, * திருமால் திருமண், (திருமாலுக்குரியதொண்டர்) என்று தாஸ்யநாமம், * திருமால் திருநாமமான த்வயம், * திருமாலைக்கைதொழுகையாகிற சேஷவ்ருத்திமுதலான இவற்றாலே* திருத்தித்திருமகள்கேள்வனுக்காக்க; அவர்களும், "ராமாநுஜனுடையார்" என்று - உடையவரபிமாநாந்தர்ப்பூதராய், முமுக்ஷுக்களாய், மோக்ஷைகலக்ஷ்யராய்வாழ்ந்துகொண்டு போருகிறவக்காலத்திலே ப்ரணவார்த்தப்ரகாசகவஸ்துவினுடையஸந்நிதியிலே, இப்படிபெண்ணும்பேதையும்ஸம்ஸாரத்தினின்றும் உத்தீர்ணராய்க்கொண்டுபோருகிறகாலத்திலே, ப்ரணவார்த்தப்ரகாசகமான வஸ்துவினுடையபரத்வத்தைதத்த்வநிர்ணயமுகேநப்ரகாசிப்பாராய், 'ஸர்வஸ்ய வேதஜாதஸ்ய ப்ரக்ருதிஃ ப்ரணவஃ, ப்ரணவ ப்ரக்ருதிர் அகாரஃ, ப்ரணவ விகாரோ வேதஃ, ஸ்வப்ரக்ருதி பூத ப்ரணவே லீனஃ, ப்ரணவோ(அ)பி அகார பூத ஸ்வப்ரக்ருதாவ் அகாரே லீனஃ, தஸ்ய ப்ரக்ருதி பூதஸ்ய அகாரஸ்ய யஃ பரோ வாச்யஃ ஸ ஏவ மஹேச்வர இதி) (யத் வேதாதௌ ஸ்வரஃ ப்ரோக்தோ வேதாந்தே ச ப்ரதிஷ்டிதஃ। தஸ்ய ப்ரக்ருதி லீனஸ்ய யஃ பரஃ ஸ மஹேச்வரஃ இதி) [மஹதா மஹேச்வரோ மஹேச்வரஃ) (தமீச்வராணாம் பரமம் மஹேச்வரம்)

(సింహోభూతమహేశ్వరః) (సర్వలోకమహేశ్వరమ్) (అ ఇతి బ్రహ్మ) (నారాయణపరం బ్రహ్మ) (హ్రీశ్చ తే లక్ష్మీశ్చ పత్న్యౌ, అహోరాత్రే పార్శ్వే) (ఋతం సత్యం పరం బ్రహ్మ) (సత్యం జ్ఞానమనన్తం బ్రహ్మ) (అహన్తా బ్రహ్మణస్తస్య సాహమస్మి సనాతనీ) (బ్రహ్మణి శ్రీనివాసే) (శ్రియఃకాన్తోఽనన్తో వరగుణగణైకాస్పదవపుర్హతాశేషావద్యః పరమకపదో వాఙ్మనసయోః। అభూమిర్భూమిర్యో నతజనదృశామాదిపురుషః) (పరమం యో మహద్బ్రహ్మ) (అక్షరాణామకారోఽస్మి) (అ ఇతి భగవతో నారాయణస్య ప్రథమాభిధానమ్) (భూర్భువస్స్వస్తరుః ప్రణవః) (అకారో విష్ణువాచకః) (ఓఙ్కారో భగవాన్ విష్ణుః) (ఓమిత్యేకాక్షరం బ్రహ్మ వ్యాహరన్మామనుస్మరన్) (భూర్విష్ణుశ్చ తథా లక్ష్మీర్భువ ఇత్యభిధీయతే, తయోస్స్వమితి జీవస్తు సువరిత్యభిధీయతే) తైత్తిరీయకే, (నారాయణపరం బ్రహ్మ తత్త్వం నారాయణః పరః, నారాయణపరో జ్యోతిరాత్మా నారాయణః పరః) ఐతరేయబ్రాహ్మణే, (అగ్నిర్వై దేవానామవమో విష్ణుః పరమః, తదన్తరేణ సర్వా దేవతాః) ఇతి, యజుష్యపి, (అగ్నిరవమో దేవతానాం విష్ణుః పరమః) ఇతి, తైత్తిరీయకే, (తద్బ్రహ్మ, స ఆత్మా, అఙ్గాన్యన్యా దేవతాః) ఇతి, ఇతిహాససముచ్చయే, (నారాయణాజ్జగత్సర్వం సర్గకాలే ప్రజాయతే। తస్మిన్నేవ పునస్తచ్చ ప్రళయే సంప్రలీయతే॥ పరాదపి పరశ్చాసౌ తస్మాన్నాస్తి పరాత్పరః। స ఏవ హి పరో దేవస్స ఏవ పరమేశ్వరః) இத்யாதிவேதாந்தவாக்யாநம் விஶதமாக்கிக்கொண்டு (సంసేవితస్సంయమిసప్తశత్యా పీఠైశ్చతుస్సప్తతిభిస్సమేతః। అన్యైరనన్తైరపి విష్ణుభక్తైరాస్తేధరఙ్గం యతిసార్వభౌమః) (ஸம்ஸேவிதஸ்ஸம்யமிஸப்தஶத்யா பீடைஶ்சதுஸ்ஸப்ததிபிஸ்ஸமேதஃ। அந்யைரநந்தைரபி விஷ்ணுபக்தைராஸ்தேதிரங்கம் யதிஸார்வபௌமஃ) என்றும், (వ్యాకుర్వతా తేన విపశ్చితోఽపి వేదాన్తమవ్యాహతవాగ్విహారైః। రఙ్గేశకైఙ్కర్యధురన్ధరేణ యతీశ్వరేణోషితమబ్దషష్టిః) (வ்யாகுர்வதா தேந விபஶ்சிதோகே வேதாந்தமவ்யாஹதவாக்விஹாரைஃ। ரங்கேஶகைங்கர்யதுரந்தரேண யதீஶ்வரேணோஷிதமப்தஷஷ்டிஃ) என்னும்படி அறுபதுஸம்வத்ஸரம் வாழ்ந்துகொண்டு போருகிறகாலத்திலே,

—※—

சோழராஜன், தன்வித்வஜ்ஜநங்களிடத்தில், "ஶிவாத்பரதரம் நாஸ்தி" என்று கையெழுத்துவாங்கியது.

உடையவர், கூரத்தாழ்வான், முதலியாண்டான் அருளாளப்பெருமாளெம்பெருமானார் இவர்களுக்கு, ஸ்ரீபாஷ்யார்த்தமருளிச்செய்யத் தொடங்கிக்கொண்டு வாழுங்காலத்திலே, (రాజేన్ద్రచోళాఖ్యనృపేఽథ కశ్చిచ్ఛైవో బాహ్యాగమకర్దమస్థః। అన్యాన్న వాఞ్ఛన్నవిద్వరాహః చోళాధిపశ్శుద్ధపరత్వగన్ధమ్॥ స శైవమార్గాగమతత్త్వనిష్ఠైర్నరాధమైర్దుష్ప్రతిభిశ్చ మూఢైః। అక్షీణపాపైరసురాంశజాతైరపోచ దత్త్వం లిఖితవ్యమేవ॥ శివాత్పరం వస్తు న కిఞ్చిదస్తి విచార్య తచ్ఛాసనవాక్యశీఘ్రైః। విద్వజ్జనాస్సై

ర్లిఖితవ్యమేవ విమృశ్యరాజానమథాహమన్త్రీ॥ రామానుజార్యోభగవాన్ త్రిదణ్డీసన్న్యాస ధర్మాకృతిరద్వితీయః । పరాత్పరందైవతమప్రమేయంసవేత్తినాన్యోభువి వేత్తి కశ్చిత్ ॥ నాలూరితిగ్రామనివాసినోక్తంనిశమ్యరాజానిజనాశహేతుమ్।స్వకింకరాన్దుర్మతిరేవమాహ రామానుజంయాయమిహానయధ్వమ్॥ యావద్భటేష్వార్భట మాశురఙ్గే వీథ్యాంవిచిన్వన్ నుయతీన్ద్రమేవ।విమృశ్యభావ్యం యతివేషమాశుశ్రీవత్సచిహ్నాయ దదౌయతీన్ద్రః) என்கிற படியே – ராஜேந்த்ரசோழபுரத்திலே சோழராஜாவென்பானொருவன் பரதத்த்வாஉஸஹிஷ்ணுவாய் கேவலகர்த்தமஸ்த்தமான விட்வராஹம் போலே சைவாகமத்திலேதானமடுவிட்டிருக்கிற அவன்சொல்படிக்கு சைவாகமநிஷ்ட்டர்களாயிருக்கிற நராதமரானவர்கள், ராஜசாஸநத்துக்குபயப்பட்டு மூடாத்மாக்களாய், (శివాత్పరతరంనాస్తి) (ஶிவாத்பரதரம்நாஸ்தி) என்று எழுதிக்கொடுக்க ;

———

## சோழன் வரவிட்டதூதர்களுடனே உடையவர் எழுந்தருளமுயன்றது.

இவர்கள் எழுதிக்கொடுத்தத்தை ராஜமந்த்ரியான நாலூரான் கேட்டு ராஜாவைப்பார்த்து, “ இவர்கள்எழுதினத்திலேப்ரயோஜநமில்லை, ஸ்ரீரங்கஸ்த்தலத்திலே த்ரிதண்டகாஷாயதரராய், ஷட்தர்ஶநதத்த்வவேத்தாவாய், ஸர்வரும் “இவர்பகவதவதாரம்” என்னலாம்படியான வைபவத்தையுடையராயிருக்கிறார், அவரொருவருமே பரதத்வமறிந்தவர், என்று சொல்லக்கேட்டு, ராஜாவும், தனக்கு மேல்வரும் அநர்த்தத்தைத்தெரியாமல் சிலதூதர்களையனுப்பி, “ராமாநுஜனை இங்கேபிடித்துக்கொண்டுவாருங்கோள்” என்றனுப்ப ; அவர்களும் அப்படியேஸ்ரீரங்கஸ்த்தலத்திலேசென்று ராமாநுஜனைவீதிகள் தோறும்தேடி. ராமாநுஜனுடைய மடத்துவாசலிலேவந்து, “ ராமாநுஜனெங்கே, அழையுங்கோள்என்ன ; இச்செய்தியை உடையவர்நீராடத்திருமஞ்சநம் முகந்துகொடுக்கிற கூரத்தாழ்வானுக்குத் திருச்செவியிலே ஒருஸ்ரீவைஷ்ணவர் ரஹஸ்யமாகவிண்ணப்பஞ்செய்ய ; அத்தைக்கண்டு உடையவரும், “ என் ?” என்றுகேட்டருள ; ஆழ்வானும் அச்செய்தியைவிண்ணப்பஞ்செய்ய ; உடையவரும், சங்கரபரத்வம் ஸாதிக்கிறவர்கள் சரிந்துபோம்படி நிராகரிக்கவேணுமென்று உத்ஸாஹிக்க ;

———

உடையவர், தம்முடைய த்ரிதண்டகாஷாயாதிகளை ஆழ்வானுக்கு ப்ரஸாதித்து தாம் வெள்ளைசாத்தித் திருநாராயணபுரத்தை நோக்கி யெழுந்தருளியது.

ஆழ்வானும், அடிகாத்து, "அப்படிசெய்யவொண்ணாது, த்ரிதண்டகாஷாயாதிகளை அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணும்" என்ன ராமாநுஜனும், அப்படியே த்ரிதண்டகாஷாயாதிகளை ஆழ்வானுக்கு ப்ரஸாதித்து, தாம் வெள்ளைத்திருப்பரியட்டத்தைச் சாத்திக்கொண்டிருக்க; கூரத்தாழ்வானும் த்ரிதண்டகாஷாயதரராய்ப் புறப்பட்டவளவிலே, பெரியநம்பியும் ஆழ்வானுடனேயெழுந்தருள; உடையவரும் "ஆழ்வானுக்கும் பெரியநம்பிக்கும் என்னதீங்குவருகிறதோ!" என்று க்லேசித்துக்கொண்டிராநிற்க; முதலியாண்டான்முதலான முதலிகள் திருவடிகளிலேஸேவித்து, "தேவரீர் இவ்விடத்திலே எழுந்தருளியிருக்கவொண்ணாது" என்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும் முதலிகளுமாகப் பெரியபெருமாள்திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து, (வெறுப்பொடுசமணர்முண்டர்விதியில்சாக்கியர்கள்நின்பால் பொறுப்பரியனகள்பேசில் போவதேநோயதாகிக், குறுப்பினுக்கடையுமாகில் கூடுமேல்தலையையாங்கே, அறுப்பதேகருமங்கண்டாயரங்கமாநகருளானே) என்று ஆழ்வாரருளிச்செய்தபடியேசடக்கென அவன்தலையையறுத்தருளவேணும் என்றுவிண்ணப்பஞ்செய்து, பரமதர்மாவான உடையவரும், (ధర్మోవనం ప్రస్థితః) (தர்மோவநம்ப்ரஸ்த்திதः) என்கிறபடியேவெள்ளைசாத்தி மேற்கேதிருநாராயணபுரத்தைநோக்கியெழுந்தருள; அத்தசையில் கள்ளரானராஜமநுஷ்யர் அறிந்து பின் தொடர்ந்துவர; "ஆள்வருகிறார்கள்" என்று உடையவருக்கு முதலிகள் விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், வழியில்மணலையள்ளி, (கொடுமைசெய்யுங்கூற்றமுமென் கோலாடிகுறுக்கப்பெறா, தடவரைத்தோள் சக்கரபாணீ சார்ங்கவிற்சேவகனே) என்று அபிமந்த்ரித்து இத்தை அவர்கள்வருகிறவழியில் ஒழுக்கிவாருங்கோள்" என்று அபிமந்த்ரித்துக்கொடுக்க; அவர்களும் அப்படியேசெய்துவர; ராஜமநுஷ்யரும் அம்மணலைமிதித்தாப்போலே அப்பால் அடியிடப்போகாமல், "போகிறவர்கள், போரமந்த்ரவாதம்பண்ணிப்போனார்கள்" என்று மீண்டுபோனார்கள். உடையவரும், (ప్రకృష్టశార్ఙ్గపరివృత్తచక్రేవికోశఖడ్గప్రగృహీతశఙ్ఖః। శ్రీమాన్సమారూఢపతఙ్గరాజ శ్రీరఙ్గరాజఃపథిమేసహాయః) (ப்ரக்ர்ஷ்டசார்ங்கபரிவ்ர்த்தசக்ரேவிகோஶகட்கப்ரக்ர்ஹீதஶங்கः। ஸ்ரீமாந்ஸமாரூடபதங்கராஜஸ்ரீரங்கராஜஃபதிமேஸஹாயः) என்று-*அரங்கத்துறையுமின்றுணைவனையே வழித்துணையாகக்கொண்டு அறுகாதம் அப்பாலெழுந்தருளினார். (அங்குநடந்தவெதிராசனன்பர்நாற்பத்தைவருடன்। கொங்கினறுகாதஞ்சென்று குறுகிவேடர்பதிதங்க) என்கிறபடியே பெருமாள்

திருவபிஷேகோத்ஸவங்குலைந்து ஸ்ரீகுஹப்பெருமாளிருப்பிடத்திலே விட்டாப்போலே, எம்பெருமானாரும் ஸ்ரீபாஷ்யாபிஷேகமஹோத்ஸவங் குலைந்து நல்லரடியாரான வேடமுதலிகளிருப்பிடத்திலே, கூடி யெழுந்தருளினார்.

—❧—

## த்ரிதண்டகாஷாயாதிதரரான கூரத்தாழ்வானும், பெரியநம்பியும், சோழராஜனைக்கண்டது.

அநந்தரம் அந்தராஜாமநுஷ்யர், ( త్రిదణ్డకాషాయధరశ్చ కూరనాథం బృహత్పూర్ణమపేక్ష్య తేమీ। ప్రణమ్య తౌ ప్రాహురథాస్య వార్తామాగమ్య తాం భూపసమీపమాశు॥ ఇత్యుక్తవద్భిస్సహ రాజదూతైరవాపతుస్తామథ రాజధానీమ్ । అసజ్జనోపాసితముగ్రభక్తం అపారపాపం సతు చోళరాజమ్॥ పరాత్పరం బ్రహ్మనిరూపణాయ భవత్ప్రసాదాదితి సంవిచార్య అశేషవిద్వద్భిరుపాస్యమానముపాస్యమా వేదయితుం ప్రవృత్తమ్॥ ఆసీనమాసన్నవిపత్కరైశ్చ దుశ్శైవపాషణ్డకపాలిభిశ్చ । యామ్యైశ్చ దూతైరివ సంవృతం తం పాపైర్ఘనిష్యత్కృమికణ్ఠసంజ్ఞమ్॥ దదర్శ దైత్యాంశజమల్పపుణ్యం సశైవదైవోపహతాత్మబుద్ధిమ్। నిన్దన్తమాత్మేశ్వరమచ్యుతం తం కూరాధిపః క్రూరవచోభిరుగ్రమ్॥ కూరేశపూర్ణౌ కుమతీప్సితఘ్నౌ పురస్థితౌ వీక్ష్య తయోరథైకమ్। త్రిదణ్డకాషాయశిఖోపవీతమ్ సితోర్ధ్వపుణ్డ్రాదికలక్షణాఢ్యమ్॥ యతీ ఇమౌ వేతి నిరీక్ష్య పార్శ్వే నాలూరవస్థానముువాచ రాజా । అసౌ స రామానుజ ఏవ కిం వా నాసావితీ ప్రాహ సమశ్చ తస్య॥ అనేన తత్త్వార్థనిరూపకేణ తత్త్వం పరంశ్చైల్లిఖితం తవోక్తమ్ । తమాహ రాజా ప్రతిలేఖ్యమిత్థం శివాత్పరం వస్తు న కిఞ్చనేతి॥ నిరుద్ధమాకర్ణ్య రుషా విషాదాదభీస్స్వశేషార్థవిదాం వరేణ్యః । తిష్ఠత్సు వేదేషు సహేతిహాసైస్సమం పురాణైస్స్మృతిభిశ్చ తన్త్రైః॥ అన్యాయ్యమన్యాయ్యమహో యదీత్థం వినా స్వతత్పరమం వదన్తి। ప్రవర్తమానాః ప్రభవశ్చరన్తి బ్రహ్మేశచక్రిత్రనిశాకరాద్యాః॥ యస్యాజ్ఞయా నాహతయా చ నిత్యం విష్ణోశ్చ తస్మాదపరః పరః కః॥ విష్ణోః పరోస్తీతి కథం వదన్తి వేదాన్తవిజ్ఞానవిదాం పురస్తాత్॥ యన్నాభిపద్మే విజయోప్యపశ్యద్బ్రహ్మాణమీశం కమలాసనస్థమ్। విశ్వప్రపఞ్చం విమలోదరస్థం తస్మాద్ధరేః అస్తి పురః పుమాన్ కః॥ భూయోప్యధీరాత్మగతం విచిన్త్య నయుక్తమథ్యాస్మ గిరోప్యసహ్యామ్ । ఛలోక్తిరేవాస్య జయాయ హేతిరితి శశంస విద్వత్సు మిషత్సు తత్ర॥ శివాత్పరం వస్తు సదాస్తి నిత్యం ద్రోణశ్చ తస్మాదధికం పరఞ్చ। ఇతి చ్ఛలోక్త్యా ప్రతిపాదితార్థశ్చుకోప సార్ధం ప్రగుణైస్స రాజా॥ ఛలోక్తిరస్మత్పురతః ప్రయుక్తా త్వయా భయావర్జితభాషణేన । దణ్డః ప్రచణ్డస్త్వయి పాలితవ్యో మహీసురత్వాన్న వధార్హ ఏవ॥ చక్షుర్ద్వయం ఛేపమథాహ రాజా మే నేహితం కూరకులాధిపస్య। కుదృష్టిసన్దర్శనదోషదుష్టదృష్టిద్వయోత్పాటనమిష్టమేవ॥ కర్తుం తథా తం విససర్జ రాజా పూర్ణం సమాహూయ భవాన్ లిఖస్వ । ఇతి ప్రయుక్తస్స తు నిర్భయో హరేః పరశ్చవై నేతి స పద్యమాహ

పాంసీసరద్వాపదాబ్జమేకః ప్రాదక్షిణ్యాన్యతమ న్తదన్యు। అదీధరన్మాధి ఏతత్స్మిన్ [illegible] కోవాధికోహ్యేషవిచారణీయః॥ యథాతమేనశ్చ చకారకోపాత్ నరాధమస్స్వ[illegible] మూశు) என்கிறபடியே காஷாயாதிதரரான ஆழ்வானையும் ஆக்ரவமயான பெரியநம்பியையுங்கண்டுஸேவித்து, "ராஜஸமுஹத்துக்கு வாருங்கோள்" என்றழைக்க;

பிராட்டியும் பெரியவுடையாரும் ராவணன்கையிலே அகப்பட்டாப்போலே, அவர்களும் அப்படியே அஸத்கோஷ்ட்டியான ராஜஸகாசத்திலேசெல்ல; அந்தராஜாவும் அஸஜ்ஜநங்களாலேசூழப்பட்டு, சிவபக்தனுய் அபரிமிதபாபனுய், "பரப்ரஹ்மநிரூபணம்பண்ணவேணும்" என்று ப்ரார்த்தித்தழைப்பித்த வித்வான்களாலே சூழப்பட்டவனுய், சைவரென்ன, பாஷண்டிகளென்ன, காபாலிகளென்ன, அதுவுமன்றியே அண்டினவர்களுக்கு விபத்துபண்ணுவிக்குமவர்களாலேயும் யமதூதர்கள்போலேயிருக்கிற துர்வாதிகளாலேயும்சூழப்பட்டவனுய், இனிமேலும், "க்ரிமிகண்டன்" என்று பேர்வரும்படியாயிருக்கிறவனுய் அஸுராம்ஸமாகப் பிறந்திருக்கிறவனுகையாலே ஸர்வாந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனை நிந்திக்கிறவனுயிருக்கிற அந்தராஜாவை ஆழ்வானும்பெரியநமபியும்கண்டார்கள்.

—✻—

(சிவாத்பரதரம்நாஸ்தி) என்று எழுத்திடச்சொன்ன சோழராஜன்
முன்னே, (த்ரோணமஸ்திததꞋபரம்) என்று எழுத்திட்ட
கூரத்தாழ்வானையும்பெரியநம்பியையும்நேத்ரோத்
பாடநம்பண்ண; அந்தராஜாவுக்குஉடைவா
ளெடுப்பாளொரு பெண்பெண்டாட்டி
இவர்களைஊருக்குவெளியில்ஆதரி
த்துவைத்துக்கொண்டிருந்
தாளென்பது.

ராஜாவும் புரஸ்த்திதர்களாய் குமதிநிராகரிஷ்ணுக்களாயிருக்கிற இவர்களிருவரையும்பார்த்து, அவர்களிருவரிலும் த்ரிதண்டகாஷாய சிகோர்த்த்வபுண்ட்ரதரராயிருக்கிறஇவரைவிசேஷித்துப்பார்த்துநாலூரானைப்பார்த்து, "நீர்முன்புசொன்ன ராமாநுஜனேஇவர்" என்று கேட்க; அவனும், "அந்தராமாநுஜனன்று, அவர்க்குஸத்ச்சர்" என்ன; இப்படிசொன்ன நாலூரானைப்பார்த்து தத்வார்த்தநிரூபகரான இவராலே, "சிவாத்பரதரமில்லையென்று எழுதுவிக்கவேணும்" என்று ராஜாசொல்ல;

விசேஷார்த்தவித்துக்களுக்கெல்லாம் புகலிடமாயிருக்கிற ஆழ்வானும், விருத்தமாய்கர்ணகடோரமாயிருக்கிற வாக்யத்தைக்கேட்டு,

கோபத்தினாலும் துஃகத்தினாலும் க்லேசயுக்தராய், (యోవిష్ణురేవపరతత్త్వమితిప్రతిజ్ఞాంప్రత్యర్థిసంసదిసమర్థయతేస్మసత్యామ్। వేదాన్తవాక్యగతిభిర్వివిధైశ్చతర్కైశ్శ్రీవత్సచిహ్నగురురేనముపఘ్నయామి॥ యఃఖల్వణోరణుతరోమహతోమహీయాన్నాత్మాజనస్య జగతశ్చగురుశ్చయోభూత్। వేదాత్మకప్రణవకారణవర్ణవాచ్యం తత్త్వంవయస్తుపరమేశ్వరమామనామః) (யோவிஷ்ணுரேவபரதத்வமிதிப்ரதிஜ்ஞாம் ப்ரத்யர்த்திஸம்ஸதிஸமர்த்தயதேஸ்மஸத்யாம் । வேதாந்தவாக்யகதிபிர்விவிதைஶ்சதர்க்கைஶ் ஶ்ரீவத்ஸசிஹ்நகுருமேநமுபக்நயாமி॥ யஃகல்வணோரணுதரோமஹதோமஹீயாநாத்மாஜநஸ்யஜகதஶ்சகுருஶ்சயோபூத்।வேதாத்மகப்ரணவகாரணவர்ணவாச்யம் தத்வம் வயந்துபரமேஶ்வரமாமநாமஃ) என்று இப்படி ச்ருதிஸ்ம்ருதிஇதிஹாஸபுராண தர்க்கங்களோடேகூட நித்யமாயிருக்கிறவேதங்கள் "ஸ்ரீமந்நாராயணனே பரதத்த்வம்" என்று அறுதியிட்டிருக்க, ஸர்வஜ்ஞர்களாயிருக்கிற இந்தவித்வாங்கள், ஸ்ரீமந்நாராயணனன்றியிலே வேறேயொருதேவதையை பரதேவதையென்று சொல்லுகிறார்கள், இந்த அந்யாயமெங்கேயுண்டு, இந்த ஆஶ்சர்யம் எங்கேயாகிலுமுண்டோ ;– "ப்ரஹ்மாவென்ன, ஈச்வரனென்ன, இந்த்ரனென்ன, அர்க்கனென்ன, நிசாகரனென்ன, இவர்கள்முதலான ஸகலதேவதைகளும், நிரங்குசையாயிருக்கிற யாதொருவருடைய ஆஜ்ஞையினாலே ஆஜ்ஞாபிக்கப்பட்டுத்தங்கள்தங்கள் அதிகாரங்களைப் பண்ணிக்கொண்டு ப்ரபுக்களாயிருக்கிறார்கள், அப்படிப்பட்ட ஸ்ரீமந்நாராயணனையல்லதுபரனாகஒருவனுண்டோ? யாதொருவருடையவிச்வரூபத்திலே ப்ரஹ்மாவையும் ருத்ரனையும் ஸமஸ்தப்ரபஞ்சங்களையும் சுத்தஸத்த்வமயமான திருவுதரத்திலே திவ்யசக்ஷுஸ்ஸினாலே கண்டான், அவனையன்றியிலே வேறேயொருபரமபுருஷன் எவனுண்டாகிறான்' என்றுகூப்பிட்டு, மீளவும், இந்தபாஷண்டபூயிஷ்டமானஸதஸ்ஸிலே பரதத்த்வப்ரதிபாதகங்களாயிருக்கிற வேதாந்தவாக்யோபந்யாஸம்உசிதமன்று, சலோக்தியேநமக்குஹிதம்" என்று மநஸ்ஸிலேநிஶ்சயித்து, "குறுணிக்குமேலுமுண்டு, அதுக்குமேலே பதக்குமுண்டு, அதுக்குமேலேயும் அதிகமுண்டு" என்று எல்லார்க்கும்கேட்கும்படி கோஷித்து, (ద్రోణమస్తితతఃపరమ్) (த்ரோணமஸ்திததஃபரம்) என்று எழுத்திட்டருளினார்.

இத்தைக்கேட்டு ராஜாவும்குபிதனாய், "என்முன்பே நீர் இப்படி எழுத்திடுகையாலே க்ரூரதண்டம் உம்முடையவிடத்திலே பண்ணவேணும், நீர் ப்ராஹ்மணராகையாலே வதார்ஹரன்று, உமக்கு தண்டம் நேத்ரோத்பாடநம்" என்ன ; ஆழ்வானும், "குத்ர்ஷ்டிகளையும் உன்னையும்பார்த்த மாம்ஸசக்ஷுஸ்ஸுக்கு நீசொன்னதுவே தண்டம், அதுவேநமக்கபிமதம்" என்று திருக்கைகளாலே கீண்டுகொண்டு, (ఇహసన్తోనవాసన్తి) (இஹஸந்தோநவாஸந்தி)(வாழாட்பட்டுநின்றி

ருள்ளீரேல்) என்கிறபடியே பகவத்விட்டுக்களாயிருக்கிற இந்நீசகோஷ்டிக்குள்ளே பகவத்பரராயிருப்பார் ஒருவராகிலுமில்லையோ என்றுராய்ந்துபோர; அப்போது ராஜாவுக்கு உடைவாளெடுப்பாளொரு பெண்பெண்டாட்டி, வாளை அவன்முன்னேபோகட்டு, "நாயன்தே! அடியேன் விடைகொண்டிருக்கிறேன்" என்று ஆழ்வானுக்குக்கைகொடுத்து ஊருக்குப்புறத்திலேவிட்டு அற்றைக்கங்கே அநுகூலித்துக்கொண்டிருந்தாள்.

பின்பு பெரியநம்பியையும் அழைத்து, "நீர் எழுத்திடும்" என்ன; பெரியநம்பியும் அவனைப்பார்த்து, "ஸ்ரீமந்நாராயணனே பரதத்வம்" என்று பஹுமுகமாகவருளிச்செய்து, அதுவுமன்றியே, (ఏకః ప్రాసీసరత్పాదమన్యః ప్రక్షాళయన్ముదా । అపరోదీధరన్మూర్ధ్నా కో౽ధికస్తేషు కథ్యతామ్) (ஏகஃப்ராஸீஸரத்பாதமந்யஃப்ரக்ஷாளயந்முதா । அபரோதீதரந்மூர்த்நா கோதிகஸ்தேஷு கத்யதாம்) என்கிறபடியே ஒருவன் இடக்காலை உசரநீட்டினன், அந்தக்காலை ஒருவன் கமண்டுலோதகத்தினலேகழுவினன், அந்தக்கழுவினஜலத்தை ஒருவன்தரித்து பரிசுத்தனானன், இதிலே பெரியவர் ஆர்? நீயேசொல்லிக்காணாய்" என்றும், அதுவுமன்றியே, "(యచ్ఛౌచనిస్సృతసరిత్ప్రవరోదకేన తీర్థేన మూర్ధ్న్యధిధృతేన శివశ్శివో౽భూత్) (யச்சௌசநிஸ்ஸ்ருதஸரித்ப்ரவரோதகேந தீர்த்தேந மூர்த்நிவித்ருதேந சிவஶ்ஶிவோபூத்) என்கிறபடியே த்ரிவிக்ரமன்திருவடிகளில்பிறந்த கங்காஜலஸங்கத்தாலே கபாலித்வம்போய் சிவத்வமுண்டானவனிறே" என்று அருளிச்செய்ய; அவனும் குபிதனாய் ஆழ்வானைப்பண்ணுவித்ததண்டத்தை இவரையும்பண்ணுவித்து தன்ஸகாசத்திலும் புறப்படவிட; அத்தசையிலேபெரியநம்பிதிருமகளார் அத்துழாய் இவர்களிருவரையுங்கூட்டிக்கொண்டுபோய் பரிஹரித்துக்கொண்டிருந்தாள்.

—⁂—

பெரியநம்பி, "ஒருபாகவதன்மடியைக்காட்டில் கோயில் உத்க்ர்ஷ்டஸ்த்தலமா" என்று அருளிச்செய்து, கூரத்தாழ்வான்மடியில் திருமுடியும் அத்துழாய்மடியில் திருவடிகளுமாகத் திருநாட்டுக்கெழுந்தருளினரென்பது.

ஆழ்வானும், "தர்சநத்துக்காகதர்சநங்கொடுக்கப்பெற்றோமே!" என்று ப்ரீதராயெழுந்தருளியிருந்தார்; பெரியநம்பியும் வ்ர்த்தராகையாலே வேதனைபொறுக்கமாட்டாமல் ஆழ்வான்திருமடியிலேதிருமுடியும்அத்துழாய்திருமடியிலே திருவடிகளுமாய்க்கண்வளர்ந்தருள; நம்பியுடைய ஆபத்தசையிலே ஆழ்வானும் அத்துழாயும், "கோயிலும் ஸ்ரீபாஷ்யகாரரும் பெருமாளுமிருக்க இங்கேதிருநாட்டுக்கெழுந்தருள வேண்டுமோ!" என்று விண்ணப்பிக்க; பெரியநம்பியும், "நானும்

அங்கேபோனேனாகில், "பெரியநம்பிக்ககப்பட்ட கோயிலிலேசரமதசைக்குப்போகவேண்டிற்று, நமக்கும் அப்படியாகவேணும்" என்றுதேசாந்தரஸ்த்தரான ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும் திவ்யதேசங்களை அபேக்ஷித்து அதுகிடையாமையாலே என்செய்யக்கடவது?" என்று ஏங்கியிளைப்பார்கள் ; அப்படி ஆகாமைக்காகவும், இன்னமும், (యత్రక్వాప్యథవాదేశే వైష్ణవో మ్రియతే యది । తదా తత్రాస్య సాన్నిధ్యం కరోతి గరుడధ్వజః) (யத்ரக்வாப்யதவாதேசே வைஷ்ணவோம்ரியதேயதி। ததா தத்ராஸ்ய ஸாந்நித்யம் கரோதிகருடத்வஜ:) என்கிறபடியேராவணன்வேட்டைவ்யாஜத்தாலே பெருமாள் தண்டகாரண்யத்துக்கெழுந்தருள, அங்கேபெரியவுடையாருக்குப் பெருமாள்திருமடிவஸித்தித்தாப்போலே,பெரியநம்பிக்கும்,கண்டகனை கண்டிக்கிறவ்யாஜத்தாலே ஆழ்வான் திருமடிவஸித்தித்தது. (వైష్ణవస్యాఙ్గసంయోగాద్వైష్ణవస్య గృహేపి వా) (வைஷ்ணவஸ்யாங்கஸம்யோகாத் வைஷ்ணவஸ்யக்ருஹேபிவா) என்று அருளிச்செய்து, "ஒருபாகவதன் மடியைக்காட்டில் கோயிலுக்கு உத்கர்ஷமென்" என்று அருளிச்செய்து ஆளவந்தார்திருவடிகளை த்யாநித்துக்கொண்டு, கூடஸ்த்தரான நாதமுநிகள் குருகைகாவலப்பன் திருநாட்டுக்கெழுந்தருளின முக்திபூமியிலே இவரும்திருநாட்டுக்கெழுந்தருளினார்.

—✦—

ஸ்ரீபராந்தகனில்ஸ்ரீவைஷ்ணவர்கள், பெரியநம்பிவிமலசரமவிக்ரஹத்தை ப்ரஹ்மமேதத்தாலேஸம்ஸ்கரித்துத்திருப்பள்ளிபடுத்துத் திருவத்யயநமும்பெருக்கநடத்தியருளினார்களென்பது.

அங்கே அநாதப்ரேதஸம்ஸ்காரம்பண்ணிக்கொண்டுதிரிவார்சிலர் வந்து அப்படிகளைச்சொல்லித் தாங்கள்செய்வதாக உத்யோகிக்க ; இத்தசையிலும், ஒருவரையும் ஒன்றுஞ்சொல்லியறியாத ஆழ்வானும் அத்யவஸாயங்குலையாமல், "வாரீர்கோள்மாணிகாள் ! உபயவிபூதிநாதனான ஈச்வரனும் ஈச்வரவிபூதியும் வைஷ்ணவனுக்கு கிஞ்சித்கரிக்கவிருக்க, வைஷ்ணவனுமாய் அறைவையுமாயிருப்பாரை நீங்கள் எங்கேதேடுவதிகோள்" என்று அவர்களை உபேக்ஷித்துவிட்டாராய்,இப்படியிருக்குந்தசையிலே, (కూరేశస్సహచపరాన్తకద్విజేన్ద్రైస్సంస్కృత్యోచితవిధినా మహాపూర్ణః) (கூரேசஸ்ஸஹசபராந்தகத்விஜேந்த்ரைஸ்ஸம்ஸ்க்ருத்யோசிதவிதிநாமஹாபூர்ணம்) என்கிறபடியே ஸ்ரீபராந்தகனில்ஸ்ரீவைஷ்ணவர்கள்வந்து உதவிமஹாபூர்ணருடைய மங்களமான வபுஸ்ஸை ஸர்வேச்வரனுக்குபூர்ணாஹுவிஸ்ஸாம்படி ஸமர்ப்பித்து ப்ரஹ்மமேதத்தாலே திருப்பள்ளிபடுத்து ஆழ்வானையும் ஒருகட்டணத்திலே ஊரேறஎழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோய்த் தங்கள் திருமாளிகையிலே

பரிஹரித்துக்கொண்டிருந்தார்கள். இப்படி ஆழ்வான்விஷயத்திலும் பெரியநம்பிவிஷயத்திலும் உதவின நாவல்கொடியம்மாள், அவர்களுக்கு நம்பெருமாள்தீர்த்தப்ரஸாதங்களும் ஸகலவரிசைகளும் ப்ரஸாதித்தருளி திருவோலக்கத்தில் ஆசார்யபதமும் ப்ரஸாதித்து உபலாளித்தருளினர்.



வேடமலையருகிலுள்ள வேடமுதலிகள், திருவரங்கர்செல்வக்குறையையும் உடையவர்திருவடிகளுக்குண்டானகுறையையும் கோயில் ஸ்ரீவைஷ்ணவர்சொல்லக்கேட்டு ஏருழுகைதவிர்ந்து ஆறுநாள் பட்டினியேகிடந்தார்களென்பது.

அநந்தரம் உடையவர் மேற்கே திருநாராயணபுரத்தைநோக்கியெழுந்தருளுகிறவர், ஏழுநாள் உபவாஸத்துடனே வேடமலையருகேயெழுந்தருள ; அவ்விடத்திலே திருமலை நல்லான்சிஷ்யர்களாயிருப்பார் சிலர் புலம்பாவாநிற்க, அங்கே ஒருஸ்ரீவைஷ்ணவர் கோயில்நின்றும் வாராநிற்க, அவர்களும், திருநாமமேதுறியாக, "எங்குநின்றும்எழுந்தருளுகிறீர்" என்றுகேட்க ; ஸ்ரீவைஷ்ணவரும், "கோயில்நின்றும் வருகிறேம்" என்ன ; அவர்களும், "பெரியபெருமாள் திருச்செல்வத்துக்கு ஒருகுறையில்லையே, எம்பெருமானார்திருவடிகளுக்குஒருகுறையில்லையே" என்ன ; அந்தஸ்ரீவைஷ்ணவரும், "என்ன எம்பெருமானாரும், என்னதிருச்செல்வமும், எம்பெருமானார் வெள்ளைசாத்தியெழுந்தருளினர், இன்னவிடத்தேயெழுந்தருளினரென்று தெரிந்ததில்லை" என்றவாறே அவர்களும் புனம்பாவுகைதவிர்ந்து ஆறுநாள் பட்டினியேகிடந்தார்கள் ;



உடையவர் முதலிகளுடனே திருநாராயணபுரத்தைநோக்கியெழுந்தருளும்போது ஏழுநாள்பட்டினியாக வேடமலையருகேயெழுந்தருள, நல்லான்திருவடிஸம்பந்திகளான வேடமுதலிகள் மழையில்நனைந்துவந்தஅவர்கள்சாத்துகைக்குத் திருப்பரியட்டமும் அமுதுசெய்தருளுகைக்கு தினைக்கதிரும் தேனும்ஸமர்ப்பித்தார்களென்பது.

ஆறும்நாள்ராத்ரி எம்பெருமானும் முதலிகளும் மழையிலே யீடுபட்டு அவர்கள்புனத்திலே அம்மலையடியிலே நெருப்பொளி கண்டு, "அங்கேநம்மைக்கொண்டுபோங்கோள்" என்று அருளிச்செய்ய ; அவர்களும் அப்படியேகொண்டுபோய், "வழியெங்கே? பிள்ளைகாள் !" என்ன ; அவர்கள், "ப்ராஹ்மணக்குரலாயிருந்தது, பெருவிடாயோடே ஒருகுரலழையாநின்றது" என்ன

வேலியைப்பிரித்து, "இங்கேவாருங்கோள்" என்று இவர்கள்சாத்துகைக்குத் திருப்பரியட்டமும்கொடுத்து இவர்கள்சாத்தியிருந்த திருப்பரியட்டங்களையும்வாங்கி உலரவிட்டுக்காய்ச்சி ஒற்றி, "நீங்கள் எங்குநின்றும் எழுந்தருளுகிறிகோள்" என்றுகேட்க; இவர்களும், "கோயில்நின்றும்வருகிறோம்" என்ன; "எம்பெருமானார்செய்தருளுகிறபடியென்" என்றுகேட்க; முதலிகளும், "நீங்கள் எம்பெருமானாரையறிந்தபடியெங்ஙனே" என்ன; "நாங்கள் நல்லானடிமைகள், எங்களுக்கு நல்லான்ஹிதமருளிச்செய்யும்போது த்வயத்தைப்ரஸாதித்தருளி, 'நமக்கெல்லார்க்கும் பரமாசார்யர் எம்பெருமானாராயிருக்கும், நீங்கள்எம்பெருமானார்திருவடிகளேதஞ்சமென்றிருங்கோள்" என்றருளிச்செய்தருளினார்" என்ன; உடையவரும், (శ్రీనల్లానితిమేఘోయంవనమధ్యేప్రవర్షతి । ఇతిప్రసిద్ధమాచార్యంపరబ్రహ్మపరంభజే) (ஸ்ரீநல்லாநிதிமேகோயம்வநமத்யேப்ரவர்ஷதி । இதிப்ரஸித்தமாசார்யம்பராத்பரம்பஜே) என்றருளிச்செய்து நல்லான்என்கிறகாளமேகம்நடுக்காட்டிலும்வர்ஷித்ததோ! என்றருளிச்செய்தருளினார்; அவ்வளவிலே அருகிருந்தமுதலிகள், "இவர்தாம் எம்பெருமானார்" என்று உடையவர்திருவடிகளைக்காட்ட; "அவர்களும் திருவடிகளிலேவிழுந்துஸேவித்து பெருக்கவ்யாகுலப்பட்டு அனைவரும் ஆதரத்துடனேநின்று தினைக்கதிரைக்கொண்டுவந்து தேனமுதையும்மிடாவோடேஸமர்ப்பித்து, "இத்தைவறுத்திடித்துத்தேனிலேகுழைத்து அமுதுசெய்தருளவேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய; அவர்களும் அப்படியேசெய்து அமுதுசெய்தருளிக்கண்வளர்ந்தருள; அதின்மற்றைநாள் அந்தவேடமுதலிகளிலே ஒருவரையும்ஸ்ரீபாதத்தில் முதலிகளிலே ஒருவரையும்கோயிலுக்குப்போகவிட; அங்குநின்றும் நானூற்றுநாற்பத்தஞ்சுமுதலிகள் எழுந்தருளினார்கள்.

---

மற்றைநாள்வேட்முதலிகள், அந்தஸ்ரீவைஷ்ணவர்களை மற்றொருவேடமுதலி அகத்திலேவிட, அவர், கொங்கில்பிராட்டி திருமாளிகையில்விட்டுக் குறைவறுப்புச்சமைத்தாரென்பது.

அதின்மற்றைநாள் வேடமுதலிகள் அந்தமலைக்குமேற்கே அருகாகவழிகொண்டுபோய் ஒருவேடமுதலியகத்திலேவிட்டு மீண்டுபோனார்கள்; அந்தவேடமுதலிபகலெல்லாம் வேட்டைக்குப்போய்வந்து உண்ணப்புக்கவாறே, "ப்ராஹ்மணர் உண்ணுதிருக்கநாம்உண்ணலாகாது" என்று அருகாக ஒருக்ராமத்திலேயிருப்பானொரு கட்டளைவாரியென்பானொருவனகத்திலே வேண்டும்கட்டளைகளையுங்கொடுத்து, "சடக்கென இவர்களையமுதுசெய்யப்பண்ணுவியுங்கோள்" என்று ஆளுங்கொடுத்துப்போகவிட; அவர்களும், இவர்களையழைத்துக்கொண்டுபோய்ச்சடக்கென வமுதுசெய்யப்பண்ணுவியுங்கோள் என்றுசொல்லி

மீண்டார்கள். பின்பு அவ்வகமுடைய மணவாட்டிப்பெண்பிள்ளையும் முதலிகளுக்கு தண்டன்ஸமர்ப்பித்து, "உங்களுக்கு அமுதுசெய்யவேண்டாவோ" என்றுகேட்க; முதலிகளும், "வேண்டா" என்றார்கள்; அவளும் "உங்களுக்குபயப்படவேண்டா" என்றாள்; அத்தைக்கேட்டுமுதலிகளும், "இதுவென்பெண்ணே" என்றுகேட்க; "நானும் எம்பெருமானார்ஸ்ரீபாதத்தையுடையேன்" என்றாள்; பின்பு முதலிகளும், "நீ எம்பெருமானார்ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தபடியெங்ஙனே" என்ன; அவள்சொன்னபடி;-

கொங்கில்பிராட்டி, தான்உடையவர்திருவடிகள்ஸம்பந்தம்பெற்றபடியும், உடையவர், அவளுடைய அநுஷ்டாநத்தை ஆராய்ந்துமுதலிகளை அமுதுசெய்ய நியமித்தருளியதும்.

நாங்கள் இவ்விடம்வர்ஷமின்றிக்கேயிருக்கையாலே என்னகமுடையானும் நானும்கோயிலிலேவந்திருந்தோம், ஒருமச்சிலேயிருக்கையாயிருக்கும்; ஒருநாள் அந்தஅகத்திலே எம்பெருமானார்மாதுகரத்துக்கு எழுந்தருளினார், அவரைக்கண்டு மச்சில்நின்று மிழிந்து இடைகழியிலேநின்று தகைந்தேன், ராமாநுசனும், "இதுவென்பெண்ணே? என்றுகேட்டருளினார்; அப்போது நானும், "உம்மைராஜாக்களும்பட்டணத்துமுதலிகளும்தெண்டனிடாநின்றார்கள், நீர்மாதுகரம் பண்ணாநின்றீர், இதுக்குப்பொருளேது?" என்றுகேட்டேன்; "அவர்களுக்கு பகவத்விஷயத்திலே சிலவார்த்தைசொல்லுகையாலேகாண்" என்றருளிச்செய்தார்; அந்தவார்த்தையை எனக்குமருளிச்செய்யவேணுமென்று விண்ணப்பஞ்செய்தேன், அப்போதுஹிதத்தைப்ரஸாதித்தருளினார்; பின்பு எங்கள்தேசம்வர்ஷமுண்டாய்த்தெளிந்து எங்கள் நாட்டேறப்போகிறபோது அவராருளிச்செய்த நல்வார்த்தையை மறந்தேன், மீளவும் ஸேவிக்கப்பெற்றிலேன் என்றிருக்கச்செய்தேமீளவும் அப்போது அங்கேயெழுந்தருளினார்; பின்பு உடையவரைஸேவித்து "தேவரீர்முன்பருளிச்செய்த நல்வார்த்தையைமறந்தேன், அத்தைஎன்னெஞ்சில்படும்படி அருளிச்செய்யவேணும்" என்று விண்ணப்பஞ்செய்தேன், அப்படியே நெஞ்சில்படும்படி அருளிச்செய்து எழுந்தருளப்புக்கவாறே, "அடியேனுக்கு ஆத்மரக்ஷையாக ஏதேனுமொன்று தந்தருளவேணும்" என்று விண்ணப்பஞ்செய்தேன், அப்போது தாம் சாத்தியிருந்தஸ்ரீபாதரக்ஷையைப்ரஸாதித்து எழுந்தருளினார்; பின்பு நாங்களும் அந்நாளேபோந்தோம், மீளவும் ஸேவிக்கப்பெற்றிலேன் என்றவாறே, உடையவரும் தம்திருவுள்ளத்திலேவிசாரித்தருளி, தளிகைக்குத் திருப்போனகம்சமைக்கும்படி நியமித்தருளி இவள்செய்யுமதுபார்த்திருக்கச்சொல்லி ஒரு ஸ்ரீவைஷ்ணவரைநியமிக்க; அவளும்

அடைவாகச்சமைத்து முன்பு உடுத்தபுடைவையைவிழுத்து சுத்தமான புடைவையைஉடுத்துக்கொண்டு போனகத்தை உள்ளேகொண்டுபுகுந்து, "எம்பெருமானார்திருவடிகளேசரணம்" என்று உச்சரித்துப் புறம்பேபுறப்பட்டு முதலிகளுக்குதண்டன்ஸமர்ப்பித்து ஸ்ரீபாதம்விளக்க எழுந்தருளவேணும் என்று விண்ணப்பம்செய்ய; இவள்செய்யுமது பார்த்திருக்கச்சொன்னஸ்ரீவைஷ்ணவரையழைத்துஇவள்செய்ததென் என்றுகேட்க,அந்தஸ்ரீவைஷ்ணவர் விண்ணப்பஞ்செய்தபடி;- அவளும் அடைவாகச்சமைத்து முன்புடுத்தபுடைவையயவிழ்த்து சுத்தமானபுடைவையயுடுத்துக்கொண்டு திருப்போனகத்தைஉள்ளே கொண்டுபுகுந்து "எம்பெருமானார்திருவடிகளேசரணம்"என்று உச்சரித்துக்கதவையடைத்துத்யாநம்பண்ணிக்கொண்டிருந்தாள், கறுத்துநீண்டிருந்தது, எம்பெருமானுயிருந்ததில்லை என்றவாறே, அவள்தன்னையழைத்து, "நீசெய்ததென் ?" என்றுகேட்க; முன்பு ஏறியருளப்பண்ணித்தந்த ஸ்ரீபாதரக்ஷையை ஏறியருளப்பண்ணித் திருவடிவிளக்கி அமுதுசெய்யப்பண்ணியாய்த்து அடியேன் ப்ரஸாதஞ்சூடுவது, இப்போதும் அப்படியேசெய்தேன்"என்ன; அவைதன்னைக்கொண்டுவந்து காட்டுக்காண் என்ன ; அவளும்கொண்டுவந்துகாட்ட ; அவை அங்குத்தைக்குத்தகுதியாயிருந்தது, எம்பெருமானாருளிச்செய்தவார்த்தை ஒத்திருந்ததில்லையாகில்முதலிகள்அமுதுசெய்யார்கள்,அத்தைஎன் செவியிலேசொல்லிக்காண் என்ன; அவளும் விண்ணப்பஞ்செய்தாள், வார்த்தையும் ஒத்திருந்தது, ஆகில் இதுக்குள்ளே எம்பெருமானருண்டோ என்று பார்த்துக்காண்என்ன ; அவளும் திருவிளக்கு ஏற்றிக் கொண்டுவந்து அடைவேபார்த்தாள், எம்பெருமானார்திருவடிகளானவாறே அங்கேதிகைத்து, "திருக்கையிலேபிடித்த த்ரிதண்டமும் திருவரையிலேசாத்தின காஷாயமுமில்லாமையாலே தெரிகிறதில்லை" என்றவாறே, "நான்காண்" என்றருளிச்செய்ய ; அவளும் திருவடிபிடித்துக்கொண்டு அழப்புக்கவாறே கண்களைத்துடைத்து, (ஜ்ஞாநாஸிபுஜேஸ்ரீவகுணவந்திச) (விதராந்நாஙிபுபுஜேஜஸ்ரீகுணவந்திச) என்கிறபடியே பாவநத்வபோக்யத்வங்களை யுடைத்தாயிருந்தது, இனி முதலிகளெல்லாரும் அமுதுசெய்யக்குறையில்லை" என்றருளிச்செய்ய; அவர்களும் அமுதுசெய்தருளிக்கண்வளர்ந்தருள ;

—❧❧※❧❧—

உடையவர், முதலிகள் அமுதுசெய்த தளிகைப்ரஸாதத்தைச்சூடப்
பெற்றத்தால் ஸ்வாதீநஜ்ஞனகொங்கில்பிராட்டியின் பர்த்தாவை
தம்திருவடிகளுக்கு ஆளாக்கிக்கொண்டதும்,
த்ரிதண்டகாஷாயாதிகளை ஸம்பாதித்து
தரித்தருளியதும்.

அவளும் தளிகைப்ரஸாதத்தைக்கலந்து தன்பர்த்தாவையும்எழுப்பி ப்ரஸாதப்படப்பண்ணி தான் ப்ரஸாதப்படாமலிருக்க; அவனும், "இதுவென்" என்றுகேட்க ; கோயிலினின்றும் உடையவரும் முதலிகளும் எழுந்தருளி,"ப்ராக்ர்தக்ர்ஹத்திலே அமுதுசெய்யமாட்டோம்" என்றுகண்வளர்ந்தருளினார்கள், ஆகையாலே நான்ப்ரஸாதஞ்சூடுவதில்லை" என்ன; அவனும் அதுக்குநான்செய்யவேண்டுவதென்"என்ன; "நீரும் எம்பெருமானார்ஸ்ரீபாதத்தை ஆச்ரயிக்கவல்லீரோ" என்ன ; அவனும் இசைந்து ப்ரத்யயம்பண்ணிக்கொடுக்க ; அவளும் ப்ரஸாதப்பட்டு நித்ரைபண்ணி,மற்றைநாள்விடிவோறே பெரியபிராட்டியாராகிற அந்தப்பெண்பிள்ளைவந்து எம்பெருமானார்திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து, "இற்றைதிவஸம் நல்விடிவாம்படி தேவரீர் இற்றைக்கு இங்கேயெழுந்தருளியிருக்கவேணும், இவரைக்ர்பைபண்ணி யெழுந்தருளவேணும்" என்று தன்பர்த்தாவைக்காட்டி விண்ணப்பஞ்செய்ய ; அப்படியே அற்றைக்கு எழுந்தருளியிருந்து, அவளுக்காக அவனை க்ர்பைபண்ணியருளி அந்தக்ராமத்திலே நாலஞ்சுநாள் எழுந்தருளியிருந்து,த்ரிதண்டகாஷாயாதிகளையும்ஸம்பாதித்துதம்முடையதிருவாராதநமான பேரருளாளர்ஸந்நிதியிலேவைத்து அவற்றைஉடையவர்தரித்தருளினார். அதின்மற்றைநாள், பெருமாள், பிராட்டிவர்த்தாந்தமாராய்கைக்குமாருதியைப்போகவிட்டருளினாப்போலே, ஆழ்வான்தசையை ஆராய்கைக்கு மாருதியாண்டானைப்போகவிட்டருளினார்; அவருடன் அம்மங்கியம்மாளும் கூடவெழுந்தருளினார்.

—❧❧❧—

உடையவர் திருவேங்கடமுடையானைக்குறித்து அர்க்க்யப்ரதாநம்
பண்ணியருளியது.

அதின்மற்றைநாள்உடையவரும், "இடம்வலமேழ்பூண்டவிரவித்தேரோட்டி,வடமுகவேங்கடத்துமன்னும்"என்றும், (வேங்கடம்கோயில்கொண்டதனோடும்வானிடையரக்கன்மேவிநிற்பான்)என்றுஞ்சொல்லுகிறபடியே—ஸதாத்யேயனாய் *ஸவித்ர்மண்டலமத்யவர்த்தியான நாராயணன்திருவேங்கடமுடையானாகையாலேஅவனைக்குறித்துதிருக்கையில் அர்க்க்யஜலத்தைஸமர்ப்பித்தருளினார். ப்ராஹ்மணர்கையில்அர்க்க்யஜலத்தாலே ஆதித்யனுக்கு தேஜஸ்ஸு அபிவர்த்தமாய் அந்ததேஜஸ்ஸாலே

மந்தேஹரைதஹிக்குமாப்போலே*நிலவுஞ்சுடர்சூழொளிமூர்த்தியான திருவேங்கடமுடையானும் அஜ்ஞாநதமோபிபூதனானவனை ஜ்ஞாநகட்கத்தினாலே நிக்ரஹித்தருளினார்; அதெங்ஙனேயென்னில்;- (దుర్మేధాస్స్వజనపురోహితానురోధాన్నిర్భిద్య త్రిభువననాయకస్య విష్ణోః। ధామైకం సులలితచిత్రకూటముఖ్యం పాదోధేః పయసి స పాతయాంబభూవ) (துர்மேதாஸ்வஜநபுரோஹிதாநுரோதிநிர்ப்பித்யத்ரிபுவநநாயகஸ்யவிஷ்ணோ: । தாமைகம்ஸுலலிதசித்ரகூடமுக்யம்பாதோதே:பயஸிஸபாதயாம்பபூவ) என்கிறபடியே சோழமண்டலத்திலுண்டானஎம்பெருமான்களுடையகோயில்களையெல்லாம் குலைத்துவம்பமாகஅம்பலத்திலே அடக்குவித்தும், குணகடலிலே கோவிந்தராஜனைக்கண்வளரப்பண்ணியும்,அநந்தரம்அகில திவ்யதேசங்களுக்கெல்லாம் வேர்ப்பற்றாயிருக்கிற, * செருவிலேயரக்கர்கோனைச்செற்றநம்சேவகனார் மருவியபெரியகோயிலையும் அலைக்கவேணும் என்று கெடுவழியிலேகண்டவன் வந்துகடுகென்விட;

—:—

திருவேங்கடமுடையான் திருக்குற்றுடைவாளாலே சோழன் கழுத்தைக்குத்த அவன்க்ரிமிகண்டனானனென்பது.

அவ்வளவிலேதிருவேங்கடமுடையான்செய்தருளினபடி;-*மந்திபாய்வடவேங்கடமாமலைவானவர்கள்சந்திசெய்யநின்றான்அரங்கத்தரவினணையானாகையாலேதம்படுக்கைவிடாய்*பள்ளிகொள்ளுமிடமானகோயிலைஅலைப்பதாகவருகையாலே,கடுகஉடைவாளையுருவிஅந்தகண்டகன்கண்டத்திலேஅவனுக்கு உசிததண்டமாம்படிகுத்தி * ஆகாயமூடறுத்தண்டம்போய்நீண்டு அகண்டமான வடிவோடே கண்டகரைகண்டதண்டமாக்குகிற கட்கமும்கையுமாய்க்கறுத்தவடிவோடேநிற்க; அந்தபுருஷனைக்கண்டுகலங்கி ஆரென்றலறிக்கேட்க; அவனும்“நம்மையறிந்திலையோ, * சிறுவெரியும்திருநேமிவலவனாய், * திணரார்சார்ங்கத்தையுமுடையனாய், அதிலே * தீவாய்வாளி மழைபொழியுமவனாய், * வெஞ்சுடர்வாளான வுடைவாளையுடையனாய்க்கொண்டு * நிலமுலகுக்காய்நின்ற திருவேங்கடத்தெம்பெருமான் நான்”என்று மூதலித்து முன்னேநிற்க; அவனும், “வேங்கடத்தான்குத்தினான் வேங்கடத்தான்குத்தினான்” என்றுஏங்கிவிழுந்தவளவிலே மீண்டுதன்னூரைச்சேர; அவ்வளவில் தசகண்டஸமனான அவன்கண்டத்திலே வ்ரணமாய் க்ரிமித்து, (ఇహైవ ఫలమశ్నుతే) (இஹைவபலமச்நுதே) என்கிறபடியே — பாபபலத்தை இம்மையிலே அநுபவித்துக்கொண்டு சிலகாலம் சித்ரவதமாகக்கிடந்தான்; இப்படி அவன்கர்ப்பங்கலங்கி நிர்ப்பார்க்யனாய்விழும்படி அர்க்க்யப்ரதாநம்பண்ணினவநந்தரம், கோவையேறவெழுந்தருள;

—:—

உடையவர், முதலியாண்டான்திருவடிவிளக்கி வந்தபுஷ்கரிணிதீர்த்தத்தாலே கோவையூராரான பாஷண்டிகளைத்திருத்தி, தொண்டனூர்நம்பிதிருமாளிகைக்கெழுந்தருளி, ததீயாராதநத்துக்குவேண்டியவற்றைக்கொங்கில்பிராட்டி பர்த்தாவைக் கொண்டு வரவழைத்துக்கொண்டாரென்பது.

அவ்வூராரடைய சைவராகையாலே உடையவரை அநாதரித்திருக்க; உடையவரும் அவர்கள்திருந்தும்படிக்கு முதலியாண்டானைப் பார்த்து, "ஆண்டான்! அவர்கள் நீரெடுக்கிறதுறையிலே திருவடிகளைவிளக்கிவாரும்" என்று நியமிக்க; அவரும் அப்படியேசெய்ய; அந்த அதுலமான பாவநமான தீர்த்தஸ்வீகாரத்தாலே அவ்வூரிலுண்டானவர்களடையத்திருந்தித் திருவடிகளிலே ஆச்ரயித்தார்கள்; அன்றுதொடங்கி அவ்வூருக்கு "ஸ்ரீஸாளக்ராமம்" என்றுதிருநாமமாய்த்து. அவர்களுக்குத் திருவடிகளிலே நித்யஸேவையுண்டாம்படி அத்தை சிலாலிகிதமாக்கிவைத்து குப்தமாக நிக்ஷிப்ததீர்த்தமுண்டாக்கிக்கொடுத்து அவர்களை அநுகூலராக அபிமாநித்து அங்கேவடுகநம்பிக்கு தர்சநதாத்பர்யங்களை அருளிச்செய்துகொண்டு சிங்கர்கோவிலிலேயெழுந்தருளி அவ்விடந்தன்னிலே ப்ரதிகூலநிரஸநம்பண்ணுவதாக விசாரித்து கோபாக்நியாலே ச்யேநவித்த்யுக்தப்ரகாரத்திலே அபிசாரகர்மத்தைஆச்சானைக்கொண்டு அநுஷ்டிப்பித்தருளி அவ்விடத்திலே சிலகாலமெழுந்தருளியிருந்து அங்குநின்றும்புறப்பட்டுத்தொண்டனூரேறவெழுந்தருளி நிரபிமாநரான தொண்டனூர்நம்பிதிருமாளிகையிலேயெழுந்தருளியிருந்தார். அப்போது ததீயாராதநத்துக்கு அமுதுபடி முட்டாக; அப்போது, கொங்குப்பிராட்டியார்பர்த்தாவுக்குத்திருமுகம் போகவிட்டருள; அவரும் திருமுகத்தை சிரஸாவஹித்துக் கொண்டு ஸஹஸ்ரநிஷ்கம்கொண்டுவந்து ஸமர்ப்பிக்க;

———

விடலதேவராயன் மகளுக்கு பிசாசம்பிடித்திருந்ததென்பதும், அவன்தன்குருக்களை விருந்துசொல்ல அவர்கள்வாராதே நின்றதும்.

அக்காலத்திலே அங்குத்தையில் விடலதேவராயன்மகள் பிசாசாவிஷ்டையாய் ஓடித்திரிய; அவனும்வைத்யர்கள் பலரையுங்கொண்டு தீர்க்கத்தேடினவிடத்திலும் ஒன்றிலும்தீராமையாலே துஃகிதனாயிருக்க; நிர்வாணையாய் ஓடித்திரிகிறபெண்ணைக்கண்டு தத்பத்நியும்துஃகிதையாயிருக்க; தொண்டனூர்நம்பி உபாதாநார்த்தமாக அந்தராஜக்ர்ஹத்திலே யெழுந்தருளினவளவிலேராஜபத்நியும்துஃகிதையாயிருக்க; அத்தைக்கண்டு ராஜபத்நியைப்பார்த்து, "துஃகஹேதுவென்?" என்றுகேட்க; தத்பத்நியும் தத்காரணத்தை அவர்க்குச்சொல்ல;

பின்பு நம்பியும் அத்தைக்கேட்டு, "எங்களாசார்யர் ராமாநுஜன்கடா க்ஷித்தால் இப்பேய் காடேறிஓடிப்போம்" என்ன ; அவளும்கேட்டு அச்செய்தியை ராஜாவுக்குஅறிவிக்க ; ராஜாவும், "உடையவர் அப் பேயைவிடுவிக்கில் அவரேநமக்கு ஆசார்யர், அவர்திருவடிகளிலே ஆச்ரயிக்கக்கடவேன்" என்ன ; அப்படியிருக்கவும், தன்குருக்களை விருந்துசொல்லவேணும் என்ன ; ராஜபத்நியானவள், "அவர்கள வாரார்கள், சொல்லாதேகொள்ளும்" என்ன ; அவனும் அவர்கள் வாராதொழிவர்களோ என்றுஅவள்வார்த்தையை அதிக்ரமித்துஅவர் களைவிருந்துசொல்ல ; முன்பு டில்லீச்வரனைராஜா இவனைப்பிடித் துக்கொண்டுபோய்பட்டர்ஹறனன்றிக்கேபோம்படிக்குஒரு அங்குலிச் சேதம்பண்ணுவிக்கையாலே, "விடலதேவராயன்" என்று லோக த்திலே ப்ரஸித்தமாயிருக்கையாலே, "அங்கஹீநனகத்திலேயுண்ண வொண்ணாது" என்று அவர்கள்வரத்தவிர்ந்துவிட்டார்கள் ; அவனும் க்ருத்தனாய், இவர்களைக்கொண்டுகார்யமென் என்றிருக்கச்செயதே.

—⁂—

விடலதேவராயன்மகளுக்குப்பிடித்திருந்த பிசாசம் உடையவர் ஸ்ரீபாததீர்த்தத்தால் நீங்கிற்றென்பதும், அவன் உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிக்க, அவர் அவனுக்கு "விஷ்ணு வர்த்தநராயன்" என்னும் திருநாமம்ப்ரஸாதித்தாரென்பதும்.

பின்பு ராஜபத்நியானவள் அவனைப்பார்த்து, "உடையவர்திரு வடிகளிலே ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கலாகாதோ" என்ன ; ராஜாவும் இசைந்து தன்னுடைய க்ரஹத்துக்கு எழுந்தருளவேணும் என்றுப்ரா ர்த்திக்க ; உடையவரும் அத்தைக்கேட்டு, "நாம்ராஜதாநியைமிதி யோம்" என்றருளிச்செய்ய ; தொண்டனூர்நம்பியும் இவனைக்ர்பைப ண்ணினால் நம்தர்சநத்துக்குபஹூபகாரமுண்டு என்றுவிண்ணப்பஞ் செய்ய; உடையவரும்ஸம்மதித்து ராஜாஸ்த்தாநத்தேறவெழுந்தருள; ராஜாவும் எழுந்திருந்துஎதிர்கொண்டு திருவடிகளிலேஸேவித்துபஹூ மாநம்பண்ணி ஆஸநமிட எழுந்தருளியிருந்தவளவிலே,தொண்டனூர நம்பி, உடையவர்ஸ்ரீபாததீர்த்தத்தைச்சேர்த்து தத்புத்ரிக்குப்ரஸாதி த்து அத்தாலேப்ரோக்ஷிக்க;உடனேசித்தப்ரமம்போய்ப் புடைவையை உடுத்திக்கொண்டு உடையவர்திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து நிற்க ; ராஜாவும் இத்தைக்கண்டு ஆச்சர்யப்பட்டு உடையவர்திருவடி களிலே ஆச்ரயிக்க ; அவனைக்ர்பைபண்ணியருளி, "விஷ்ணுவர்த்தந ராயன்" என்றுதிருநாமம் ப்ரஸாதித்தருளினார்.

—⁂—

விட்டலதேவராயன் உடையவர்திருவடிகளிலே ஆச்ரயித்ததைக்கண்டு, அவன்குருக்கள்மாரான பன்னீராயிரம்க்ஷபணர் உடையவரோடுவாதித்ததில்தோற்று கல்காணத்தில் அரைபட்டு முடிந்தார்களென்பது.

இத்தைக்கண்டு அவன் பூர்வகுருஸம்பந்திகளானவர்கள், "எங்கள் சிஷ்யனைமயக்கி சிஷ்யனாக்கிக்கொள்ளும்போது எங்களுடனே தர்க்கித்துஎங்களைஜயித்தன்றோ இவனைசிஷ்யனாக்கிக்கொள்ளுவது" என்று ஏககாலத்திலே பன்னீராயிரம் க்ஷபணர்வந்து தர்க்கிக்கத்தொடங்க; உடையவரும் மின்னுக்கஞ்சி இடியின்கையிலே அகப்பட்டாப்போலேயும், தேளுக்கஞ்சிப் பாம்பின்கையிலே அகப்பட்டாப்போலேயும் ஆச்சுதே! இனி என்னசெய்வோம், நம்முடைய திவ்யசக்தியைப்ரகடியாதிருக்கவொண்ணாது" என்று நிச்சயித்து ஒருமண்டபத்திலே திரைவளைத்துக்கொண்டு எழுந்தருளியிருந்து ஸஹஸ்ரபணாமண்டலமான திருவனந்தாழ்வானுடைய அவதாரமாய் ஒரொருத்தருக்குப்பதினாயிரம் முகமாக உத்தரமருளிச்செய்து அவர்களெல்லாரையும் வாய்மாளப்பண்ணி, காலயவனனுக்கு ஒளித்து குஹையிலேப்ரவேசித்து தத்ரஸ்த்தனான முசுகுந்தனைக்கொண்டு அவனைத்தக்தனாக்கினாற்போலே, கண்டகனுக்காக ஒளித்துத்தொண்டனூரிலே தாமெழுந்தருளியிருந்து ஆஸுரப்ரக்ருதிகளாய் பத்மகிரியிலுண்டான பாஹ்யரையெல்லாம் அப்படியே ராஜாவைக்கொண்டு கல்காணந்தன்னில் அரைப்பித்து நிச்சேஷமாகநிரசிப்பித்துத் தம்முடைய திவ்யசக்தியைப்ரகாசிப்பிக்க; இத்தைக்கண்டு ராஜாவும் உடையவர்திருவடிகளிலே மிகவும் ப்ரவணனாயிருந்தான். அங்குத்தையில்எம்பெருமானைத் தொண்டனூர்நம்பி அபிமானித்திருக்கையாலே, அவர்க்கு, "நம்பிமூத்தபிரான்" என்று திருநாமமுமிட்டு வேதாந்தவ்யாக்யாநம்பண்ணிக்கொண்டிருக்கச்செய்தே திருக்கையில் திருமண்மாண்டு, "சாத்துகைக்குத்திருமண்பெற்றிலோம்!" என்றுமுசிந்து மூன்றுநாள் அமுதுசெய்தருளாமல் கண்வளர்ந்தருள;

அவ்வளவிலே, (నారాయణగిరిర్నామ సంసారార్ణవతారణః। సహ్యాద్రేస్సగిరిశృంగస్థస్సహ్యజాయాస్తథోత్తరః॥ యం రామాలక్ష్మణౌ త్యక్త్వా నాగరసేవితః। తత్రాశ్రమే విభాండకతపసా చాధిదైవతమ్॥ అభ్యర్చ్య వివిధాన్ కామాన్ లభతే కమలాసనః;) శ్రీభగవాన్. (అతో)పదేశ్యరూపేణవ క్షేత్రమహీధరే। హృదయం మమతత్స్థానం ప్రసూతినాంనయనం శుభః॥ మునీనామపి సర్వస్వం తు క్షేత్రం ప్రథమాజ్ఞురమ్। దక్షిణం శ్వరభేదేన ద్వాపేతా పేయమహాశ్రమా॥ సర్వక్షేత్రాణాం భూయస్త్వాత్ సముత్సన్నస్తరోగిరిః। గుణత్రితయభేదేన శ్వేతద్వీపేతి వరా॥ నారాయణాద్రినిత్యానాం సరత్నోన్నతికుంతత్వకః। శ్రీరక్షేవ హధా సాలి

యే త్రేతే సత్యత్రేతే మమ || విష్ణులోకే దయాప్రీతి స్స్వప్రీతిస్తత్ర జాయతే|తత్ర శేషశ్చ తనుతే శేష వృత్తిం యుగే యుగే|| అశేష శేషి దేవస్య శేషాశన ముఖైస్సహ| అనన్తః ప్రథమం రూపం లక్ష్మణశ్చ తతః పరమ్|బలభద్రస్తృతీయస్తు కలౌ కశ్చిద్భవిష్యతి|| అర్చితః కృష్ణరామాభ్యాం త్రేతాయాం ద్వాపరే యతః । తేన యాదవశైలోయమితి లోకేషు కథ్యతే|| సహస్రశిఖర స్సోయం సాక్షాచ్ఛేషస్తు కోగిరిః| వైకుణ్ఠాదపి యత్రాస్తే రమయా సహ మోదతే|| వైకుణ్ఠాద్య ఖిలస్థానసారస్యం యదుభూభృతః| సేవయా కృత్స్నమత్రాస్య సేవా తత్ర భవిష్యతి|| వైకుణ్ఠ వాసినస్సర్వే శేష శేషాశనాదయః| తిర్యక్స్థావరజన్మాని శ్రయన్తే యదుభూధరే) என்று ஏவம்விதவைபவத்தையுடைய நாராயணாத்ரியை ஆதரத்துடனே தூரத்திலேஸேவித்துக்கொண்டிருக்க ;

—⁂—

*திருநாராயணப்பெருமாள்ஸாதித்த ஸ்வப்நத்தின்படி உடையவர், காடுசெய்த்து யதுகிரியேறவெழுந்தருளி திருநாராயணப்பெரு மாளிருக்கிறவிடம்காணாமல் கவலையுற்றிருந்தாரென்பது.*

அவ்வளவிலேதிருநாராயணப்பெருமாள் இவர்ஸ்வப்நத்திலே யெழுந்தருளி,“ யதுகிரிசிகரத்திலே உம்முடையவரவுபார்த்துநில்லா நின்றோம்,உம்திருவுள்ளத்துக்குப் போந்ததிருமண் இங்கேவுண்டு,சடக்கெனப்புறப்பட்டுவாரீர்”என்றுஸ்வப்நமுகேந அருளிச்செய்ய;உடையவரும்ஸ்வப்நம்கண்டெழுந்திருந்துஸ்வப்நம்கண்டபடியைமுதலிகளுடன் அருளிச்செய்து, பெரியஏரிகட்டுவிக்கிற விஷ்ணுவர்த்தநராயனை அழைப்பித்துதாம்ஸ்வப்நங்கண்டபடியை அருளிச்செய்ய;அவனும்ஸம்மதித்துக்காடுவெட்டுவித்துச்செல்ல; எம்பெருமானாரும்,செம்பொன் யதுகிரியேறிவேதபுஷ்கரிணியிலேநீராடி யதுபூநகரத்தைக்கிட்டி, (తస్య యాదవశైలస్య పార్శ్వే దక్షిణతస్థితామ్ । పరిధానశిలాం దృష్ట్వా ప్రణమన్తి ద్విజోత్తమాః|| యస్యాః ప్రణామం కుర్వాణాః ప్రణమన్తే సురాసురైః| సా హి సత్వమయీ పుంసాం సత్వం సద్యః ప్రయచ్ఛతి || పురా హి శాక్యపాషణ్డకాణాదాద్యాహితలే । శ్రుత్వాం వైయాకులీం చ క్రుః చిత్తైర్వచన విస్తరైః || అన్తే వానీకిరామార్యమైస్సాకం మానుష రూపభృత్ । త్రిదణ్డధారీ భూత్వాహం నిరాసమహమీదృశాన్ । దత్తాత్రేయస్య హేతత్ర తదాకాషాయసజ్ఞ్రః| అతో మత్పరిధానేన శిలాయాం నామకథ్యతే । యేతత్ర ప్రతి కృత్యాన్తి నరాఃకాషాయశాటికాః || మద్భావేన నమస్కృత్తే మద్భక్తేహూత్తమోత్తమాః ) என்னும்படியான அதிசயத்தையுடைய பரிதாநசிலையிலே,(ఉపవీతం త్రిదణ్డఞ్చ కౌపీనాచ్ఛాదనం తథా | శిక్యఞ్చైకవస్త్రఞ్చ పఞ్చమాత్రాదధౌ వసః ) என்று முன்புதத்தாத்ரேயர்த்ரிதண்டகாஷாயாதிகளைதரித்தாப்போலேஇவரும் தரித்து பரிமண்டிதமான வேஷத்தையுடையராய் முன்நடந்து திருநாராயணப்பெருமாளிருக்கிறவிடம்காணாமல் பகவத்ப்ரபாவத்துக்குக் குறைவற என்னசெய்தோம்என்றுமுசித்துக்கண்வளர்ந்தருள ;

—⁂—

மறுபடிஸாதித்த ஸ்வப்நத்தின்படி திருத்துழாய்க்கொழுந்தடையாள மாக கல்யாணஸரஸ்ஸின்கரையில் திருநாராயணனெழுந்தருளி யிருக்கும் ஓர்புற்றைக்கண்டுகளித்தது.

பின்னையும் திருநாராயணப்பெருமாள் இவர்ஸ்வப்நத்திலேயெழுந் தருளி, "நீர்முசிப்பானென்?, நாம் கல்யாணஸரஸ்ஸின்தென்மேல் மூலையிலேசம்பகவநஸமீபத்திலே மேல்கிழக்குத்தென்பார்ச்வத்திலே வளர்ந்ததிருத்துழாய்மரத்தின்கீழேபுற்றிலேயிராநின்றோம், நாம்உமக் கடையாளமாக இவ்விடந்தொடங்கி நாமிருக்கும்புற்றளவாக முறித் திட்டதிருத்துழாய்க்கொழுந்தேகுறியாகவாரீர்" என்றருளிச்செய்ய; இவரும்ஸ்வப்நங்கண்டெழுந் திருந்து முறித்திட்ட திருத்துழாய்க் கொழுந்தேகுறியாகவெழுந்தருளி கல்யாணஸரஸ்ஸைக்கிட்டிசம்பக வந ஸமீபத்திலே மேல்கிழக்குத்தென்பார்ச்வத்திலே வளர்ந்திருக்கிற திருத்துழாய்மரத்தைக்கண்டுபலகாலும்தண்டனிட்டு,(పారేకల్యాణతీర్థస్య విమానంవిష్ణులంహితత్ । పఞ్చపూరుషమాత్రేణరూపేణదదృశేజనైః॥ భగవానపిభక్తానాం పరతన్త్రస్స్వలీలయా । తదన్యప్రమితేనైవరూపేణదదృశేతతః॥ ఆశ్చర్యమిదమాశ్చర్య మహోనారాయణః పుమాన్ । అప్రమేయప్రమేయాభ్యాం రూపాభ్యామవలోక్యతే॥ అహోనుఖలుకల్యాణమహోకల్యాణమద్భుతః । అహోనారాయణశ్శ్రీమాన్ వైకుణ్ఠాత్స్వయమాగతః ॥ ఇతిసర్వేపితత్రత్యాస్సన్తోషేణబభాషిరే । తస్మాత్కల్యాణతీర్థాంత దభవన్ మునిపుఙ్గవాః ॥ స్థాపయిత్వావిమానస్థం ప్రాఙ్ముఖే పురుషోత్తమమ్ । పఞ్చరాత్రవిధానేనసమర్చ్యయతభక్తితః ) என்கிறபடியே அத்திருத்துழாய்மண்காப்பு நீக்கினவளவிலே,

—✻—

திருப்புற்றடியிலே ஸேவைஸாதித்த திருநாராயணனுக்கு திருப்ர திஷ்டைபண்ணுவித்து, "ஒருநாயகம்" என்கிறதிருவாய் மொழியை அவருக்கு ஸமர்ப்பித்தது.

(శకాబ్దేయదుగిరిస్థం తాన్తిర్థందదర్శ) என்கிறபடியே சகாப்தம்தொளா யிரத்தொருபதுடன் பின்னுமோராண்டுசென்ற வர்த்தமாநம்பஹு தாந்ய ஸம்வத்ஸரம் தைமாஸம் சுக்லபக்ஷ சதுர்த்தசியும் வ்யாழக் கிழமையுங்கூடின புனர்ப்பூசநக்ஷத்ரத்திலே பொற்கோயில்தோன்றிய பின்மற்றும்இங்கினி தமர்ந்த நீலசிகாமணிதோன்றக்கண்டு,கொந்தளித் துக்குணலைக்கூத்தாடி, சங்கம்ர்தங்கஜயசப்தவாத்யகோஷம் பண்ணி விஷ்ணுவர்த்தநராயனேயழைத்துக்காட்டி, பாலாலே மூன்றுநாள் திரு மஞ்சனஞ்செய்து, (பகல்கண்டேன் நாரணனைக்கண்டேன் கனவில் மிகக்கண்டேன் மீண்டவனை மெய்யேமிகக்கண்டேன்) என்று திரு நாராயணப்பெருமானை அடிக்கடிகண்ணாரக்கண்டநுபவித்து, (மாறனடி

பணிந்துய்ந்தவன்) என்றுஞ் சொல்லுகிறபடியே பரமாசார்யரான பராங்குசர்க்கு தாம் பரமஹிதபுத்ரராகையாலே பித்ர்தநத்தை புத்ரன் விநியோகங் கொள்ளுமாப்போலே, (தமிழ்மறைகளாயிரமு மீன்றமுதல்தாய்சடகோபன், மொய்ம்பால்வளர்த்தவிதத்தாயிராமாநுசன்) என்றுஞ்சொல்லுகிறபடியே திருவாய்மொழிக்குப் பெற்றதாய்சடகோபனும் வளர்த்ததாய்ராமாநுஜனுமாகையாலே ஐச்வர்ய கைவல்யங்களாகிற க்ஷுத்ரபுருஷார்த்தங்களைநிராகரித்து, "திருநாரணன்தாளே உபாயோபேயம்" என்கிற *ஒருநாயகத் திருவாய்மொழியையும் திருநாராயணற்குஸமர்ப்பித்தருளினர்.

—❧❧❧—

## உடையவர் த்ரிதண்டத்தாலேகீறத்திருமண்கண்டுகளித்ததும், உத்ஸவபேரமான ராமப்ரியரையெழுந்தருளப்பண்ணிக்கொண்டுவரடில்லிக்குளெழுந்தருளியதும்.

பின்பு கல்யாணஸரஸ்ஸின்வடமேல்மூலையிலே (శ్వేతద్వీపాత్సమాగత్యశేషశుద్ధం మృద్ద్రవ్యమాహృతమ్ । యాదనాద్రౌవినిక్షిప్తమస్మిన్యత్నం సమాజ్ఞయా॥ సత్త్వస్య ప్రకృతిశ్శుద్ధిశ్శుద్ధాతత్రాపివృత్తికా । అతస్సత్త్వమయస్థానమాదరాదధిగచ్ఛత॥ పురావరాహరూపేణవసుధాంబిభ్రతామయా । ఉషితంఖలుతీర్థస్యకల్యాణస్యాస్యపూర్వతః॥ మజ్జతస్తస్యజలధౌమమాజాద్గళితం జలమ్ । తేనపూర్ణమిదంతీర్థంతస్మాత్పుణ్యంపురాతనమ్ ॥ తస్మాదేతస్యతీర్థస్యతీర్థంవహతిమూర్ధని । తదూర్ధ్వగతికామానాంమునీనామూర్ధ్వరేతసామ్ ॥ వాఞ్ఛావరాహరూపస్యమమసేవావిధాయినామ్ । ఊర్ధ్వపుణ్డ్రవిధానార్థంచోదితోగరుడోమయా॥ శుద్ధామృపాహరద్దివ్యాం శ్వేతద్వీపస్యమృత్తికామ్ । భాగేకల్యాణతీర్థస్యనిచిక్షేపచపశ్చిమే॥ తస్మాచ్ఛ్రేష్ఠాసమస్తానాంవిమాంశుద్ధామృదామభూత్ ; స్నాత్వాకల్యాణతీర్థేస్మిన్ధృత్వాశుద్ధాఞ్చమృత్తికామ్॥ ఇమాంమద్భక్తియోగేనమత్సాయుజ్యమవాప్స్యసి) என்றுஞ் சொல்லுகிறபடியே கல்யாணஸரஸ்ஸின்வடமேல்மூலையிலே ராமாநுஜனும் த்ரிதண்டத்தாலேகீற, பாலாறுபோலேபொங்கிக்குழம்புகிற திருமண்குவையைக்கண்டு பலகாலும்தண்டனிட்டு அந்தச்வேதம்ர்த்திகையையெடுத்துத் திருமண்காப்புச்சாத்தியருளி த்ரிதண்டமண்டிதகரராய் ஸ்ரீபாஞ்சராத்ரஸாத்வதஸம்ஹிதையாலே ஸ்ரீரங்கராஜபட்டர் திருக்கையாலேப்ரோக்ஷணதிதிருப்ரதிஷ்டையும்பண்ணுவித்தருளி, இவர்திருநாள்நடத்துகைக்கு உத்ஸவபேரம் பேற்றிலோமில்லையே! என்று முசித்துக்கண்வளர்ந்தருள ; அப்போதுதிருநாராயணப்பெருமாள்இவர்ஸ்வப்நத்திலேயெழுந்தருளிநம்உத்ஸவபேரமானராமப்ரியர்டில்லிபுரத்தேற வெழுந்தருளி எம்மாடுராயனென்பானொருவனகத்திலேயிருக்கிறார், அங்கேபோய் எழுந்தருளப்பண்ணிக்கொண்டுவாரும்" என்று ஸ்வப்நமுகேநவருளிச்செய்ய ; உடையவரும்,

ஸ்வப்நங்கண்டெழுந்திருந்து, ஸ்வப்நங்கண்டபடியை முதலிகளுடன் அருளிச்செய்து டில்லிபுரத்தேறவெழுந்தருளாநிற்கச்செய்தே ;

———

## ஸம்பத்குமாரனென்னும் திருநாமம்பெற்ற ராமப்ரியர்வைபவம்.

ராமப்ரியர்வைபவம் ;—(లబ్ధ్వా కులధనం రాజా లఙ్కాం ప్రాయాద్విభీషణః) (லப்த்த்வா குலதநம் ராஜா லங்காம் ப்ராயாத்விபீஷண:) என்று பெரிய பெருமாளை ஸ்ரீவிபீஷணப்பெருமாளுக்குப்ரஸாதித்து பெருமாளை எழுந்தருளப்பண்ணுவித்துக்கொண்டுபோனவநந்தரம், ( విభీషణే౽గతే రామో రఙ్గనాథే చ దూరగే । విషీదన్నివ తత్రస్థైః పౌరైర్లక్షణమదృశ్యత ॥ అథాన్తరే విమానేన బ్రహ్మలోకాదుపాగతః । అబ్రవీద్రఘుశార్దూలం బ్రహ్మలోకపితామహః ॥ నారాయణాచలస్థేన కాకుత్స్థ రఘునన్దన । అర్చితస్య త్వయా పూర్వం విష్ణోరంశోయముద్ధృతః ॥ మా విషాదగృహాణ త్వం రూపమేతన్మయార్చితమ్ । తచ్ఛ్రుత్వా బ్రహ్మణో వాక్యం ఇక్ష్వాకుకులవర్ధనః ॥ సహసోత్థాయ పరయా భక్త్యా కౌతూహలాన్వితః । గృహీత్వా రఘునాథస్తాం మూర్తిం పద్మాసనార్చితామ్ ॥ అర్చయామాస సుచిరం సుమిత్రానన్దనాన్వితః । ఉపేతకౌతుకో నిత్యముపచారైస్సహస్రశః ॥ నిషేవే రఘునాథస్తాం మూర్తిం విష్ణోస్సమాన్వితః । సాకం లక్ష్మ్యా చ భూమ్యా చ సాకేతకులదైవతమ్ ॥ చరాచరం సహానైషీద్దివ్యధామ స రాఘవః । తదా హనూమతా హస్తే ప్రాదాదాదిమదైవతమ్ ॥ కుశాయ రామపుత్రాయ తేజః పవనసమ్భవః । ఆదిశద్దివ్యరూపస్తదర్చితం పద్మయోనినా ॥ తతః కుశోపి తద్రాజా రాఘవేణ సమర్చితమ్ । రూపమభ్యర్చయామాస పిత్ర్యం ధనమితి స్మరన్ ॥ లక్షైర్గుణతశ్చాసీత్తస్య కన్యా భవత్తదా । సా చ కర్ణస్థయా సాకం జాతా కనకమాలయా ॥ అతస్తాం బాన్ధవాః ప్రాహుర్నామ్నా కనకమాలినీమ్ । విష్ణుధ్యానపరాం నిత్యం కన్యకాం ధన్యరూపిణీమ్ ॥ అవలోక్య కుశః ప్రీతిం ఉపలేభే మహత్తరామ్ । కుశస్య కులదైవం తత్ కుశేశయవిలోచనమ్ ॥ అవలోక్య నిశాలాన్తే నిత్యం పరిచచార సా । తదా కుశలవానన్యం కుశీలవకులైర్యుతమ్ ॥ రామప్రియస్య తస్యాగ్రే రామాయణమగాయత ) என்னும்படியான வைலக்ஷண்யத்தையுடைய இவருக்கு அநுரூபவரனான வரனைசிந்தித்துப்போருகிறதசையிலே,

———

## ராமப்ரியர், குசனாலே, தன்மகளுக்கு ஸ்த்ரீதநமாகக் கொடுக்கப்பட்டாரென்பது.

(ఏవం చిన్తయతస్తస్య నిశి నిద్రావ్యజాయత । దదర్శ రాఘవం స్వప్నే కుశస్సౌమిత్రిణాన్వితమ్ ॥ భరతం సహ శత్రుఘ్నం జననీశ్చాపి జానకీమ్ । తతః పరమయా భక్త్యా కుశః కౌతూహలాన్వితః ॥ సానుజం సహితం దేవ్యా వవన్దే రఘునన్దనమ్ । తం ప్రాహ రఘునాథోఽపి తారాధిపనిభాననః ॥ తాపాపహారిభిర్వాక్యైస్సస్మితశ్రీకామలైః । కుశాగ్రబుద్ధే బుద్ధ్యస్వ స్వహితేచ్ఛ

22-8-86.

కురుమద్వచః॥ కన్యాం ప్రయచ్ఛ తేవత్స తస్మై కల్యాణరూపిణీమ్। యస్తు నారాయణపరో నామ్నాచ యదుశేఖరః॥ జననీ చాపి తం ప్రాహ పుత్రం జనకనన్దినీ। యది చేత్ స్త్రీధనం తస్మై త్వం ప్రయచ్ఛ కుమారికామ్) என்று பெருமாளும்பிராட்டியும் ஸ்வப்நத்திலேவந்தருளிச்செய்தவநந்தரம், (అగమద్రాజధానీం తాం యదుశేఖరరక్షితామ్ ] సఖ్యా రాధ్యలక్ష్మీశం పురా నారాయణాచలే॥ సార్వభౌమపదం ప్రాప్తస్సైన్యైర్బహుభిరావృతః। పితా తస్య చ భూపాలో నానాయాదవభూషణః) என்னும்படியான நாராயணபராயணனை அந்தராஜாகுமாரனுக்குகுமாரியைக்கொடுப்பதாக உத்யோகிக்க; அவள் இருப்பிலேநாடிச்செல்ல; அதுக்குமுன்பே அநுரூபரானராஜகுமாரர்கள்வந்துவரித்துதிரஸ்க்ர்தராய்ப்போக; எல்லாப்படியாலும் ஏற்றத்தையுடைய அந்தராஜாகுமாரனை, ( అన్వేషయితుమాగచ్ఛద్యోద్ధా పృథివీం పతిః। పితుర్వాక్యప్రమాణేన కన్యాం కనకమాలినీమ్॥ యదుశేఖరనామ్నా తాం ప్రాదాద్రఘువనన్దనః) என்னும்படி அநுரூபனானவரனாகவரித்து, பெருமாளருளிச்செய்தபடியே குமாரியை அவனுக்குக்கொடுத்தும் ஸ்த்ரீதநமாக ராமப்ரியரையுங்கொடுத்து ஸத்கரித்துவிட; (కిం ముదేయ న్తవేత్యాహ స రాజా కన్యకాం శ్రుతామ్। అన్వయాచత సా పుత్రీ పితరం ప్రీతమానసా॥ అర్చితం రఘునాథేన సమ్యం కిమపి తద్ధనమ్। జనకశ్చ వచస్తస్యాః జానకీం వచనం స్మరన్॥ దదేశ దివ్యాం తాం మూర్తిం దినకృద్వంశవర్ధనః। లబ్ధ్వా కన్యాం తతో రాజ్ఞాం శేఖరో యదుపుఙ్గవః॥ నిర్జగామ పురాత్తస్మాత్ నిర్జరాధిపవిక్రమః। తతః కనకమాలిన్యా సహితో యదుశేఖరః॥ అర్చయామాస గోవిన్దమర్థితాధికదాయినమ్। యదువంశక్రమేణాథ భగవాన్ భక్తవత్సలః॥ వసుదేవస్య భవనే వాసం చక్రే తతః పరమ్। దేవకీజఠరే వాసం స్వోదరే విశ్వదర్శనః) என்னும்படி தம்பதிகளான இருவரும் ஊரேறவந்துவாழ்ந்துகொண்டுபோனவநந்தரம்;

—⁂—

சக்ரவர்த்தித்திருமகன், குசன், இவர்களால் ஆராதிதராய், யதுவம்சத்துக்கு ஸ்த்ரீதநமாகக்கிடைத்தவராய், நம்பிமூத்தபிரான், கண்ணன்இவர்களாலும் ஆராதிக்கப்பட்டவருமான ராமப்ரியர் திருநாராயணனுக்கு உத்ஸவராக எழுந்தருளினாரென்பது.

அந்த யாதவவம்சபரம்பரையிலே வஸுதேவதேவகிகளிடத்திலே அவர்களுக்குபுத்ரராகவவதரித்து ராமக்ர்ஷ்ணர்கள் வளர்ந்தருளுகிறகாலத்திலே அதிபலராமனான நம்பிமூத்தபிரானானவர், (కదాచిత్తీర్థయాత్రార్థం గతస్తీర్థం కృతాఖిలః। రేవతీపతిరద్రీశం రుచిరం యాదవాచలమ్॥ తస్య శృఙ్గం సమాసాద్య తీర్థే కల్యాణసంజ్ఞితే। స్నాత్వా మునిగణైస్సార్ధం కఞ్చిత్కాలముపాసనః॥ భేజే నారాయణం తత్ర భేషజం భవరోగిణామ్। చక్షుషా మనసా వాచా కేవలం సేవ్యమద్భుతమ్॥ ద్వారకామథ సంప్రాప్య ప్రోతపాత్రీం భవామ్బుధేః। బలభద్రో యదుశ్రేష్ఠం బభాషే యమినాం వరః॥ అస్తి కృష్ణ దశాయాం హి దక్షిణస్యాం మహీధరః। కశ్చిద్వపశ్చితామాసీదాస్థానం నిత్య

సజ్జినామ్॥ తస్యాగ్రే భగవానాస్తే భవసన్తాపనాశనః। తస్యరూపస్తుపశ్యామి దేవేష్వస్తుకులార్చితే॥ తయోరన్యోన్యవైషమ్యం నైవపశ్యామికఞ్చన। ఏవంవాదినమాలోక్యప్రాహయాదవకుఞ్జరః॥ భగవాన్ రేవతీజానేస్త్వైవంవాదీఙ్కదాచన। అస్మత్కులధనస్యాస్యకోవాతుల్యోభవిష్యతి॥ ఇతికృష్ణవచశ్శ్రుత్వాబలభద్రోబ్రవీద్రుషా। నాహంవదామివితథంస్పృష్ట్వాకృష్ణత్వయాశపే॥ శైలేన్ద్రంప్రాపతుర్యస్మిన్నాస్తేనారాయణశ్శ్రియా। తస్యాగ్రతస్స్వయందేవంస్థాపయిత్వాయదూద్వహౌ॥ నాపశ్యతాంతయోర్మూర్త్యోర్వైషమ్యంకలయాచతౌ। తతస్సమాప్తకలహౌముదితౌయదుపుఙ్గవౌ॥ అన్యోన్యసఙ్గమాదేవమధికాన్వితవైభవమ్ । రూపంతదుభయంవిష్ణోరన్వభూతాంచిరాయతౌ॥ తతోయాదవవంశ్యాస్తంగిరింసర్వేసిషేవిరే । నారాయణగిరిఙ్పూర్వంసగిరిర్మునిసత్తమాః॥ తదాప్రభృతితస్యాసీత్ యాదవాద్రిరితిప్రథా) என்றுஞ்சொல்லுகிறபடியே முன்புசதுராநநனைப்ரஹ்மா,சக்ரவர்த்தித்திருமகனுனபெருமாளுக்கு ஸமர்பிக்க; பெருமாளாலே ஆராதிதராய், அத்தாலே, "ராமப்ரியர்" என்றுதிருநாமமாய், பின்புபெருமாள் தம்குமாரனுனகுசனுக்குதம்திருவாராதநமானஅந்தராமப்ரியரைஆராதநமாகக்கொடுக்க; குசனும் அப்படியே தம்குமார்த்திக்குஸ்த்ரீதநமாகக்கொடுக்க; அந்தகுமார்த்தியடியாகவுண்டான யாதவவம்சபரம்பரையிலே அவதரித்தராமக்ர்ஷ்ணர்கள் ஆராதித்துக்கொண்டுபோந்த திருவாராதநத்தை நாராயணகிரியில் நாராயணன்ஸந்நிதியிலே சேரவெழுந்தருளப்பண்ண;

டில்லியில்எம்மாடுராயன்என்கிற துருஷ்கன்மகள்ஸஜ்ஜாக்ரஹத்திலெழுந்தருளியிருந்த ராமப்ரியர், தம்மையெழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோம்படி உடையவருக்கு ஸ்வப்நம்ஸாதித்தது.

அநந்தரம் அந்தயதுகுலநாதனுன க்ர்ஷ்ணன்யாதவர்களோடே ஆதரித்துஎழுந்தருளியிருந்த ஸ்த்தலமாகையாலே அதுவே நிரூபகமாக "யாதவாத்ரி" என்றுதிருநாமமாய்நடந்துசெல்ல; பின்பு கலிகாலத்திலே சிலதுஷ்டப்ரபுக்களாயிருப்பார், "மேலைக்கோட்டை" என்று நிலையாகஅரண்செய்துகொண்டுபோர, பின்பு ஒருகாலத்திலே கலஹமாய் அதுகுலைந்து ராமப்ரியரை எம்மாடுராயன்என்கிறயவநன் கொண்டுபோய்ஸ்வக்ரஹத்திலேஎழுந்தருளப்பண்ணிக்கொண்டிருக்க; அத்தைக்கேட்டருளி அப்போதேபுறப்பட்டு அவன்பாடேசென்று அவனைப்பார்த்து, "நம்குலதெய்வமானராமப்ரியர் உன்க்ரஹத்திலேயிருக்கிறுர், அவரைத்தரவேணும்" என்ன; அவனும், "சிறைகொண்டுவந்த எம்பெருமான்கள் சிறைச்சாலையிலே சோதித்துக்கொள்ளீர்" என்று அப்பணையிட்டுவிட; இவரும் அந்தச் சிறைச்சாலையிலே எழுந்தருளிச்சோதித்துப்பார்த்தவிடத்திலே ஒருவரும் திருநாராயணன்வடிவுக்குஒத்திராமையாலே முசித்துக்கண்வளர்ந்தருள;

பின்புராமப்ரியரும் இவர்ஸ்வப்நத்திலேயெழுந்தருளி, "நாம்அவன் மகளாலேபூஜைகொண்டு அவள்ஸஜ்ஜாக்ர்ஹத்திலே யிருக்கிறோம், அங்கேறவாரீர் கொண்டுபோகும்படியாக" என்று ஸ்வப்நமுகேந அருளிச்செய்ய; இவரும் ஸ்வப்நங்கண்டெழுந்திருந்து வப்நங் கண்டபடியை ராஜாவுக்கறிவிக்க; ராஜாவும்அத்தைக்கேட்டு, "உம் முடையபக்கல் அவர்வ்யாமுக்த்தராகில் தானேவரக்கடவர்" என்ன; உடையவரும் அவரைஒருக்கால்கண்ணால் கண்டநுபவிக்கலாகாதோ என்றருளிச்செய்ய; ஆனால் இங்கேவாரும்என்று அவரையுங்கூட்டிக் கொண்டு அவள்ஸஜ்ஜாக்ர்ஹத்தேறவெழுந்தருள;

——

ராமப்ரியர் உடையவராலே "செல்வப்பிள்ளை" என்னும் திருநாமம்சாத்தப்பெற்றாரென்பது.

ராமப்ரியரும், உடையவரைக்கண்டு இட்டசட்டையும், கட்டிய சிறுச்சதங்கையும், இட்டகஸ்தூரித் திருநாமமுமாக ஊஞ்சல் நின்றும்குதித்து, (தன்னியலோசைசலன்சலனென்றிட) என்கிற படியே,*செஞ்சொல்சதங்கைசிரைசெஞ்செல்)என்னும்படி ஓடிவந்து உடையவர்மடியிலே வந்திருக்க; உடையவரும், விம்மல்புரம்பி தோளும்மார்பும்பூரித்து, "என்னுடையசெல்வப் பிள்ளையன்றோ" என்றெடுத்து அணைத்தருளினார். அன்றுமுதலாக ராமப்ரியர்க்கு "செல்வப்பிள்ளை" என்று திருநாமமாய்த்து. ராஜாவும் இத்தைக் கண்டுமிகவும் ஆச்சர்யப்பட்டு செல்வப்பிள்ளையையும் அநேகம்திருவா பரணங்களையும் ஸமர்ப்பித்து, "ஊரேற வெழுந்தருளவேணும்" என்றுவிண்ணப்பஞ்செய்தனுப்ப;

——

செல்வப்பிள்ளை, தம்மைப்பிரியில்தரியாத எம்மாடுராயன்புத்ரியைத் தமக்கு ஆளாக்கிக்கொண்டாரென்பது.

அநந்தரம் உடையவர்,செல்வப்பிள்ளையைத்திருப்பல்லக்கிலேஎழு ந்தருளப்பண்ணிக்கொண்டுபோகிற ஸமயத்திலே ராஜபுத்ரியானவள் செல்வப்பிள்ளையைப்பிரியமாட்டாமல், "கூடப்போவேன்" என்ன; ராஜாவும் வஸ்த்ரபூஷணாதிகளை ஸங்கோசமறக்கொடுத்தனுப்ப; உடையவரும், செல்வப்பிள்ளையையும்எழுந்தருளப்பண்ணிக்கொண்டு ராஜபுத்ரியையும் அழைத்துக்கொண்டு பயணகதிகளிலேத்வரித்து திரு நாராயணபுரத்தேறவெழுந்தருளினவளவிலே செல்வப்பிள்ளை அந்த ராஜபுத்ரியை அந்தர்த்தாநமாக அங்கிகரித்தருளினார்.

——

உடையவர், திருநாராயணபுரத்திலே செல்வப்பிள்ளையைத் திருநாராயணனுடனே எழுந்தருளப்பண்ணி ஸகலோத்ஸவங்களையும் நடத்திக்கொண்டு பன்னிரண்டு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்தாரென்பது.

உடையவரும் செல்வப்பிள்ளையை ஹஸ்தநக்ஷத்ரத்திலே ப்ரோக்ஷணதிப்ரதிஷ்டாபுரஸ்ஸரமாகத் திருநாராயணப்பெருமாளுடனே சேர்த்துத் திருநாராயணப்பெருமாளுடைய நித்யோத்ஸவகர்த்தாவாக்கி விமானமும் கோயில்களும் சமைப்பித்து ராமாநுஜமடமுங்கட்டிவைத்து ஐம்பத்திருவரையும் கைங்கர்யத்திலே நிறுத்தித் தாமுங்குறைவறத் திருவாராதநமுநடத்திக்கொண்டு, (కలౌఖలు భవిష్యతి) (கலௌகலு சித்பவிஷ்யதி) என்றும், (கலியுங்கெடும்கண்டுகொண்மின்) என்றும் சேஷாவதாரராக அவதரித்தருளின எம்பெருமானார், தம்முடைய ஸ்ரீபாதத்திலே ஆச்ரயித்த ஆசார்யர்களுடனேயும், அஸங்க்யாதரான சாத்தின சாத்தாத முதலிகளுடனேயும், பன்னீராயிரம் ஏகாங்கிகளுடனேயும் ஸேவ்யமாநராய்க்கொண்டு எழுந்தருளியிருக்கச்செய்தே, பத்மகிரியிலே செல்வப்பிள்ளைக்கெதிரான பௌத்தாதிகளையும் கல்காணந்தன்னில் அரைப்பித்து நிஸ்சேஷமாகநிவாரிப்பித்து வேதாந்தவ்யாக்யாநம்பண்ணிக்கொண்டுதிருநாராயணப்பெருமாள்ஸந்நிதியிலே பன்னிரண்டுஸம்வத்ஸரம் வாழ்ந்தருளினார்.

—※—

தொண்டனூர்நம்பிதம்பிரான், திருநாராயணபுரத்திலேசெல்வப்பிள்ளையுடன் திருப்பாடிவேட்டைகண்டருளியது.

அக்காலத்திலேதொண்டனூரில்*புண்டரீகைக்கேள்வனனெம்பெருமான் செல்வப்பிள்ளைசேர்த்தியிலேயெழுந்தருளித் திருப்பாடிவேட்டைச்சிறப்புக்கொண்டருளவேணும் என்று தொண்டனூர்நம்பிகளுவிலேயருளிச்செய்ய; அவரும் தாம்கண்டகனவை அங்குள்ளவர்களுக்கருளிச்செய்ய; அப்போது எம்பெருமானையெழுந்தருளுவித்துக்கொண்டு எம்பெருமானுர் உபலாளித்தருளுகிற திருநாராயணன் திருமுன்பில் ராமாநுஜன்திருமண்டபத்திலே செல்வப்பிள்ளைதிருவோலக்கத்திலேசென்று ஸேவித்திருக்க; எம்பெருமானுரும் "நம்பிதம்பிரான்" என்று அந்த எம்பெருமானுக்குத் திருநாமஞ்சாத்தி, (ஆடியமுதுசெய் அப்பனுமுண்டிலன் உன்னோடுடனேயுண்பான்) என்கிறபடியே சேர்த்தியுடன் அமுதுசெய்வித்து ஆதரித்து நம்பிக்குப்பரியட்டமும் கட்டுவித்து*அட்டிக்குவிசோற்றுப்பருப்பதமும்தயிர்வாவியும் நெய்யளறுமாக்கிவைத்துப்பண்டுஅமுதுசெய்தருளப்பண்ணினதுபோலேஸந்நிதியில் திருப்பாவாடையும் போரப்பெருத்திருக்கப்ரார்த்தநீயமானவற்றைநம்பிதம்பிரான்பரிகரமான அறுபத்திருவராசைப்பட; அவர்

களைச்சூறைவிட்டருள ; அவ்வளவில் ஐம்பத்திருவர்முறையிட ; அவர்களைப்பாறவடித்து நீங்கள் சூறைகொள்ளுங்கோள் என்ன அவர்களும் அப்படியேசெய்ய ; இப்படிகொள்ளவும் அள்ளவும்தள்ளவுமான ஸரஸகோலாஹலம் அத்யாபிநடந்துபோரும்படி கட்டளையிட்டருளி;

—✻—

## உடையவர், திருமண்வைபவத்தை ப்ரகாசிப்பித்தருளியது.

இந்தப்பதமேயன்றியே எல்லாப்பதங்களையுங் கொடுக்குமவராகையாலே மேல்நாட்டிலுள்ளவர்களெல்லாரும் மேலானபதம்பெறுகைக்காக இவர்ஸ்ரீபாதத்திலேவந்தாச்ரயிக்க; அவர்களுக்குத்திருவிலச்சினையும் திருநாமமும்பெருக்கி, (విశుద్ధమూర్తికాం తత్రలలాటే ధారయన్తియే। అన్యేష్వపియథాస్థానమఙ్గేషుయతచేతసః॥ సత్యస్సుశుద్ధరూపేభ్యోస్తేభ్యోభిభ్యన్తిదానవాః) (விசுத்தமூர்த்திகாம் தத்ரலலாடே தாரயந்தியே। அந்யேஷ்வபியதாஸ்தாநமங்கேஷுயதசேதஸ:। ஸத்யஸ்ஸுசுத்திரூபேப்யோஸ்தேப்யோபிப்யந்தி தாநவா:) என்றுஞ்சொல்லுகிறபடியே திருமண்வைபவத்தை மண்ணுலகிலுண்டானவர்களெல்லாருமறியும்படி ப்ரகாசிப்பித்தருளியும்,

—✻—

## பெரியதிருமந்த்ரத்தின்வைபவம்.

நாரங்களாயுள்ளசேதநரை யெல்லாரையும் * நாரணன்தமராம்படி * நலந்தருஞ்சொல்லான நாராயணநாமத்தினுடைய ப்ரபாவத்தை, (ఇదంహిశుద్ధవచసాం శ్రుతీనామవలమ్బనమ్। శ్రోత్రాణామపిసర్వేషాం కర్ణేష్వమృతసేచనమ్॥ నారాయణపదం యస్యజిహ్వాగ్రేవర్తతేసదా। నారాయణశ్రియాసార్ధం నైవముఞ్చతితం క్షణమ్॥ అర్థంవినాపిశబ్దోయం త్రాయతేమహతోభయాత్। కిమ్పునర్జ్ఞాయమానార్థకృతినాం పాదసేవయా॥ ఆపోహినారశబ్దార్థో నారావిష్ణుస్సముద్భవాః। సతాసామయనశ్చాసీత్ తేననారాయణస్స్మృతః॥ అక్షరత్వాన్నరాజీవాః నారాస్తేషాంసముచ్చయాః। తేషామయనతాంయాతి తేననారాయణస్స్మృతః॥ నరశ్చభగవాన్విష్ణుస్తజ్జాస్తద్యోగినోపివా। నారాస్తదయనంవాపి తేననారాయణస్స్మృతః॥ అథవానేత్రభూతోయం నరోనారంచరాచరమ్। వాసస్థానమిదంతస్య తేననారాయణస్స్మృతః॥ జ్ఞానశక్త్యాదయోయద్వా గుణానారాఇతిస్మృతాః। షాడ్గుణ్యపరిపూర్ణోయం తేననారాయణస్స్మృతః॥ షాడ్గుణ్యంతానుదేవస్య యథావ్యూహేపితత్సమమ్। సఙ్కర్షణాదిభేదస్తు గుణాభివ్యక్తిమాత్రతః॥ జ్ఞానశక్త్యాదిభిష్షడ్భిస్తద్వద్భేదైర్గుణాదిభిః। అతోనారాయణశ్శ్రీమాన్ సర్వత్రపరిపూర్యతే॥ విశ్వాన్తర్యామిబాలస్య యథాహిజఠరేజగత్। షాడ్గుణ్యోదరమాశ్రిత్యవర్తన్తేగుణకోటయః) என்றும், (తతోవిజ్ఞాపయామాసవిష్ణోరేషానపాయినీ। వేదోపదేశంబాలస్యభగవన్ కర్తుమర్హసి॥ సహధర్మచరీవాక్యాత్ సచసన్తోషదాయినః। ఏవంవిజ్ఞాపితస్సపశ్చాదోమిత్యాహశ్రియఃపతిః॥ శ్రుత్వాతద్వచనం బాల్యాత్ ఆదావోమిత్యుదీరయన్) என்றும்,

(పితామహోఽపి తచ్ఛ్రుత్వా తదేవావర్తయన్ పునః। ప్రణవం ప్రణవాద్యఞ్చ ద్వయమష్టాక్షరమాలపన్॥ కమలాకమలేశాభ్యాం లాలితః కమలాసనః। వేదాదిః ప్రణవశ్చాసీదకారస్తస్య కారణమ్॥ తస్యార్థశ్చ పరం బ్రహ్మ నారాయణ ఇతి శ్రుతేః। బహుశః ప్రణవాలాపబద్ధరాననమాత్మజమ్॥ దృష్ట్వా తుతోష భగవాన్ దయానిర్భరయా దృశా। ఉపాదిక్షత్తతః శ్రీమాన్ స్వయమష్టాక్షరం విభుః॥ తద్ధి సర్వస్య వేదస్య కారణం భవతారణమ్) என்றும், (శరీరం స్యన్దనం విద్ధి విద్ధి యుగ్యాంశ్చ పూరుషాన్। షడ్గుణాంశ్చ గుణాన్ విద్ధి మాం చ త్వం విద్ధి సారథిమ్॥ సర్వేష్వపి చ ధర్మేషు పారతన్త్ర్యమితి స్మరన్। మామేవ సాధనం విద్ధి విద్ధి మామేవ తత్ఫలమ్॥ ఏవం ప్రబోధితస్తేన బ్రహ్మ సర్వజ్ఞతాం యయౌ) என்றும், (అష్టాక్షరస్య మన్త్రస్య ప్రభావమపి చాబ్రవీత్। బ్రహ్మన్నష్టాక్షరో మన్త్రః శ్రుతీనాం దృష్టిరిష్యతే॥ ధర్మార్థకామమోక్షాణాం చతుర్ణామపి సాధనమ్। కృతం బహువిధైర్మన్త్రైః కృతం యజ్ఞైర్నియన్త్రితైః॥ కృతఞ్చ కర్మణా తత్ర యత్రాష్టాక్షరసన్నిధిః। సాధారణోఽప్యయం మన్త్రః సర్వాస్వపి చ మూర్తిషు॥ అస్యానుకల్పతాం యాన్తి మూర్తిమన్త్రస్పృహాస్రశః। వ్యాపకేషు చ మన్త్రేషు త్రిష్వప్యేష పరో మతః॥ వ్యాప్యవ్యాపకయోరత్ర విశేషేణావబోధనాత్। అతో హి విష్ణుగాయత్ర్యామాద్యో మన్త్రః స ఉచ్యతే॥ మన్త్రోఽయం సద్గురోరేవ శ్రోతవ్యో నాన్యతోఽపి చ। న ఖల్వర్థస్య జాత్వర్థః ప్రదాతుం యష్టిమర్హతి॥ యథా మే శ్రీనివాసత్వమసాధారణమిష్యతే। తథా నారాయణపదం త్రైయన్తేషు నిగద్యతే॥ నారాయణపదం లోకే నామయస్య ప్రకీర్త్యతే। అపవర్గో హి తన్మాతుః అయత్నాదేవ సిధ్యతి॥ ఆసనే శయనే యానే భోజనాదౌ చ కర్మసు। మన్త్రమష్టాక్షరం బ్రహ్మన్ మధ్యే చిత్తం నివేశయ) என்றும் சொல்லுகிறபடியே–

பக்தர்களான பரமரிஷிகளுக்திகளாலும்பகவதுக்திகளாலும்பாக்யவான்களான பாகவதர்களுக்கு பக்திஜநகமாகவும் முக்திமூலமாகவும்வெளியிடாநின்றுகொண்டுமற்றும்திருமந்த்ரத்துக்குவாச்யன்திருநாராயணனென்னுமதுதோற்ற, (வண்புகழ்நாரணன்)என்றும், (எண்ணுந்திருநாமம்திண்ணம்நாரணமே) என்றும், (திருநாரணன்றருள் காலம்பெறச்சிந்தித்துய்மினோ) என்றும், (திருமால்திருநாமம் நானும்சொன்னேன் நமருமுரைமின்நமோநாராயணமே) என்றும், இப்படி * திருமால் திருப்பேரான திருமந்த்ரத்தையும் த்வயத்தையும் தத்விஷயமாக ப்ரஸாதித்து, அதுக்குமேலே,(நாராயணனே) (நாராயணனாலே)(நாராணனேயாவது) (నారాయణపరోభవ) (நாராயணபரோபவ)என்றுசர்மார்த்தத்தையும் தத்விஷயமானமந்த்ரத்திலேப்ரகாசிப்பித்தும், அத்தைஎங்கும் ப்ரவர்த்திப்பித்தும், (நாடாதமலர்நாடி நாடோறும்நாரணன்றன் வாடாதமலரடிக்கீழ் வைக்கவேவகுக்கின்று) என்னும்படிநாட்டை, (నారాయణసమారాధనమ్)(நாராயணஸமாராதநம்) என்றுஞ்சொல்லுகிறபடியே நாராயணஸமாராதநபரமாக்கியும் இப்படிராமாநுஜனை தாம் நாராயணனுடைய வைபவத்தைவர்த்திப்பித்துக்கொண்டு திருநாராயணபுரத்திலே நாராயணபராயெழுந்தருளியிருக்க; அங்கு

ள்ளவர்களும், ( ఆదౌ నారాయణాఖ్యో మునిజనమహితో మూలమన్త్రోపదేష్టా మద్వ్యాపార్థార్చితాఙ్ఘ్రిశ్చరమమనుగురుర్వాసుదేవాభిధానః । భూత్వా విష్ణుస్సపశ్చాత్ సకలజనహితం మన్త్రరత్నం ద్వయాఖ్యం భూయో రామానుజాఖ్యస్సమదిశదఖిలం శ్రీమతే తస్మై నమస్తాత్ ) (ஆதௌநாராயணாக்யோ முநிஜநமஹிதோ மூலமந்த்ரோபதேஷ்டா மத்யேபார்த்தார்ச்சிதாங்க்ரிஶ் சரமமநுகுருர்வாஸுதேவாபிதாநः । பூத்வா விஷ்ணுஸ்ஸபஸ்சாத் ஸகலஜநஹிதம் மந்த்ரரதநம் த்வயாக்யம் பூயோ ராமாநுஜாக்யவஸ்ஸமதிஶதகிலம் ஸ்ரீமதேஸ்மைநமஸ்தாத் ) என்றுஞ் சொல்லுகிறபடியேஇவருடையமந்த்ரதர்சித்வமாஹாத்ம்யத்தையறிந்து ஸர்வரும்திருவடிகளிலே சரணமாகவடைந்து உடையவரை உடையராய்வாழ்ந்துபோந்தார்கள்.

இவரும், ( వైకుణ్ఠవర్ధనం నామ క్షేత్రం తత్సత్యముచ్యతే । ప్రమాణం తస్య విజ్ఞేయం పరితో యోజనద్వయమ్॥ యావద్దృష్టిపథం యాతి సర్వతో యం మునీశ్వరః । తావత్ప్రమాణకం సర్వం ముక్తిక్షేత్రం తదుచ్యతే) (வைகுண்டவர்த்தநம் நாமக்ஷேத்ரம் தத்ஸத்யமுச்யதே।ப்ரமாணம் தஸ்யவிஜ்ஞேயம் பரிதோயோஜநத்வயம்॥ யாவத்த்ருஷ்டிபதம் யாதிஸர்வதோயம் முநீஶ்வராः । தாவத்ப்ரமாணகம் ஸர்வம் முக்திக்ஷேத்ரம் ததுச்யதே) என்கிறவைபவத்தையுடைய க்ஷேத்ரவாஸத்தையும்ப்ராப்யதயா செய்யாநின்றுகொண்டு,( ఆనన్దమయమిత్యేవ తస్య నామాభిధీయతే। నమస్కారేపికిం తస్య కీర్తనాద్దర్శనాదపి॥ ఆజన్మమరణం యత్స్యాత్ అఘం తదపి నశ్యతి। అవతీర్ణం హి వైకుణ్ఠాత్ ఆద్యే కృతయుగే హితత్॥ జగతాముపకారాయ స్వయం సఙ్కల్పతో మమ) (ஆநந்தமயமித்யேவதஸ்யநாமாபிகத்யதே। நமஸ்காரேபிகிம் தஸ்யகீர்த்தநாத்தர்ஶநாதபி ॥ ஆஜந்மமரணம்யத் அகம்தத்பிநஶ்யதி । அவதீர்ணம்ஹிவைகுண்டாதாத்யேக்ர்தயுகேஹியிதத்॥ஜகதாமுபகாராயஸ்வயம்ஸங்கல்பதோமம) என்றுஞ்சொல்லப்படுகிறஸ்ரீதிவ்யவிமாநத்தையும்அதிலேதிவ்யமங்களவிக்ரஹோபேதனாய் திவ்யமஹிஷியானசரியாஸேவ்யமாநஸ்ரீபாதாரவிந்தங்களையுடையனாய், இப்படி *திருமருத்தாள்களையுடையனாயிருக்கிறஸ்ரீமந்நாராயணனையும்ஸேவித்துக்கொண்டு ஹ்ருஷ்டராய், ( యథా కల్యాణతీర్థస్య తీర్థే కల్యాణచేతసామ్ । తీర్థే తత్రామలే స్నాత్వా ముచ్యన్తే సర్వకిల్బిషైః ) ( யதாகல்யாணதீர்த்தஸ்யதீர்த்தேகல்யாணசேதஸாம் । தீர்த்தேதத்ராமலேஸ்நாத்வாமுச்யந்தேஸர்வகில்பிஷைः) என்றுஞ்சொல்லப்படுகிறவைபவத்தையுடைய திருக்கல்யாணியிலே உடையவர் முதலிகளோடே அநுஷ்டாநார்த்தமாகவெழுந்தருளியிருக்கிற வேளையிலே.

—⁂—

கூரத்தாழ்வான், மாறொன்றில்லாமாருதிச்சிறியாண்டான், அம்மங்கி
யம்மாள், இவர்களாலே உடையவர்வ்ர்த்தாந்தத்தையும்,
சோழன் க்ரிமிகண்டனானென்பதையுங் கேட்டுக்
களித்தது.

மாறொன்றில்லாமாருதிச் சிறியாண்டானும் அம்மங்கியம்மாளும்கொங்கின்மலையினின்றும்ஆழ்வான்தசையைஆராய்கைக்கு அனுப்பியருளினபின்பு பயணகதிகளிலேத்வரித்துப்போய்ஸ்ரீபராந்தனிலேவந்துஆழ்வான்திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்துநிற்க ; ஆழ்வானும் உடையவரைஸேவித்தாப்போலேமிகவும்ஆதரித்து,அவர்களை,"உடையவர்செய்கிறதென்" என்றுகேட்க ; அவர்களும்அங்குத்தையில் வ்ர்த்தாந்தங்களையெல்லா ஸவிஸ்தாரமாக விண்ணப்பஞ்செய்யக்கேட்டு, "இவ்வளவுகாணப்பெற்றோமே!" என்ன ; அவ்வளவிலே, "அவன் புழுத்தான், புரண்டான்"என்றுபெருவிசேஷமாக; இத்தை ஆராயக்கடவோம் என்றிருக்கச்செய்தே ;

சோழன் க்ர்மிகண்டனைப்புழுத்துப்புரண்டான் என்கிற
செய்திகொண்டுவந்த ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உடை-
யவர்மீளவும் த்வயத்தை உபதேசித்தருளினாரென்பது.

பெரியநம்பி திருநாட்டுக்கெழுந்தருளின சரமச்லோகம் ; -(కాల యుక్త్వష్టకామధ్యతిథిప్రోక్తామహాగురోః । యామునార్యపదాంభోజశుశ్రూషాయాభవత్సదా ) ( காலயுக்த்ஷ்டகாமத்யதிதிப்ரோக்தாமஹாகுரோ: । யாமுநார்யபதாம்போஜஶுச்ரூஷாயாபவத்ஸதா ) என்கிற ச்லோகத்தையெழுதிக்கொடுக்க ; அத்தைவாங்கிக்கொண்டு கங்கைகொண்டசோழபுரத்திலேயெழுந்தருளி அத்தை வித்தவத்கரித்துக்கொண்டு பயணகதிகளிலேத்வரித்து,திருநாராயணபுரத்திலே உடையவர்திருவடிகளைத் தங்களாநந்தா ச்ருக்களாலே நனையாநின்றுகொண்டு, "பாபிஷ்டனான அந்தச்சோழன் க்ர்மிகண்டனைப் புழுத்துப்புரண்டான்" என்ன ; உடையவரும்கர்ணாம்ர்தமான வார்த்தையைக்கேட்டுத்தோளும்மார்பும் பூரித்து, "இத்தனை தூரம் நல்வார்த்தைகொண்டுவந்த இவர்களுக்கு நாம்கொடுக்கலாவதென்" என்று விசாரித்தருளி முன்புப்ரஸாதித்தருளின த்வயத்தைமீளவும் ப்ரஸாதித்தருளினார். அநந்தரம்உடையவரும் முதலிகளைப்பார்த்து இவ்விடம் கல்யாணஸரஸ்ஸென்னுமிடம் அர்த்தவித்தமாகக்கண்டோமிறேஎன்றருளிச்செய்தருளினார். முதலிகளும், "அப்படியாம்" என்று அத்தைக்கொண்டாட ;

29-9-86.

உடையவர், பெரியநம்பி திருநாடலங்கரித்ததைக்கேட்டு ஸ்ரீசூர்ண பரிபாலநமும் திருவத்யயநமும்நடத்துவித்து, (கமலாபதி கல்யாண)என்கிறச்லோகத்தை அவர்விஷயமாகஅருளிச் செய்தருளியது.

அநந்தரம்,பெரியநம்பி திருநாட்டுக்கெழுந்தருளின சரமச்லோகத் தைஸமர்ப்பிக்க அத்தையுங்கடாக்ஷித்து,(மயல்பெருங்காதலென்பேதைக்குஎன்செய்கேன்வல்வினையேனே ) என்கிறபடியே க்லேசமதிசயித்து பெரியநம்பிக்கு ஸ்ரீசூர்ணபரிபாலநத்தையும் பண்ணி ஸ்ரீவைஷ்ணவர்களையுந்திரட்டிச் சீர்மையுடனே திருவத்யயநமும்நடத்துவித்து,(నాతఃపరతరంతీర్థంవైష్ణవాఙ్ఘ్రిజలాచ్ఛుభాత్। తేషాంపాదరజఃపుణ్యంగఙ్గామపిపునాతిహి) (நாதஃ பரதரம் தீர்த்தம் வைஷ்ணவாங்க்ரிஜலாச்சுபா । தேஷாம்பாதரஜஃ புண்யம் கங்காமபிபுநாதிஹி) என்றும் சொல்லுகிறபடியே பாகவத ஸ்ரீபாததீர்த்தத்தையும்சேர்த்து ஸ்வீகரித்தருளி, அநந்தரம் ஸ்ரீவைஷ்ணவர்களையு மமுதுசெய்வித்தருளி, (కమలాపతికల్యాణగుణామృతనిషేవయా। పూర్ణకామాయసతతంపూర్ణాయమహతేనమః) (கமலாபதி கல்யாணகுணாம்ருத நிஷேவயா । பூர்ணகாமாயஸததம்பூர்ணாயமஹதேநம꞉) என்கிறச்லோகத்தை அவர்விஷயத்திலே அருளிச்செய்தருளினார்.

—✻—

திருக்கல்யாணியின் கீழ்கரையிலுள்ளதிருமலையில் அழகியசிங்கரை மங்களாசாஸநஞ்செய்தருளியது.

பின்புஒருநாள் திருக்கல்யாணியிலேநீராடிநித்யாநுஷ்டாநங்களும் செய்தருளிஹர்ஷடராய்த் திருமண்காப்புச்சாத்தியருளித் திருவடிகளிலுண்டானவர்களெல்லாரும் திரண்டுஸேவித்துநிற்க ; அவர்களுடன் திருக்கல்யாணிதீர்த்தத்திலே ஸல்லாபத்துடன் எழுந்தருளியிருந்து, (కల్యాణసరసఃపూర్వంనరసింహగిరేరతః। (கல்யாணஸரஸஃபூர்வம்நரஸிம்ஹகிரேரதஃ) என்கிறபடியே திருக்குளத்துக்குக்கிழக்குதிக்கிலே, (மலைகீழ்துபிளந்தசிங்கம்)என்னும்படி மலையின்பேரிலேநக்கரிக்கவிருக்கிற * சக்கரச்செல்வனான அழகியசிங்கரைக்குறித்து, (உன்னைச்சிந்தையினாலிகழ்ந்த) என்கிறபடியே தேவரீரை இல்லைசெய்து, (எங்குமுளன்கண்ணனென்றமகனைக்காய்ந்து) என்றும்,(பள்ளியிலோதி தொடங்கி, ஆங்கதனுக் கொன்றுமோர் பொறுப்பிலனாகிப்பிள்ளையைச்சீறி ) என்றும், (సాధూనాంయస్సదాభవేత్) (ஸாதூநாம்யஸ்ஸதாபவேத்) என்று-ஸாதுக்களுக்கெல்லாம் த்ர்ஷ்டாந்தமாகச்சொல்லப்பட்ட ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானிடத்திலே அஸஹமாநனாய் அபசாரப்பட்டுப்போந்த ஹிரண்யனை விதாரணஞ்செய்தாப்போலே. தேவரீர்பரதத்வத்தை மாறுடி *நீறுடி பேரிலேயேறிட்டும், பெரியநம்பிக்கும் ஆழ்வானுக்கும் தீங்கு

செய்துபோந்த கங்கைகொண்டசோழபுரத்தில்கண்டகனையும் தண்டித்தருளிற்றே என்று விண்ணப்பஞ்செய்ய ;

அப்படியே, (శ్రీరామానుజవిబుధార్యచోదితస్సన్ ప్రహ్లాదోక్త్యాన్నృహరిర్యథాహిరణ్యమ్। విన్యాధతీతిపతిమాయుధేనశక్త్యోద్రాణం నిశినిశితేన వేఙ్కటేశః॥ తద్ధేతిప్రదళితకణ్ఠనాశరన్ధ్రాత్క్రిమిర్విబ్జోపధిపునరుత్థిదుర్నివారాత్। తత్తస్యైక్రిమిపటలంయత స్తదాసీత్ తస్యాస్తత్క్రిమిగళనామపాపలక్ష్మ॥ ఉద్భూతైర్వ్రణస్ఫురత్కేశదాహగన్ధైశ్చేశో జ్వలితచితాగ్నిదీపగన్ధః। సజ్ఞాత్వాఫణికృతహోమతో వ్యరంసీత్ తత్త్వార్థాన్తరపరిచారకానుగమార్గీ॥ ఆయాతాద్యతిపతిరార్యశిష్యాచ్ఛ్రేశం వృషభగిరినాథహేతిదగ్ధమ్। నిష్ఠ్యూతక్రిమిపటలాద్గళాద్గతాసుం ప్రీతోదాద్వయమనుపూర్ణపాత్రమస్మై ॥ శ్రీనారాయణపురిసమ్పదాత్తజాఖ్యం కలాణాహ్వయసరసితటేఘుమస్థమ్। ఉత్పాద్యాకృతసదశోత్తరద్విచత్వారిం శతిక్రూడక్రూరనికరాన్వితంయతీన్ద్రః) என்று முன்பேஸங்கல்பித்தருளின ஸங்கல்பத்தினாலே, (నిహతాఙ్పూర్వమేవ) (நிஹதாஃபூர்வமேவ) என்னும்படியாக அவன் முன்பேமுடிந்துபோக ;

பின்பு, (அந்தநகரம்புதுக்கியன்பருடனுமுலாவியிருப்ப । வந்தஙிறைஞ்சுமம்மங்கியம்மாள் வணைமாருதியானைச் । சிந்தைமகிழ்ச்சிசெப்புமெனக்குயிர்தீர்ந்தானெனிலும்। இந்தவுகவைக்கேட்டதனாலிதுகல்வியாணித்தலமென்றாள் ॥ இன்மொழியிந்தவிவர்க்கெதுகொடுப்பதென்றாராய்ந்தங்। கன்பருடனுமன்றளிக்குந் துயமேயதிகமென்றருளி। வன்பருதாவரம்பில்லார் தம்மைத்தெண்டனூர்வைப்பித், தென்புலன்களேறகல்செக்கில்திருப்பினபின்) என்று இப்படிசோபநவிசேஷங்கொண்டுவந்துசொன்ன அநுகூலர்க்கு அத்யந்தம்ப்ரியமும் தர்சநத்துக்கு அசோபநகாரிகளானப்ரதிகூலர்க்கு அப்ரியமும் செய்தருளினவநந்தரம் தமக்கிருப்பிடமானவிவ்விடத்துக்குமேலேமூலையான செங்காமியளவும்எழுந்தருளி அங்குள்ளமாயிகளையும்ஜயித்து அங்கே ராமாநுஜமடமுங்கட்டுவித்து, அப்பால்சென்றுதிருக்தும்படி தம்திருவடிநிலைகளான முதலியாண்டானையனுப்பியருளித்தாம்மீண்டெழுந்தருளி;

—※—

உடையவர், விஷ்ணுவர்த்தநராயனைக்கொண்டு பஞ்சநாராயண ப்ரதிஷ்ட்டை செய்வித்ததும்,சோழன்மாண்டானென்பதும்.

(விஞ்சுபுகழாண்டானை வேலூர்செலவிடுத்தருளிப்। பஞ்சநாரணனைப்ரதிட்டைபண்ணி நாரணப்பதியில்।அஞ்சலென்று தன்னடிமையாகுமைம்பத்திருவர்தமைக் । கஞ்சமலராள் நாயகனைகாத்திருமென்றேகழுரு) என்கிறபடியே முதலியாண்டானும் வேலூரேறவெழுந்தருளி அங்குண்டானஅனைவரையும் உடையவருக்குஉரித்தாம்படி திருத்தி, முன்பே எம்பெருமானார்தாம் திருநாராயணபுரம்புதுக்கின

வநந்தரத்திலே விஷ்ணுவர்த்தநனென்கிற ப்ரபுவைக்கொண்டு ஏக முஹூர்த்தத்திலே தழைக்காட்டில், கீர்த்திநாராயணன்என்கிற * வாழ்புகழ்நாரணன், தொண்டனூரிலே லக்ஷ்மீகாந்தனென்கிற ஸ்ரீமந் நாராயணன், கதுகலத்தில்வீரநாராயணன், விஜயாபுரத்தில் விஜயநாராயணன், வேலூரில் கேசவனுக்கு அநந்தரம் நாராயணனுகையாலே கேசவநாராயணனுகிற பஞ்சநாராயணப்ரதிஷ்டாபர்யந்தமாகச்செய்தருளிகைங்கர்யம்முதலாயுவுள்ளவற்றையும் ஆராய்ந்துமற்றும் நியமித்தருளினகைங்கர்யங்களெல்லாங்கண்டு மீண்டவநந்தரம் க்ர்மிகண்டன் மாண்டான்,

—❧❧✳❧❧—

## திருநாராயணபுரத்தில் ப்ரஹ்லாதவரதரான அழகியசிங்கரை உடையவர் மங்களாசாஸநம்செய்தருளியது.

இனிநாம், (அண்டர்கோனணியரங்கன் என்னமுதினைக் கண்டகண்கள்) என்னும்படி கண்ணாரக்கண்டு ஸேவிக்கவேணும், (திருவரங்கம்நம்மூர்) என்னும்படியான திருவரங்கப்பெருநகருக்கு எழுந்தருளவேணுமென்று * [ப்ரஹ்லாதவரதர் அழகியசிங்கரைத் திருவடித்தொழுது, (శ్రీరామానుజవిబుధార్యచోదితస్సన్ ప్రహ్లాదోత్సుకనృహరిర్యథా హిరణ్యమ్। వివ్యాధక్షితిపతిమాయుధేన కణ్ఠే నిఘ్రాణం నిశినిశితేన వేఙ్కటేశః) (ஶ்ரீராமாநுஜவிபுதார்யசோதிதஸ்ஸந் ப்ரஹ்லாதோத்ஸுகந்ருஹரிர்யதாஹிரண்யம்। விவ்யாதக்ஷிதிபதிமாயுதேநகண்டே நிக்ராணம்நிஶிநிஶிதேநவேங்கடேஶ:) என்றநுஸந்தித்து, முன்பேஸங்கல்பித்தருளின ஸங்கல்பத்தாலே ஹிரண்யன், பரதத்வமான தேவரீரை இல்லைசெய்தமாத்ரமன்றிக்கே, (సాధూనాంయస్సదాభవేత్) (ஸாதூநாம்யஸ்ஸதாபவேத்) என்று–ஸாதுக்களுக்கெல்லாம்த்ர்ஷ்டாந்தமாகச் சொல்லப்பட்ட ப்ரஹ்லாதாழ்வானுக்கு அபராதம்பண்ணினஹிரண்யனை நிரஸித்தாப்போலே, கூரத்தாழ்வானுக்குப் பொல்லாங்குபண்ணினவிவனையும் க்ர்மிகண்டனுக்கி நிரஸித்தருளிற்றே! என்று விண்ணப்பஞ்செய்து,

—❧❧✳❧❧—

## திருநாராயணபுரத்திலுள்ளார்க்கு, தமக்குப்ரதிநிதியாகஒரு உடையவர்விக்ரஹம் ஏறியருளப்பண்ணிக்கொடுத்து, திருநாராயணன் செல்வப்பிள்ளை இவர்களுடைய கைங்கர்யங்களை ஆராய்ந்துபோரும்படி கட்டளையிட்டருளியது.

பின்புதமக்கிருப்பிடமான, (திருவரங்கம்நம்மூர்)என்னும்படியான திருவரங்கப்பெருநகருக்கெழுந்தருளவேணும்என்று] திருவுள்ளமாய், திருவநந்தபுரதாஸரையும், ஸ்ரீமாலாகாரதாஸரையும், திருக்குறுங்குடி

* [-] இந்த அடையாளத்துக்குள்ளிருக்கிற க்ரந்தம் ஒருஸ்ரீகோசத்திலேதானிருக்கிறது.

தாஸரையும், யதிராஜதாஸரையும்பார்த்து, “செல்வப்பிள்ளை கிணற்றங்கரைப்பிள்ளையாயிருக்கும், மங்களாசாஸநத்துடனே ஸதாதர்சநம் பண்ணிக்கொண்டுபோருங்கோள்” என்றுஅருளிச்செய்தருள ; அவர்களும் திருவடிகளிலேஸேவித்து “தேவரீர்திருவடிகளைப்பிரிந்திருக்கப்போகாது” என்றுவிண்ணப்பஞ்செய்ய ; அப்போதுஉடையவரும் (மாறனடிபணிந்துய்ந்தவன்) என்னுமதுதோற்றத் திருத்தோளில்திருமகிழ்மாலையும்,திருவாராதநத்துக்கர்ஹமாகத்திருக்கைகளிலேசாத்தின உபயபவித்ரமும், ஸர்வாத்மாக்களுக்குமாக நாராயணசரணஶரணவரணம்பண்ணி அஞ்ஜலிஹஸ்தத்தோடே பத்மாஸநஸ்த்தராயெழுந்தருளியிருக்கிற தம்முடையதிவ்யமங்களவிக்ரஹத்துக்குப்படிவிளங்கிருப்போலேயிருக்கிற ஆர்ச்சாவிக்ரஹத்தை யேறியருளப்பண்ணித் தம்முடையதிவ்யசக்தியை அதிலேப்ரதிஷ்டிப்பித்தருளி, ஒருநிலைக்கண்ணாடியை அழைப்பித்து, தம்முடையவிக்ரஹத்தையும் அர்ச்சாவிக்ரஹத்தையும்பார்க்குமளவில் இரண்டும்ஏகாகாரமாகஒத்திருக்கையாலே, “இதோஉங்களுக்காகநாம் இங்கேயிருக்கிறோம்” என்றுஅருளிச்செய்துஅவர்களுக்கு அடைக்கலமாகக்காட்டியருள ; அவர்களும் மஹாநிதியாகக்கைக்கொண்டு உடையவர்திருவடிகளைத் தங்கள் சிரஸ்ஸிலும் உரஸ்ஸிலும் மநஸ்ஸிலும் தரித்துக்கொண்டிருக்க ; அவர்களைப்பார்த்து, (நல்வகையால்நமோநாராயணாவென்றுநாமம்பலபரவிப் பல்வகையாலும் பவித்திரனேயுன்னைப்பல்லாண்டுகூறுதும்) என்றும், (நல்லாண்டென்றுநவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று பல்லாண்டும்பரமாத்மனைச்சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டே) என்று செல்வப்பிள்ளைவிஷயமாகவும் திருநாராயணன்விஷயமாகவும் மங்களாசாஸநம்பண்ணிக்கொண்டுபோருங்கோள்என்றருளிச்செய்து,

---

உடையவர், திருநாராயணன்நியமநம்பெற்றுக் கோயிலுக்கு எழுந்தருளியது.

அநந்தரம், திருநாராயணப்பெருமாள்ஸந்நிதியிலேயெழுந்தருளி, (అజ్ఞానజన్మగృహమాత్మగుణైర్విముక్తమాజ్ఞాతిలఙ్ఘనపరం యదుశైలనాథ । మిథ్యాప్రపన్నమపి మామవలోకయత్వం లక్ష్మీంక్షమామపిగురూనవలోక్యపూర్వాన్) (அஜ்ஞாநஜந்மக்ருஹமாத்மகுணைர்விமுக்த மாஜ்ஞாதிலங்கநபரம்யதுசைலநாத ! மித்த்யாப்ரபந்நமபிமாமவலோகயத்வம் லக்ஷ்மீம்க்ஷமாமபிகுரூநவலோக்யபூர்வாந்)என்று அநுஸந்தித்து, தேவரீர், முன்புபிராட்டியைப்பிரித்தும், பெரியஉடையாரைமுடித்தும்,ரிஷிகள்குடியிருப்பைக்குலைத்தும் போந்ததசகண்டனை நிரஸித்தருளிற்று ; இப்போதுஅடியேனுக்கு அத்யந்தாபிமதரானஆழ்வானைப்பிரித்துக்கண்கலங்கும்படிபண்ணியும்,அடியேனுக்குஉத்தேச்யரான பெரியநம்பியை தேசாந்தரத்திலே திருநாடு

சேரும்படிபண்ணியும், தேவரீருக்கிருப்பிடமானதிருவிருப்புக்களைக் குலைத்தும்,( ) ( நாராயணாத்பரம்நாஸ்தி ) என்றுபரதேவதைதேவரீராயிருக்கஅவதேவதையை ஆதரித்துக்கொண்டுபோந்த இவனையும்க்ர்மிகண்டனுக்கிநிரஹித்தருளிற்று; ஆகையாலேஅடியேன், * நலந்திகழ்நாரணனுய்க் கோயில்லே கண்வளர்ந்தருளுகிற தேவரீரைத்திருவடித்தொழும்படி விடைகொள்ளுகிறேன்என்று தண்டன் ஸமர்ப்பித்துநிற்க; திருநாராயணரும் "அப்படியேசெய்யும்" என்று ( சேலுகளும்திருவரங்கம்நம்மூர் ) என்றும், ( வண்புகழ்நாரணன் திண்கழல் ) என்கிறபடியே நம்மைத் திருவடித்தொழும்படி பண்ணி விடைகொண்டுபோருமென்றுவிடைகொடுத்தருள ;

—•—

திருநாராயணன்விஷயமாக உடையவர்ஸமர்ப்பித்த * ஒருநாயகத்தையநுஸந்தித்துக்கொண்டு அங்குள்ளார் வாழ்ந்துபோந்தார்களென்பது.

இவரும், ( ) ( உத்ஸங்நோயம் ) என்கிறவாக்யம்நடந்து செல்லுகிறநாளிலேபுறப்பட்டு, ஸஹ்யாதியில்நின்றும் திருக்காவேரி ஸ்ரீரங்காபிமுகமாக ப்ரவஹிக்குமாப்போலே யாதவாத்ரியில் நின்றும் சிஷ்யப்ரவாஹத்துடன் ஸ்ரீரங்காபிமுகராய், தம்மைவணங்காதவழியிலுண்டான அவைதிகமர்யாதாநிரதரையும்அழியாநின்றுகொண்டு,பரமவைதிகரானதம்மைவணங்கிவழிப்பட்டாரையும்வாழ்வித்துக்கொண்டுவழிப்பட்டு எழுந்தருளாநிற்க, திருநாராயணபுரத்திலே*நாரணன்தமராகஸ்தாபிக்கப்பட்டவர்களாய் ராமாநுசமுடையாராய் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள்மேல்நாட்டிலுண்டான,ஸ்ரீவைஷ்ணவர்களும்எம்பெருமானாராகிற பெரியயேரியைப்பிரியாமல்நாலுமூன்றுபயணம்ஸேவித்துக்கோண்டுவர;ராமாநுசனும் அவர்களைநிர்ப்பந்தித்துநிறுத்திப்பெருபுறக்கடலான திருநாராயணரை நித்யஜீவநமாகக்காட்டிவிட ; அவர்களும் வருத்தத்துடனே திருநாராயணபுரத்திலேவந்துபுகுந்து, விடாய்த்தவன் வெறுங்குளத்திலேவிழுந்தாப்போலே மிகவும்பரிதபித்துத் தங்களிலே தேறிக்கொண்டு, ( ) ( அநந்தப்ரதமம்ரூபம்லக்ஷ்மணஸ்ததபரம் । பலபத்ரஸ்த்ரிதீயஸ்துகலௌகஸ்சித்பவிஷ்யதி ) என்றும், (கலியுங்கெடுங்கண்டுகொண்மின்) என்கிறவிஷயத்தையும் இங்கேகாணப்பெற்றோமே, இவர்தாமே முன்பே க்ர்தயுகத்திலே திருநாராயணனைஸ்வேநரூபேண திருவநந்தாழ்வானுய்த் திருவாராதநம்பண்ணியும்,த்ரேதாயுகத்திலே பெருமாளும்பிராட்டியும், ( ) ( நாராயணமுபாகமத் ) என்று சென்று அடிமைசெய்யுமிடத்து இளையபெருமாளாய்த் தாமும்எடுத்துக்கைநீட்டி அடிமைசெய்தும், அன்றிக்கே, மாஹாத்ம்யோ

க்தப்ரகாரத்திலே ஸ்வயமேவ இங்கேயடிமைசெய்தும், த்வாபரயுகத்திலேதீர்த்தயாத்ரா வ்யாஜத்தாலே நம்பிமூக்தபிரானுய்வந்தாராதித்தும், கலியுகத்திலேராமாநுஜனுய்த்திருநாராயணனுக்கு அனைத்தழகுங்கண்டருளப்பண்ணி அடிமைசெய்துபோந்தாரென்றும், (కృతాదిషు త్వాం యదుశైల వాసినాం ప్రసాదశేషాన్త్వయుగేయదాత్మనా । సమర్చయత్స్వోక్తిహృతశ్రుతివ్యథస్సాకేత సాధర్మ్యమవాప్స్యతేమునిః ) ( க்ர்தாதிஷுத்வாம்யதுசைலவாஸிநாம் ப்ரஸாதசேஷாந்த்யயுகேயதாத்மநா। ஸமர்ச்சயத்ஸ்வோக்திஹ்ருதஸ்ருதிவ்யதஸ்ஸாகேதஸாதர்ம்யமவாப்ஸ்யதேமுநிः) என்று அநுஸந்தித்துக்கொண்டு உடையவராலேதத்தமான * ஒருநாயகத்தையும் அநுஸந்தித்துக்கொண்டு அவர்நியமித்தருளின கைங்கர்யத்தையும்செய்துகொண்டு, (செம்பொற்றிருவமைந்தசெல்வப்பிள்ளையாமவனை। ஐம்பத்திருவர்தமடைக்கலமாவைத்தாரோ। திருவரங்கங்கோயில்தனைநோக்கிச்சிறப்புடனே। யதிகளுடனரியர்கள்சூழ்ந்திறைஞ்சும்வேதியனே) என்று அநுஸந்தித்துக்கொண்டிருந்தார்கள்.

---

கோயிலிலுள்ளார், உடையவர் திருக்காவேரியிலேநீராடித் திருமண்காப்புச்சாத்தியருளியது.

இப்பால்உடையவரும், (இருளிரியச்சுடர்மணிகளிமைக்கும்நெற்றியினத்துத்தியணிபணமாயிரங்களார்ந்த। அரவரசப்பெருஞ்சோதியநந்தனென்னுமணிவிளங்குமுயர் வெள்ளையணையைமேவித்।திருவரங்கப்பெருநகருட்டெண்ணீர்ப்பொன்னித்திருக்கையாலடிவருடப்பள்ளிகொள்ளுங்கருமணியைக்கோமளத்தைக்கண்டுகொண்டென்கண்ணிணைகளென்றுகொலோகளிக்குநாளே)என்றுகொண்டுகோயிலையும் பெருமாளையும்ஸேவிப்பதெப்போதோஎன்றுவழிப்பட்டெழுந்தருளாநிற்க,*திருவரங்கப்பெருநகரிலுண்டானவர்களெல்லாருங்கடல்கலங்கினுப்போலேகலக்கி,என்றுகொலோகண்குளிரக்காணுநாளே)என்கிறபடியேகாங்க்ஷித்துக்கொண்டுதெடகடல்வழியேகுடக்கொங்குகளையும்அவ்விடத்திலுண்டான மலைகளையுமெல்லாம் கடுநடையாலேகடந்துபோந்து, அநந்தரம் சென்னிவளவன்திருநாட்டுவளப்பத்தை உள்பெருங்காதலோடே அநுபவியாநின்றுகொண்டு*விழாவருவீதி வளநாட்டுத்திருவரங்கன் திருப்பதியருகாய் காவேரீதீரமானதிருமுடித்துறையிலே குறைவறவிட்டருளி விச்ரமித்து, (மலைத்தலைப்பிறந்திழிந்துவந்துநுந்துசந்தநம் – அலைத்தொழுகுகாவிரி) என்றும், (எண்டிசைக்கணங்களுமிறைஞ்சியாடுதீர்த்தநீர்) என்றும்சொல்லப்படுகிற திருக்காவேரியிலே ஸகலஸந்தாபங்களுமாறும்படித் திருமண்காப்புச்சாத்தியருளி, மீண்டும், * அண்டர்கோனமருஞ்சோலையணிதிருவரங்கத்திலேப்ரவேசிக்கப்பெறுவதே! என்றுப்ரீதராயெழுந்தருளியிருக்க; அவ்வளவில் முதலிகளெல்லாரும், (சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டே,)(அவரைத்தொக்குப்

பல்லாண்டிசைத்துக் கவரிசெய்வரேழையரே) என்கிறபடியே அவர்களும் தம்மைமங்களாசாஸநம்பண்ணிக்கொண்டு ஸந்நிதியிலேஸேவித்துக்கொண்டிருக்க; அவ்வளவில் ராமாநுஜப்பெருவெள்ளத்தின் முற்கொழுந்துபோய்க்கோயிலிலேதாக்கி இவர்இங்கேயெழுந்தருளினபடியை எங்கும்விளம்ப;

—※—

கோயிலார், உடையவர் மீண்டெழுந்தருளின செய்திகேட்டு ஆநந்தபரவசரானார்களென்பது.

அநந்தரம்,*நல்லார்கள்வாழும் நளிரரங்கத்திலுண்டானவர்களெல்லாரும்கடல்கலங்கினாப்போலே கலங்கிக்களித்துக்களித்து அத்யந்தாபிவ்ருத்தமானஹர்ஷத்தையுடையராய், (அரங்கன்மெய்யடியார்கள்தமீட்டம்) என்றும, (தூராதமநக்காதல்தொண்டர்தங்கள்குழாம்) என்றும், (அணியரங்கன்திருமுற்றத்தடியார்தங்களின்பமிகு பெருங்குழவு) என்றும்சொல்லப்படுகிற * தொண்டக்குழாத்திலுண்டானவர்களெல்லாரும்திரண்டு,இவர்மீண்டெழுந்தருளினசெய்திகேட்டு, (తతో హర్షసముద్ధూతో నిస్స్వనోదివమస్పృశత్ । స్త్రీబాలవృద్ధానాం రామోయమితి కీర్త్యతే) (ததோ ஹர்ஷஸமுத்தூதோ நிஸ்வநோதிவமஸ்ப்ருஶத்। ஸ்த்ரீபாலவ்ருத்தாநாம்ராமோயமிதிகீர்த்யதே)என்னும்படி அனைவரும் ஆர்த்துக்கொண்டு வாராநிற்கிறவிவரை, (பொலிகபொலிக) (ஊழிபெயர்த்திடுங்கொன்றே) என்றநுஸந்தித்துக்கொண்டு,(గాయన్తి కేచిత్ప్రణమన్తి కేచిన్నృత్యన్తి కేచిత్ప్రహసన్తి కేచిత్)(காயந்திகேசித்ப்ரணமந்திகேசித்ந்ருத்யந்திகேசித்ப்ரஹஸந்திகேசித்) இத்யாதிப்படியே ஸஸம்ப்ரமராய்ச்சென்றுகிட்டி ஸாஷ்டாங்கதீர்க்கப்ரணாமங்களைவளையவளையப்பண்ணி,(యావన్న చరణౌ భ్రాతుః పార్థివవ్యఞ్జనాన్వితౌ । శిరసా ధారయిష్యామి న మే శాన్తిర్భవిష్యతి) (யாவந்நசரணௌப்ராதுః பார்த்திவவ்யஞ்ஜநாந்விதௌ । ஶிரஸாதாரயிஷ்யாமி நமேசாந்திர்பவிஷ்யதி) என்று எதிராஜருடையசரணங்களை எல்லாருஞ்சிரஸாதரித்து ஸேவித்துசாந்தியையடைந்து, பின்பு, (పరస్పరనీచభావైః) (பரஸ்பரநீசபாவைః) என்கிறபடியே உடையவரையுடையரான உபயவர்க்கமும் அந்யோந்யம்வந்தநபரராய் அதஏவஆநந்தத்தையுடையராய்,அநந்தரம் இங்குநின்றுஞ்சென்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானார்திருமுகமண்டலத்தை ஸேவியாநின்றுகொண்டு, (தர்க்கச்சமணரும்சாக்கியப்பேய்களும் தாழ்சடையோன் | சொற்கற்றசோம்பரும்சூனியவாதரும் நான்மறையும்நிற்கக்குறும்புசெய்நீசரும்மாண்டனர்நீணிலத்தே|பொற்கற்பகமெம்மிராமாநுசமுனிபோந்தபின்னே) என்கிறபடியே – இதரமதநிரஸநபூர்வகமாகத்தேவரீர் இங்கே விஜயத்தோடே யெழுந்தருளப்பெறுவதே! என்று, (வையங்குருடன்றேமாமறையும்பொய்யன்றே| ஐயனுரைத்ததமிழாரறிவார் | வையத்துக் | கூன்றுகோலெந்தை

யெதிராசராதரித்த (மூன்றுகோல்காண்பதற்குமுன்) என்று—தேவரீர் இங்கில்லாவிடில் இவ்விடம்என்னமாய்ப் போகக்கடவதோ!என்று ஈடுபாடு தோற்ற விண்ணப்பஞ்செய்ய ;

கோயிலிலுள்ளார் அரங்கன்திருச்செல்வம் குறைவறநடந்துவருகிற தென்று உடையவரிடத்தில்விண்ணப்பம்செய்தது.

உடையவரும், * " ஆற்றங்கரைக்கிடக்கிற * கோயில்பிள்ளையைப் போற்றிக்கொண்டுபோந்திகோளோ,மாற்றலர்மடியப்பெற்றதோ என்று" வினவியருள ; அவர்களும் (எல்லாஉயிர்கட்கும்நாதன் அரங்கனென்னும்பொருள்சுரந்தான்) என்றும்,(அரங்கன்செய்யதாளிணையோடார்த்தான்) என்றும்,(சிந்தையினேடுகரணங்கள்)என்றுதொடங்கி,தந்தவரங்களும்தன்சரண்தந்திலன் தானதுதந்து) என்றுஞ்சொல்லுகிறபடியே தேவரீர்பண்ணியருளினக்ரஷி ஸபலமாம்படி அத்தலைக்குஅடிமைசெய்துகொண்டுபோராநின்ரும், இப்போது, ( கையில்கனியன்னகண்ணனைக்காட்டித்தரிலும் உன்றன்மெய்யில்பிறங்கிய சீரன்றிவேண்டிலன்யான்) என்னும்படியான தேவரீர் செய்யவடிவைஸேவிக்கப்பெற்ருேமே என்ன ; அவர்களையும் விசேஷகடாக்ஷம்செய்தருளி, அநந்தரம், ஸ்தாநஸமயத்திலுண்டானஸர்வரும் ஸம்ப்ரமத்துடன் ஸங்கமாக ஸேவித்துக்கொண்டுவர ;

உடையவர் சோலைவளப்பங்களை யநுபவித்தருளியது.

அவர்கள்நடுவேஸிம்ஹமானது நடந்துசெல்லுமாப் போலே ஸ்ரீரங்காபிமுகராய்ப்ரதக்ஷிணமாகவெழுந்தருளுகிறவர், * பொன்னுமாமணியும்முத்தமுஞ்சுமந்துபொருதிரைமாநதிபுடைசூழ்ந்து அன்னமாலைவுமலைபுனல்சூழ்ந்தபடியையும், * (சந்தினேடுமணியுங்கொழிக்கும்புனல்காவிரி) என்றும்,( வண்டுபாடும்மதுவார்புனல்வந்திழிகாவிரி)என்றும், (துளைக்கையானைமருப்பும் அகிலுங்கொணர்ந்துந்தி, முன்கிளைக்கும் செல்வப்புனல்காவிரி) என்றும், (பரந்தபொன்னிரந்து நுந்திவந்தலைக்கும்வார்புனல்)என்றும்(புண்ணந்துழாமேபொருநீர்)என்றும்இப்படிப்ரவஹிக்கிறதிருக்காவேரியின்ஜலஸம்ருத்தியையும்,அதில்,*நண்டையுண்டுநாரைபேரவாளைபாயநீலமே அண்டைகொண்டுகெண்டைமேயும்படியையும், அதினருகில் * அண்டநாறும்பொழில்களையும், *அணிபொழில்களையும், *பொங்குநீர்பரந்துபாயும்பூம்பொழில்களையும்,அதில் *போதில்வைத்ததேன் சொரியும்படியையும், அதினருகில்*அங்கயல்பாய்வயலையும், அதில் * சேவலொடுபெடையன்னம் செங்கமலமலரேறி ஊசலாடும்படியையும்,*திருமுகமாய்ச் செங்கமலம்திருநிறமாய்க் கருங்குவளை பொருமுகமாய்நின்றலரும்படியையும், * திருவடிதன்

19-10-86.

திருவுருவும் திருமங்கைமலர்க்கண்ணுங்காட்டிநின்று உருவுடையமலர் நீலம்காற்றாட்டவோசலிக்கும்படியையும்,*உரம்பெற்றமலர்க்கமலமுலைகளந்தசேவடிபோலுயர்ந்து காட்டவரம்புற்றகதிர்ச்செந்நெல்தாள்சாய்த்துத்தலைவணங்கும்படியையும்,*புதுநாண்மலர்க்கமலம்எம்பெருமான் பொன்வயிற்றில்பூவேபோல்வான் * பொதுநாயகம் பாவித்திறுமாந்து பொற்சாய்க்கும்படியையும், அதில் * பூமருவுபுள்ளினங்கள் புள்ளரையன்புகழ்குழறும்படியையும், * யாழினிசைவண்டினங்கள் ஆளம்வைக்கும்படியையும், *எல்லியம்போதிருஞ்சிறைவண்டெம் பெருமான்குணம்பாடும்படியையும், மற்றும் (வண்டினமுரலுஞ்சோலை) இத்யாதியான ஆராமங்களையும் கரைவழியேகண்டுகேட்டு ஹ்ருஷ்டராய் அநுபவியாநின்றுகொண்டு * திட்கொடிமதிளைவந்துகிட்டி வடக்குத்திருவாசலாலேஉள்ளேபுக்கு,*கொடிமதிள்கள் மாளிகைகோபுரங்கள் துன்னுமணிமண்டபங்கள் சாலைகள்தொடக்கமானவற்றையும் கண்டுதெண்டனிட்டு உடையவர் ஸ்ரீரங்கநாயகியாரைமங்களாசாஸநம்செய்தருளியது.

ப்ரதமம்*ஸ்ரீரங்கராஜமஹிஷியான ஸ்ரீரங்கநாயகியார்ஸந்நிதியிலே சென்று ஸேவித்து, (भगवन्नारायणाभिमतानुरूप-शरणमहं प्रपद्ये) (பகவந்நாராயணாபிமதாநுரூப - ஶரணமஹம்ப்ரபத்யே) என்று அநுஸந்தித்துக்கொண்டு திருவடிகளினருகேநிற்க;*அகிலஜகந்மாதாவான ஆகாரந்தோன்ற ஸகலதுஃகசமநபூர்வகமாக ஸகலஸத்காரங்களையுஞ்செய்தருளி நிகிலகைங்கர்யங்களையும்நியமித்தருளிப்போரவிட ; இவரும்பெரியபிராட்டியாராலேபெருக்கஸத்கரிக்கப்படாநின்றுகொண்டு அத்தாலே கைங்கர்ய ஸ்ரீயையுடையராய் அங்கு நின்றும் ஸ்ரீவைஷ்ணவர்களுடன் புறப்பட்டருளுவதாகவொருப்பட்டருள;

உடையவர் அழகியமணவாளனை மங்களாசாஸநம்செய்தருள, அவர்தீர்த்தம் திருமாலைமுதலானவரிசைகள் ப்ரஸாதித்தருளி தம்மருகேவர்த்திக்கும்படி நியமித்தருளியது.

ஸ்ரீவைஷ்ணவர்களும், (அங்கயல்பாய்வயல் - இராமாநுசனடிப்பூமன்னவே) என்று தங்கள்ப்ராப்யத்தையும், ப்ராப்யவர்த்தகையான அவள்ஸந்நிதியிலே ப்ரார்த்தியாநிற்க ; பின்பு * பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு அங்குநின்றும்புறப்பட்டு, எங்கும் அவள்புருஷகாரமாக ஸேவித்து பின்பு ஸ்ரீபலிபீடத்தருகேசென்று ஸேவித்து, அங்குண்டான, (செம்பொனாரும்மதிள்) (ஆயபொன்மாமதிள்) என்கிறதிருமதிளையும்ஸேவித்து உள்ளேப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி, * செம்பொனியவருவரையனையகோயிலாய்ப்ரணவாகாரமானதிவ்யவிமானத்தையும் ஸேவித்துசேஷாசநாதிகளையும்ஸேவித்துபாதச்சாயையிலே,(पादच्छा

ஸ்ஷு ஞீ)(யா ஞகேஹேமபூஷிதே)என்னும்படியானபொன்னின்திருவடிநிலைகளையும்ஸேவித்து அழகியமணவாளன்திருமண்டபத்திலேயெழுந்தருளி அழகியமணவாளப்பெருமாளான பெருமாளைப்பெரியப்ரீதியுடனே எதிரேஸேவித்து பின்பு, பெரியதிருவடி திருவாசல்காக்கும்முதலிகளனுமதியுடனே பெரியபெருமாள்திருவடிகளிலே, (அடியடையாதாள்போலிவளணுகியடைந்தனள் முகில்வண்ணனடியே)என்னும்படிகிட்டிநின்று பிரிந்தக்லேசமெல்லாமாறும்படி நெடும்போதுஸேவித்து, அநந்தரம்*அமலனுதிப்பிரானில்படியே அடியேபிடித்துமுடியளவாகவநுபவித்து,(கண்டகண்கள்மற்றொன்றினைக்காணுவே)என்று அஸ்தமிதாந்யபாவராய்,பின்பு திருப்பல்லாண்டுதொடங்கி யநுஸந்தித்துமங்களாசாஸநம்பண்ணி ஸ்தோத்ரகத்யங்களையுமநுஸந்தித்து அதினர்த்தாநுஸந்தாநத்தாலே ப்ரேமபரவசராயிராநிற்க ;

பெருமாளும்இவரைப்பார்த்து, "பெருக்கவருத்தப்பட்டுக்லேசித்தீர்"என்று,(వచసాసాన్త్వయిత్వైనం లోచనాభ్యాం పిబన్నివ) வசஸாஸாந்த்வயித்வைநம்லோசநாப்யாம்பிபந்நிவ)என்னும்படி *சிரஸ்யாகூபிதங்கதரானவிவரைக் கண்டுகொண்டிருந்து ஸவிநயராய்வினவியருள ; இவரும், "தேவரீர் ஸ்ரீரங்காதிஸ்த்தலங்களிலும்நமக்கு அத்யந்தாபிமதமாயிருக்கும்" என்றருளிச்செய்தநாராயணகிரியிலே ஸ்ரீரங்கநாராயணரானதேவரீர்ஸேவையை அந்தத்திருநாராயணனைக்கொண்டுதேவரீர்நிற்கிறநிலையிலே நித்யஸேவைபண்ணிக்கொண்டு*வருத்தமுந்தீர்ந்து மகிழ்ந்து *(செவ்வடிசெவ்விதிருக்காப்பு) என்றுதிருவடிகளில்திருக்காப்பில்விருப்பத்துடனேவிடைகொண்டிருந்தேன்,திருவடிகளுக்குஒருதீங்கின்றிக்கேயிருக்கப்பெற்றதே!என்றுவிண்ணப்பஞ்செய்து,(என்றுமென்பிள்ளைக்குத்தீமைகள்செய்வார்கள்அங்ஙனமாவர்களே)என்றும்,(పునర్జాతం తదా మేనే సుతానాత్మానమేవచ) (புநர்ஜாதம்ததாமேநேஸுதாநாத்மாநமேசவ) என்றுஞ்சொல்லுகிறபடியே சத்ருக்கள்சாபத்தாலே சமித்தவநந்தரம் பெரியபெருமாள் பெருமாளுள்ளிட்டாரையும், தம்மையும்மறுபிறவியாகவுமெண்ணி, (அடியோமோடும்நின்னோடும் பிரிவின்றியாயிரம்பல்லாண்டு) என்றுஆசாஸித்து அத்யந்தம்ஹ்ர்ஷ்டராயிருக்க ;

அநந்தரம் தீர்த்தம், திருமாலை, சடகோபன், பரியட்டம்முதலானவரிசைகளையும் ப்ரஸாதித்தருளி, "நம்முடையசெங்கோலை உம்முடையகையில் முக்கோலாலேநடத்திக்கொண்டு நம்முடையஸ்ரீகார்யத்தையும் அநிவார்யமாக அதிசயத்துடன்நடத்திக்கொண்டு யாவச்சரீரபாதம் நம்முடைய *ஸ்ரீமத்ரங்கத்திலே உத்துங்கராய்வர்த்தியும், என்றுவிடைகொடுத்தருள ; புறப்பட்டருளினவநந்தரம், (శ్రీరంగరాజచరణాంబుజరాజహంసః శ్రీమత్పరాంకుశపదాంబుజభృంగరాజః । శ్రీభట్టనాథపరకాలముఖాబ్జమిత్రః శ్రీవత్సచిహ్నశరణం యతిరాజ ఏషః॥ చన్ద్రాది ... )

త్వమతకుఞ్జరకేసరీన్ద్రః । శ్రీమద్యతీన్ద్రజయలక్ష్మణదేశికార్యరామానుజాచ్యుతపదార్చనపూతనిత్యమ్॥ పాషణ్డషణ్డమతఖణ్డనచణ్డవాయుం వేఙ్కటశైలపతిపాదసరోజభృఙ్గమ్ । శేషాకారంకరపరిస్ఫురితత్రిదణ్డం రామానుజం భజమనస్సతతం మునీన్ద్రమ్) என்று இப்புஜ்டகளிலே ஸ்தோத்ரம்பண்ணிக்கொண்டு அனைத்துக்கொத்திலுள்ளவர்களும் ஸேவித்துக்கொண்டுபோய் மங்களமஹோத்ஸவமாகமடத்திலேதிவ்யஸிம்ஹாஸநத்திலே எழுந்தருளுவித்து, (అనిశం భజతామనన్యభాజం చరణామ్భోరుహమాదరేణపుంసామ్ | వితరన్ వివిధాం విభూతిమిష్టాం జయరామానుజరఙ్గధామ్నినిత్యమ్॥ జయినోవిమతాన్ తదీయకీర్తిఃకులిశీభూతకదృష్టిభిస్స్వమతాన్ । శకలీకురుతేవిపశ్చిదీడ్యజయరామానుజరఙ్గధామ్నినిత్యమ్॥ శ్రుతిషుస్మృతిషుప్రమాణతత్త్వంకృపయాలోక్యవిశుద్ధయాహిబుద్ధ్యా। అకృతస్తదిహైవభాష్యరత్నం జయరామానుజరఙ్గధామ్నినిత్యమ్) என்றுமங்களாசாஸநம்பண்ணிஸேவித்து அவரநுமதியுடனே அங்கு நின்றும் போந்து தந்தாம்திருமாளிகைகளிலே ஸுஸ்த்திரராயிருந்தார்கள்.

உடையவர், திருவடிகளில் ஸேவித்துநிற்கிற சோழநாடுமுதலியவற்றிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களை குசலப்ரச்நம்செய்தருளியது.

அநந்தரம்எம்பெருமானும்பெரியநம்பிதிருமாளிகையேறவெழுந்தருளி ஸேவிக்க; அத்தசையில் ஸ்ரீபுண்டரீகர், அத்துழாய்முதலானவர்கள் திருவடிகளிலேவிழுந்துபடிந்துதண்டனிட்டுக்கொண்டுகிடக்க; அவர்களையும் எடுத்துத்தேற்றிஸத்கரித்துப்புறப்பட்டுமடமேயெழுந்தருளி, பின்பு தாமும், * ஸ்ரீரங்கராஜசரணாம்புஜராஜஹம்ஸராய்ஸேவித்துக்கொண்டு, (ஸம்ஸேவித) இத்யாதிப்படியே ஸகலரும் தம்மை பரிவ்ர்தராய்ஸேவிக்க, ரங்கம்மங்களஸம்பத்தாய்க்கொண்டு வாழ்ந்தருளுகிறசெய்தியை சோழமண்டலத்திலுண்டான ஸ்ரீவைஷ்ணவர்கள், பாண்ட்யமண்டலத்திலுண்டான ஸ்ரீவைஷ்ணவர்கள், மலைமண்டலத்திலுண்டான ஸ்ரீவைஷ்ணவர்கள், தொண்டைமண்டலத்திலுண்டான ஸ்ரீவைஷ்ணவர்கள், மற்றும் நாநாமண்டலத்திலுண்டான ஸ்ரீவைஷ்ணவர்கள்ளெல்லாரும், (బహూనినామవర్షాణిగతస్యసుమహద్వనమ్।శృణోమ్యహం ప్రీతికరం మమనాథస్యకీర్తనమ్) (பஹூநிநாமவர்ஷாணிகதஸ்யஸுமஹத்வநம்) ச்ருணோம்யஹம் ப்ரீதிகரம்மமநாதஸ்யகீர்த்தநம்) என்னும்படிகேட்டு கல்யாணமாகத்திரண்டுவந்து திருவடிகளிலேஸேவித்து துக்கமெல்லாமாறி, * உலகங்கட்கெல்லாமுயிரான தேவரீரைஸேவிக்கப்பெற்றோமே, ஸநாதராநோமே என்றுஸந்துஷ்டராயிருக்க; உடையவரும் அவர்களைகடாக்ஷித்தருளி, “ ஸுகமேயிருந்தீர்களோ,, என்று குசலப்ரச்நம்பண்ணியருளி நம்மிடத்தில் பேசிருந்தபடிகண்டோமேயென்று ஸம்மாநித்தருளஸத்க்ர்தராய் ஸேவித்துக்கொண்டிருந்தார்கள். (ஆய்ந்தசகாப்த்தமாயிரத்தைம்பத்தொன்பதினீங்கினின்றும்।போந்துபதினோராண்டிங்ஙன்புகழ்தான்வளர்ந்தபெரும்பூதூர்।வேந்தனெண்ணிலாவன்புருடனுமரங்கநகரெய்திப்।பாந்தளணைத்துயில்பரமன்பாதம்பணிந்தங்குறைந்திடுநாள்) என்கிறபடியே எழுந்தருளியிருக்க;

இதுக்குமேலாகக் கூரத்தாழ்வான்வர்த்தாந்தஞ்சொல்லுகிறது;— (அன்றங்கிருந்தவருள் கூரத்தாழ்வானரங்கநகருடைய। அன்றெதிராசனடியார்தம்மைவாசல் விடாதிருப்பச் । சென்றுதிருமாலிருஞ்சோலைச்செல்வர்தம்மைத் தோத்திரஞ்செய்து।ஒன்றியழகர்தம்பதியில்பதிஞைராண்டுறைந்ததற்பின்) என்றும், (ఏకాదశసమాస్తత్ర సూత్రార్చస్సబలోవసత్) (ஏகாதஶஸமாஸ்தத்ரகூத்தார்ச்சஸ்ஸபலோவஸத்)என்று, (శరతల్పగతో భీష్మశ్శామ్యన్నివహుతాశనః) (ஶரதல்பகதோபீஷ்மஶ்ஶாம்யந்நிவஹுதாஶநः) என்றுஞ்சொல்லுகிறபடியே அழகர்கோயிலிலே ஆழ்வானெழுந்தருளியிருக்க; இப்படிஅத்யந்தசாபங்கரான ஆழ்வானளவிலேதத்விச்லேஷாஸஹரான உடையவர்திருவுள்ளஞ்சென்று அவர்இங்கேயெழுந்தருளும்படிக்கு அழகர்திருமலைக்குத் திருமுகம்போகவிட்டருளி, ததாகமநகாங்க்ஷியாயெழுந்தருளியிருந்தார்.

ஆழ்வான்திருநயநங்களுக்குஉபத்ரவம்ஒருஸம்வத்ஸரம்ஸ்ரீபராங்தகனிலே ஸ்ரீவைஷ்ணவர்களாலேபரிஹர்தமாய்அவர்கள்எழுந்தருளுவித்துக்கொண்டுவந்து கோயிலிலேவிட்டவநந்தரம்பெரியஸ்ரீபலிபீடத்தருகேசென்று தண்டன்ஸமர்ப்பித்து, (உன்திருவருளாலன்றிக்காப்பரிதால்முறையோவரவணைமேல்பள்ளிகொண்டமுகில்வண்ணனே என்றும், (புண்ணந்துழாமேபொருநீர்த்திருவரங்காவருளாய்) என்றும், ＊ புண்ணராக்கையுடன்பொருந்ாதவாகாரத்தோடேதம்முடையஆர்த்தியை ஆவிஷ்கரித்து, "பெரியநம்பியையங்கீகரித்தாப்போலே அடியேனையும்அங்கீகரித்தருளிற்றில்லையே"என்றுவெறுத்துவிண்ணப்பஞ்செய்துபின்புஉள்ளேபுகுந்து ஸேவிப்பதாகவெழுந்தருள; திருவாசல்காக்கும்முதலிகளிலேசிலர்,"எம்பெருமானாராலேயன்றோஇத்தேசத்துக்குக் கலஹம்விளைகிறது" என்று அவர்ஸம்பந்தமுடையா ரொருவரும் உள்ளேபுகுந்துஸேவிக்கவொண்ணாது" என்று தகைய; சிலர், "அவரெல்லாரும்போலல்ல இவர்,ஆத்மகுணமுடையவிவரைப்புகுரவிடுங்கோள்" என்ன; "இதென்" என்று அங்குப்பிறந்தவர்த்தாந்தங்களைக் கேட்டருள; அங்குப்பிறந்தபடியை அங்கிலுள்ளார்விண்ணப்பஞ்செய்யக்கேட்டுத் திடுக்கிட்டு ஜலசந்த்ரனைப்போலே நடுங்கி நாலடிபின்வாங்கி, "ஐயோ! எல்லார்க்குமுண்டானஆத்மகுணம் ஆசார்யஸம்பந்தத்துக்கு ஹேதுவாயிருந்தது,அடியேனுக்குண்டானஆத்மகுணம்ஆசார்யஸம்பந்தத்தை அறுத்துக்கொள்ளுகைக்கு ஹேதுவாய்விட்டதோ" என்று வெறுத்துக்கொண்டுபுறப்பட்டு, "என்பேற்றுக்குஎம்பெருமானார்திருவடிகள்ஸம்பந்தமேயமையும், தத்ஸம்பந்தத்தை யொழியப் பெருமாளைத்திருவடித்தொழவேண்டுவதில்லை" என்று,

—※※※※—

## திருமாலிருஞ்சோலையின்வளப்பம்.

( புனைவளர் – கயல்கண்ணியென்காரிகையே ) என்கிறபடியே *என்னரங்கத்தின்னமுதருடைய,(குழலழகர்வாயழகர்கண்ணழகர்கொப்பூழிலெழுகமலப்பூவழகர்)என்கிறபடியே அழகியமணவாளப்பெருமாள்ஸேவையெல்லாம்,(సంజ్ఞా సుందరమంఘ్రి సుందరమహోభాస్వత్కటీసుందరంభూషాసుందరమిందిరాలయలసద్వక్షస్థలీసుందరమ్। కాన్తాస్రగ్భుజసుందరం స్మితముఖం శ్రీశావిద్యత్సుందరంకింప్రత్యఙ్ముఖపాస్య హేవనగిరౌ సర్వాత్మనా సుందరమ్) (ஸ0ஜ்ஞாஸுந்தரமங்க்ரி ஸுந்தரமஹோபாஸ்வத்கடீஸுந்தர0பூஷாஸுந்தரமிந்திரா லயலஸத்வக்ஷஸ்த்தலீஸுந்தரம் | காந்தாஸ்ரக்ப்புஜஸுந்தர0 ஸ்மிதமுக0 ஸ்ரீசாவித்க்ஸுந்தர0கி0ப்ரத்யங்கமுபாஸ்மஹேவநகிரௌஸர்வாத்மநாஸுந்தரம்) என்று அழகனலங்காரனை அழகரிடத்திலே அநுபவிக்கும்படி திருமலேயேறவெழுந்தருளி * அருளுடையவன்றாளையடைந்து, * முடிச்சோதியில்படியே முடியேதொடங்கியநுபவித்து, *மூந்நீர்ஞாலத்தில்படியே ப்ரகர்திஸம்பந்தநிவர்த்தியையுமபேக்ஷியாநின்றுகொண்டு, (திருவேங்கடமாமலேயொன்றுமேதொழநம்வினையோயுமே) (சமன்கொள்வீடுதரும்தடங்குன்றமே) என்கிறபடியே அந்தஅநிஷ்டநிவர்த்தியையும் இஷ்டப்ராப்தியையும் திருமலேயாழ்வாரேசெய்தருளுவர், * அந்தண்திருமாலிருஞ்சோலேயாகையாலே திருமலேயிலேதிருவுள்ளஞ்சென்று, திருமலேயில் சிலம்பாறுபாயும்படியையும், சிலம்பாற்றுக்கு உத்பத்திஸ்த்தாநமான சிலம்பாயிருக்கிற * மதிதவழ்குடுமியையும் அதினருகில் * மயல்மிகுபொழிலிருக்கிறபடியையும், அப்படியேமயங்கப்பண்ணுகிற * அதிர்குரல்சங்கத்தழகரிருக்கிறபடியையும் ஸேவித்து, திருமலேயின் ஊர்த்த்வசிகரத்திலே * ஊர்ந்தியங்குகிறவெண்மதி * மலமறுமதியாய், அந்தணர்மல்யத்தாலே ஊர்த்த்வலோகத்தில் தைவமகளிர் *தங்கள்திங்கள்முகத்துக்கு ஊர்த்த்வபுண்ட்ரதாரணம் பண்ணுகைக்கு களங்கமற்றகண்ணுடிப்புறம்போலேயிருக்கப் பாராநிற்கும்படியையும், அதின்சிகரத்தில்சந்த்ரகலேயைக்கண்ட சாகாம்ர்கமானது, (சிலேயிலிலங்கைசெற்றதேவனேதேவனுவான்) என்றும், (தேவர்கள் நாயகனே) என்றும்தேறி, * எழில்தோளெம்மிராமன் மலேயிலுள்ளதாகையாலே பிறைதங்குசடையானுனசந்த்ரசேகரஸம்பந்தத்தாலே அத்தை நிந்தித்து ஸ்பர்சியாதிருக்கும்படியையும், (கருவாரணந்தன்பிடிதுறந்தோடக்கடல்வண்ணன்திருவாணைகூறத்திரியும்) என்று - திர்யக்குகளும்பகவதாஜ்ஞைக்குபயப்பட்டுநடக்கும்படியையும், திருமலேயாழ்வார்*ஆயிரம்பைந்தலேய அநந்தசயநனுகையாலே * படங்கள்பலவுமுடைப்பாம்பரையனுடையகோத்ரவைபவத்தாலேஅந்தகோத்ரத்திலுண்டான குண்டலிகளே அங்குண்டான * மாதுறுமயில்களான சிகண்டிகள் அண்டிதண்டியாதபடியையும், அங்குண்டானபறைவைகள் * ஆடற்பறவையரையனுஜ்ஞையைநடத்தும்படியையும்,அதில் * ஊரும்வரி

யரவமானபாம்புகள் * பாம்பரையனுஜ்ஞையைநடத்தும்படியையும், அங்குண்டான ஹரிகுலமானது *அரியரையனான அநுமன்புகழ்பாடி அந்தத்திருவடியான திருவடிகளின் ஆஜ்ஞையைநடத்தும்படியையும், அதில் * கானவெண்கானவை "சாம்பவன்வாழ்க" என்று அவனாஜ்ஞையைநடத்தும்படியையும், கழுகுஎன்னும்படியானவதில்க்ர்த்ரமும் க்ர்த்ரராஜனுடைய ஆஜ்ஞையைநடத்தும்படியையும், அதில் * மழைக்களிறும் * பட்டிப்பிடிகளும் * பிடிசேர்களிறுய்கஜராஜனான கஜேந்த்ராழ்வானுடைய ஆஜ்ஞையைநடத்தும்படியையும், அதில் * சந்தநப்பொழிலின்தாழ்சினைநிழல்தாழ்வரைமகளிர்கள் நாளும் * வகுளதர ஸரஸ்வதியாய்*பண்ணார்பாடலான திருவாய்மொழியை, அவனேபாதி, (தென்னதென) என்றுபண்ணாலே ஆளத்திவைக்கும்படியையும், அதில் * அறுகால்வரிவண்டுகள் ஆயிரநாமஞ்சொல்லிச்சிறுகாலைப்பாடும்படியையும், அதில் * வானகச்சோலை மரதகச்சாரல் மாமணிக்கல்லதிர்நிறைந்துமன்னிநுகரும்படியையும், இப்படிதிருமலையிலுண்டான திர்யக்குக்களும் தங்கள்குலகுருக்களான ததீயவைபவாபிஜ்ஞங்களாய்ப்ரதிபத்திபண்ணும்படியையும் அநுபவியாநின்றுகொண்டு

—❧❧*❧❧—

## உடையவர் ஸுந்தரராஜன்வடிழகிலே யீடுபட்டது.

அதில் ஏகதேசஸ்த்தனாய், *மேலிருங்கற்பகமாய்நிற்கிற அழகருடைய அவயவசோபை, சமுதாயசோபை, ஆபரணசோபை, ஆயுதசோபை, விக்ரஹகதங்களானகுணங்கள், ஸ்வரூபகதங்களானகுணங்கள், இவற்றுக்கெல்லாம்ஆச்ரயமானஸ்வரூபவைலக்ஷண்யம், இவற்றினுடையஸத்ப்பாவத்தைஸாதிக்கிற வேதாந்தவேத்யத்வத்தை,(வேதாந்தவிழுப்பொருளின்மேலிருந்தவிளக்கு) என்றும், * (மெய்ஞ்ஞானவேதியனை*சிலம்பியலாறுடையமாலிருஞ்சோலை நின்ற*நலந்திகழ்நாரணனைஎன்று நாராயணநுவாகஸித்தனென்னும்படியையும், அவன்றான் *ஏறுதிருவுடையனாயிருக்கையாலேஸ்ரிய:பதியாயிருக்கும்படியையும், அந்தப்பெரியபிராட்டியாரைப்பெறுகைக்கு*மந்தரம்நாட்டியன்றுமதுரக்கொழுஞ்சாறுகொண்ட சுந்தரத்தோளுடையனாய், அதஏவ * திருவிளையாடுதிண்டோளனாயிருக்கிறபடியையும் அதின்அட்டத்திலே விட்டத்திலிருப்பாரைப்போலே அவற்றையாச்ரயித்துப்போருகிற ஸ்ரீபூமிநீளைகளும் அச்சேர்த்தியையநுபவித்து அநுபவஜநிதப்ரீதிகாரிதகைங்கர்யநிரதராயிருக்கிற * அமரர்கோன் தொடக்கமான * அயர்வறுமமர்களையும், அவர்களடிமைக்குறுப்பான திருவெண்கொற்றக்குடை, திருவெண்சாமரந்தொடக்கமான * கைங்கர்யோபகரணங்களையும், இவர்களுடன் இருவருக்கும் க்ரீடாஸ்த்தானமான * ஆயிரமாறுகளும் சுனைகள் பலவாயிரமும் ஆயிரம்பூம்பொழில்களையுமுடைத்தாயிருக்கும்படியையும் அருளிச்செய்த ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்திகளை அடியொத்தியருளிச்

செய்தும், அதுக்குமேலே, (மூவரில்முதல்வன்) என்றும், (தேவர்கள் நாயகன்) என்றும், (பங்கயமாமலர்க்கண்பரனையெம்பரஞ்சுடரை) என்றும், (பரஞ்சோதிநீபரமாய்) இத்யாதியாலும், (முழங்கார்கடலுட்கிடந்து) என்றும், (அண்டரும்பரவவரவணைத்துயின்றசுடர்முடிக்கடவுள்) என்றும்,(எழில்தோளெம்மிராமன்) என்றும்,(உறியமர்வெண்ணெயுண்டவன்) என்றும், (கோவலர்கோவிந்தன்) என்றும், (என்னெஞ்சுமுயிருமுள்கலந்து) என்றும், (தானேயாகிநிறைந்தெல்லாவுலகுமுயிருந்தானேயாய்)என்றும்,(திருமாலிருஞ்சோலைமலையை-ஒருமாநொடியும் பிரியான்) என்றும், (திருமாலிருஞ்சோலைக்கோனே) என்றும், (தேசமெல்லாம்வணங்கும் திருமாலிருஞ்சோலைநின்ற) என்றும் – பரத்வாதிபஞ்சகப்ப்ரகாரத்தையும், விசேஷித்து, (మధ్యే) (மத்யே) என்றுதொடங்கி,(శేషశయనే శేషే సదా సున్దరే)(சேஷசயநேசேஷேஸதாஸுந்தரே)என்கிறபடியே, (வள்ளல்மாலிருஞ்சோலை மணாளனார்பள்ளிகொள்ளுமிடம்) என்றும்,(త్వం హి సున్దర) (த்வம்ஹிஸுந்தர) என்றுதொடங்கி, ((ఇహ తిష్ఠ సే సదా) (இஹதிஷ்டஸேஸதா)என்கிறபடியே (வெற்பென்றிருஞ்சோலைவேங்கடமென்றிவ்விரண்டும்நிற்பு ) என்றும், (హస్తిశైలనిలయోద్భవద్భవాన్) (ஹஸ்திஶைலநிலயோபவங்பவாங்)என்றுதொடங்கி,(విశ్వమేవ తత సే హి సున్దర) (விச்வமேவததஸேஹிஸுந்தர) என்கிறபடியே (ஒருவாரணம்பணிகொண்டவன்) என்றும், (அத்தியூரான் புள்ளையூர்வான்) என்றும், (హరితవారణభృత్యమ్) (ஹரிதவாரணப்ர்த்யம்) என்றுதொடங்கி, (దృఢమలం భయమేవ హి సున్దర) (த்ர்டமலம்பயஏவஹிஸுந்தர) என்றும் இத்யாதியாலும் இப்படி ஆழ்வார்களை அடியொத்தி புஷ்பத்யாகபோக மண்டபங்களென்று ப்ரஸித்தமாகச்சொல்லப்படுகிற திருப்பதிகளிருப்புமுதலானவற்றையும் அநுபவித்து.

அநந்தரம் அவ்விடத்துக்கு அடிமைசெய்துபோந்த மலயத்வஜ சக்ரவர்த்திகளுக்குத்திருவடிகளைப்ரஸாதித்தாப்போலே தமக்கும்ப்ரஸாதிக்கவேணுமென்றும், (కర్కిభవిష్యన్ కలికల్కదూషితాన్ దుష్టానశేషాన్ భగవన్ హనిష్యసి | స ఏష తస్యావసరస్య సున్దరః ప్రసాదిలక్ష్మీశ సముక్షమేవనః) (கர்கிபவிஷ்யங்கலிகல்கதூஷிதாங்துஷ்டாநஶேஷாங்பகவங்ஹநிஷ்யஸி। ஸ்ஏஷதஸ்யாவஸரஸ்யஸுந்தர: ப்ரஸாதிலக்ஷ்மீஸஸமுக்ஷமேவந: ) என்று சத்ருநிரஸநத்தையும், இதெல்லாத்திலும் சேகரித்தவர்த்தமாக (విజ్ఞాపనాం వనగిరీశ్వర సత్యరూపామఙ్గీకురుష్వ కరుణార్ణవ మామకీనామ్ | శ్రీరఙ్గధామ నియత పురమేష సోహం రామానుజార్యవశగః పరివర్తిషీయ) (விஜ்ஞாபநாம்வநகிரீசவரஸத்யரூபாமங்கீகுருஷ்வகருணார்ணவமாமகீநாம்। ஸ்ரீரங்கதாமநியதாபுரமேஷஸோஹம் ராமாநுஜார்யவசகஃபரிவர்த்திஷீய) என்றும் (శ్రీరఙ్గశ్రియమన్వహం ప్రగుణయం స్వద్భక్తభోగ్యాం కురు)(ஸ்ரீரங்கச்ரியமந்வஹம்ப்ரகுணயம்ஸ்வத்பக்தபோக்யாம்குரு) என்று-ஸுந்தரராஜஸ்தவமுகேந * மாலிருஞ்சோலைநின்ற

சுந்தரனைவந்தித்து நித்யமாகப்ப்ரார்த்தித்துக்கொண்டு எழுந்தருளியிராநிற்கிற வளவிலே, (ఏతత్త్రయ్యన్తసిద్ధాన్తపరిబన్ధివిదారణమ్ । యాదవాద్రినివాసస్య యతిరాజస్య శాసనమ్ । శాసనం యతిరాజస్య సతాం మూర్ధ్ని కృతాసనమ్ । త్రాసనం దుష్టసిద్ధాన్తవాసనాదూషితాత్మనామ్) (ஏதத்த்ரய்யந்தஸித்தாந்தபரிபந்திவிதாரணம்।யாதவாத்ரிநிவாஸஸ்ய யதிராஜஸ்யசாஸநம்॥ஶாஸநம்யதிராஜஸ்ய ஸதாம்மூர்த்நிக்ருதாஸநம் । த்ராஸநம்துஷ்டஸித்தாந்த வாஸநாதூஷிதாத்மநாம்) என்கிற வைபவத்தையுடைத்தான யதிராஜசாஸநம் சென்றவளவிலே ஆழ்வான்முதலானவனைவரும் எதிர்கொண்டு தெண்டனிட்டு நடைபாவாடைபடுத்துஅடியொன்றவைத்து அத்தைசிரோபூஷணமாகதரித்துத்திருமுகப்பாசுரத்தையுடன்பட்டுஉளமகிழ்ந்து உடனேபுறப்பட்டுஅழகர்திருமுன்பேசென்று,

—❧—

### பெரியபெருமாள் ஆழ்வான்கேட்டபடி நாலூரானுக்கும், உடையவர் ஸம்பந்திஸம்பந்திகளுக்கும் பெருவீடுதந்தோம் என்று திருவாய்மலர்ந்தருளியது.

(ఆమ్నాయకల్పతరుకోటిసుగన్ధిపుష్పం యోగీన్ద్రహర్షసరసీరుహరాజహంసమ్ । ఉత్పన్నధర్మసహకారఫలప్రకాణ్డం వన్దేతసున్దరభుజస్య పదారవిన్దమ్) (ஆம்நாயகல்பவதிகோத்பஸுகந்திபுஷ்பம்யோகீந்த்ரஹார்தஸரஸீருஹராஜஹம்ஸம் । உத்பக்வதர்மஸஹகாரபலப்ரகாண்டம்வந்தேதஸுந்தரபுஜஸ்ய பதாரவிந்தம்) என்று அழகரையும் பரமஸ்வாமிகளையும்ஸேவித்து, (தெள்ளியார்பலர் கைதொழும்தேவனார் வள்ளல்மாலிருஞ்சோலைமணாளனார் பள்ளிகொள்ளுமிடம்) என்னும்படிதேவரீர் * அரங்கத்தரவணைப்பள்ளியானுய்க் கண்வளர்ந்தருளுகிற*அரங்கமாகோயிலிலேவிடைகொள்ளுகிறேன்என்றுவிண்ணப்பம்செய்ய;அப்படியே*நலந்திகழ்நாரணரானநம்மைத்தொழுதுபோரும்என்று விடைகொடுத்தருள;அவரும், தாழாமல், ஸ்ரீவத்ஸசிஹ்நரான தாமும் ராமாநுஜகாமதேநுவை நாடிக்கொண்டு எழுந்தருளி தம்முடையபரிதாபமெல்லாந்தீர யதிராஜசரணங்களிலே ப்ரணதராய்ஸேவிக்க ; அவரும், வாரியெடுத்து * மார்பாரப்புல்கி * கஞ்சமலர்க்கண்ணீராலேஇவரை மஞ்சநம்பண்ணி அஞ்சலென்றசொற்களாலே வினவினவநந்தரம்,ராமாநுஜார்யவஶரானவிவரைக்கைப்பற்றிக்கொண்டுபோய்பெருமாள்திருவடிகளிலேசேர்த்துஸேவிக்கப்பண்ண; பெருமாளுமுகந்தருளி, இவர், தர்ஶநத்துக்காகதர்சநஸாமக்ரியான கண்களைஇழந்தவராகையாலே உமக்குக் கண்கொடுத்தோம்கொள்ளுமென்ன ; ஆழ்வானும் அடியேனுக்கு இனிகண்டகனைக்கண்டகண்கள் வேண்டுவதில்லை, (శ్రీరామావరజమునీన్ద్రలబ్ధబోధః) (ஸ்ரீராமாவரஜமுநீந்த்ரலப்தபோதஃ) என்னும்படி * ராமாநுசன்தந்த ஞானமாகிறஉட்கண்ணுண்டுஎன்ன ; இத்தைக்கேட்டஎம்பெருமானும் விஸ்மயப்பட்டு,

செம்பியன்செய்த செயல்களைக்கண்டு மிகவும்வெம்பிக்லேசித்து, "உமக்கிப்படியாவதே!" என்றுகேட்டருள; ஆழ்வானும்; "அடியேன்ஒருஸ்ரீவைஷ்ணர்திருமண்காப்புக்கோணிற்று" என்றுநினைத்திருந்தேனுக்வேணுமென்றுவிண்ணப்பஞ்செய்ய; உமக்குத்ரிவிதகரணத்திலும் அபசாரமுண்டோவென்றுதேற்றியருள; அவ்வளவிலே பெருமாளும்சிந்தையுகந்து; "இவர்கருணைசேர்ந்தோர்க்கெல்லாம்*அந்தமில்பேரின்பமளிக்கிறோம்" என்றருளிச்செய்ய; ஆழ்வானும் அந்தநாலூரானுக்குளதிராஜர்க்காக*அருள்செய்வதேநலம் என்ன; அவரும், "தந்தோம்" என்றருளிச்செய்ய; ஆழ்வானும், பெரியபெருமாளாலே தம்முடைய ஸம்பந்திஸம்பந்திகளுக்கெல்லாம்பெரியவீட்டைப்ரஸாதிக்கும்படியான்பெருமையைப்பெற்றுஉடையவருடனே மடமேயெழுந்தருளினார். உடையவரும்இவர்பரஸம்ர்த்தயைகபர்ராய்ஸ்வஸ்மிந் அஸஹ்யாபராதியான்வன்திறத்தும்வரம்வேண்டினபடியைக்கண்டு, (அன்றுசனகன்றிருமகளார் கல்லவியற்றுமரக்கனைமுன் । இன்றுபோய்வாவெனுமிறையவனென்றாழ்வானுக்கிணையொவ்வான் । அன்றுதன்னைநலிவித்தநாலூராற்குநலம்புரிந்தோன்என்றும் வாழ்கவாழ்க) என்று ப்ரஹ்ருஷ்டராய்ஸ்தோத்ரம்பண்ணி, நமக்குஅத்ருஷ்டத்துக்கு ஆழ்வானுடைய ஸம்பந்தமுண்டென்று ஸந்துஷ்டராய்த்திருப்பரியட்டத்தைமுடிந்து, மேலே யெறிந்து ஆர்த்துக்கொண்டருளி நிர்ப்பரராய் எழுந்தருளியிருந்தார்.

அத்தைப்பற்ற, (అర్వాఞ్చో యత్పదసరసిజద్వన్ద్వమాశ్రిత్య పూర్వే మూర్ధ్నా యస్యాన్వయముపగతా దేశికా ముక్తిమాపుః। సోయం రామానుజమునిరపి స్వీయముక్తిం కరస్థాం యత్సమ్బన్ధమమనుత కథం వర్ణ్యతే కూరనాథః) (அர்வாஞ்சோயத்பதஸரஸிஜத்வந்த்வமாஶ்ரித்யபூர்வே மூர்த்நாயஸ்யாந்வயமுபகதா தேஶிகாமுக்திமாபு: । ஸோயம் ராமாநுஜமுநிரபிஸ்வீயமுக்திம்கரஸ்தாம்யத்ஸம்பந்தமமநுத கதம்வர்ண்யதேகூரநாத:) என்றும், (ఆచార్యవర్యవిభవస్య చ శిష్యవృత్తేః సీమేతి దేశికవరైః పరితుష్యమాణః। నిత్యానవద్యకరుణావిలసత్కటాక్షం శ్రీవత్సచిహ్నగురుమన్వహమాశ్రయామి) (ஆசார்யவர்யவிபவஸ்யசஶிஷ்யவ்ருத்தேஸ்ஸீமேதிதேஶிகவரை: பரிதுஷ்யமாண: । நித்யாநவத்யகருணாவிலஸத்கடாக்ஷம் ஸ்ரீவத்ஸசிஹ்நகுருமந்வஹமாஶ்ரயாமி) என்றும், க்ருபைக்கு ஆர்த்ராபராதிகளான ராக்ஷஸிகளையும், காகத்தையும்ரக்ஷித்த ஸ்ரீஜநகராஜன்திருமகளை எண்ணினால் ஆழ்வானை எண்ணலாமத்தனை என்றும், (மன்னுபுகழ்கூரத்தாழ்வான்மலர்த்தாள்கள்வாழியே மதிளரங்கர்புரோகிதனார்வண்மையென்றும்வாழியே । இன்னருளாலெவ்வுயிர்க்கு மிதமுரைத்துத்திருத்தி யெதிராசர்க்களாக்குமியல்புடைமைவாழியே । தன்னளவில்தீமைசெய்த நாலூரான்றனக்கும் தான்பெற்றவவ்வுலகமருள்செய்தான்

வாழியே; என்னையிந்தப்பவத்தினின்றுமெடுத்து வசப்படுத்தியிரவுபகல் டிமைகொள்ளு மேற்றமென்றும்வாழியே) என்றும் மற்றுள்ளாரும் அநுஸந்தித்தார்கள்.

―――

*கூரத்தாழ்வான் உடையவர்நியமநப்படி வரதராஜஸ்தவஞ்செய் தருளிப்பேரருளாளரிடத்தில் * நெஞ்சென்னும்உட்கண்ணை யும், நான்பெற்றபேறுநாலூரானும்பெறவேணுமென்ற வரத்தையும்பெற்றது.*

அதின்மற்றைநாள் உடையவரும்ஆழ்வானைப்பார்த்து, ஆர்த்த த்ராணபராயணராய் அத ஏவ "ப்ரணதார்த்திஹரன்" என்றுபேர் பெற்று, அத்ரஸர்வத்ரபுத்ரநேத்ராமர்தபர்யந்தமானவரங்களைகொடுத் துரக்ஷித்தருளும் * வரந்தரும்மாமணிவண்ணரானபேரருளாளர் அர் த்திதார்த்தபரிதாநதீக்ஷிதராயிருப்பர், நீர்அவரை, "கண்தந்தருளவே ண்டும்"என்று ஒருஸ்தோத்ரம் விண்ணப்பம்செய்யும்என்று நியமிக்க; ஆழ்வானும், "அடியேனுக்குக்கண்கள்வேண்டா" என்றுவிண்ணப்ப ஞ்செய்ய; எம்பெருமானாரும்அப்படியன்று, சொல்லவேணுமென்று நிர்ப்பந்திக்க; ஆழ்வானும் கண்ணழியாமல் வரதராஜஸ்தவத்தையருளி ச்செய்யஉபக்ரமித்து, (స్వస్తి హస్తిగిరిమస్తశేఖరస్సంతనోతు మయి సంతతం హరిః । నిస్సమాభ్యధికమభ్యదత్త యం దేవమౌపనిషదీ సరస్వతీ) (ஸ்வஸ்திஹஸ்திகிரிமஸ்த சேகரஸ்ஸந்தநோதுமயிஸந்ததம்ஹரிঃ । நிஸ்ஸமாப்ப்யதிகமப்யதத் தயம் தேவமௌபநிஷதீஸரஸ்வதீ) என்றும்சொல்லி, (నీలమేఘనిభమఞ్జనపుఞ్జశ్యామకున్తళమనన్తశయం త్వామ్ । అబ్జపాణిపదమమ్బుజనేత్రం నేత్రసాత్కురు కరీశ సదా మే) (நீலமேகநிபமஞ்ஜநபுஞ்ஜஶ்யாமகுந்தளமநந்தஶயம்த்வாம் । அப்ஜபாணிபதமம்புஜநேத்ரம் நேத்ரஸாத்குருகரீஶஸதாமே) என்ற இஶ்லோகத்தாலேஸதாதர்ஶநம்பண்ணயோக்யமான அப்ராக்ர்ததிவ்ய நேத்ரம் அடியேனுக்குத்தந்தருளவேண்டுமென்றுவிஜ்ஞாபிக்க; அன் றிரவே ஆழ்வானுக்குப்பேரருளாளரும், "தந்தோம்" என்றுஸ்வப்ந முகேநஅருளிச்செய்ய; ஆழ்வானும் * ப்ரத்யூஷகாலத்திலேபெரியப்ரீதி யோடேயெழுந்திருந்து, அநுஷ்டாநம்செய்து வரதராஜஸ்தவத்தை நிறைவேறவருளிச்செய்து, உடையவர்ஸந்நிதிக்குச்சென்று தண்டன் ஸமர்ப்பித்து, தேவரீர்நியமித்தபடியே வரதராஜஸ்தவம்விண்ணப்பம் செய்தேனென்று வரதராஜஸ்தவத்தை விண்ணப்பம்செய்ய; உடையவ ரும்கேட்டுஉகந்தருளினவளவிலே ஆழ்வானும் * பிணியொழித்தமரர் பெருவிசும்பருளும் பேரருளாளராகையாலே அடியேன்கேட்டபடி யே, (వైకుణ్ఠేతు పరేలోకే నిత్యత్వేన వ్యవస్థితః । పశ్యన్తి చ సదా దేవం నేత్రైర్జ్ఞానేన చామరాః) (வைகுண்டேதுபரேலோகேநித்யத்வேநவ்யவஸ்திதঃ । பஶ்யந்திசஸதாதேவம்நேத்ரைர்ஜ்ஞாநேநசாமராঃ) என்றும் சொல்லப்

படுகிற ஸ்ரீவைகுண்டநாதனை ஸதாதர்சநம்பண்ணுகிற அப்ராக்ருத திவ்யசக்ஷுஸ்ஸைப்ரஸாதித்தருளினாரென்ன; உடையவரும், அங்ஙனன்று அங்கேறப்போவோம்வாருமென்று ஆழ்வானைக்கையைப்பிடித்துக்கொண்டுபெருமாள்கோவிலேறவெழுந்தருளி, ஆழ்வானருளிச்செய்த வரதராஜஸ்தவத்தை வரதராஜன்ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்துதலைக்கட்டுகிறபோது, கார்யாந்தரத்திலே உடையவர்தாழ்க்க; ஸ்தவம்திருச்செவிசாத்திப் பேரருளாளரும் ப்ரஸந்நராய், உடையவர்வருவதற்குமுன்னே ஆழ்வான்! உமக்கபேக்ஷிதமென்னென்றுகேட்டருள, ஆழ்வானும் உடையவர் திருவுள்ளம்பற்றினதைக்கேளாதே, "நான்பெற்றபேறு நாலூரானும்பெறவேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய; "அப்படியே பெறக்கடவன்" என்றுபெருமாளும் திருவாய்மலர்ந்தருளினவளவிலே, உடையவர் ஓடிவந்து இத்தைக்கேட்டுப்பதறி உள்ளம்குசிந்து, பெருமாளைக்குறித்து, ஸர்வஜ்ஞரானதேவரீர் இப்போது என்னினைவைத்தலைக்கட்டிற்றிலீரே, ஆழ்வான்! நீஸ்வதந்த்ரனாய் என்னினைவை அதிலங்கித்து, நான்வருவதற்குமுன்னேஇப்படிச்செய்தாயென்று இவரையும்வெறுத்து, இனியென்னென்றுதிகைத்துநிற்க; பேரருளாளரும், "நம்மையும் உம்மையுங்காணுமிடத்து உட்கண்ணால்காணக்கடவர்" என்றுவரப்ரதானம்பண்ணியருள; ஆழ்வானும், பெருமாளைத் தம்உட்கண்ணாலேகண்டு ஸேவித்துசாத்தினதிவ்யாபரணம், திவ்யவிக்ரஹாவயவாதிகள் இவற்றை இவையென்றுகுறித்துக்காட்டியருளி, உடையவர்விக்ரஹத்தையும் ஸேவித்துக்காட்டியருள; இவரும் க்ருதார்த்தராய், ஆழ்வானுடன் மீண்டுகோயிலேறவெழுந்தருளி, பெருமாளையும்ஸேவித்து மடத்திலே எழுந்தருளியிருந்தார்.

—※—

## கூரத்தாழ்வான் ஸ்ரீரங்கபௌரோஹித்யத்தைப்பெற்று புராணம்விண்ணப்பஞ்செய்வாராகஆனதும், திருவரங்கத்தமுதனார் நம்பெருமாள்சேர்த்தியிலே இயற்பாவிண்ணப்பஞ்செய்வாரானதும்.

அநந்தரம், உடையவரும் இவர்க்கு எத்தைச்செய்வுதோமென்று விசாரித்து, அமுதனாரகத்திலேமத்யாஹ்நத்தில் உச்சிவெய்யிலிலே தாமொருவருமாகமாதுகரத்துக்கென்று எழுந்தருள; அமுதனாரும் இதுவென்இப்போதென்று விஸ்மயத்துடனே திருவடிகளிலேசென்று ஸேவித்துக்கேட்க; ஸ்ரீபாஷ்யகாரரும் "உம்முடையபௌரோஹித்யக்காணியைநமக்குத்தரவேணும்" என்ன; அமுதனாரும், மஹாப்ரஸாதமென்று திருவுள்ளத்தின்படியே ஹிரண்யோதககதாராபூர்வகமாக ஆழ்வானையுத்தேசித்துஸமர்ப்பித்தார். அன்றுதொடங்கி ஆழ்வானை பௌரோஹித்யத்துக்குக் கட்டளையிட்டு, நித்யம்பெருமாள்ஸந்நிதியிலேபுராணம் விண்ணப்பம்செய்யும்படியாகவும்நியமித்து, புராணகர்த்தாவானு

ஸ்ரீபராசரநாமத்தையு மிவர்பேரிலே என்றும் நடந்துபோரும்படி ஏற்றமாகச்செய்தருளினார். அமுதனார்க்கும் * நாரணன்றன்நாமமான திருவந்தாதிகளோடேசேர்த்தியாம்படியாகவும், ராமாநுசன் திருநாமமான நூற்றந்தாதிநடக்கும்படியாகவும், இயற்பாவைச் சேர்த்தியிலே ஸேவிக்கும்படியாகவும், கட்டளையிட்டருளினார்.

பின்புபெரியநம்பியும் ஆழ்வானும் தர்சநத்துக்கு அதிசயத்தை ஆபாதிக்கைக்காகக் கண்ணுமுயிருமிழந்தவர்களாகையாலே, அவர்களுக்குபாதச்சாயையான ப்ரதேசத்திலே எதிருமெதிருமாக இரண்டு நிவேசநமும்அதிசயமாகப்ரஸாதிக்க ; அவர்களும் அதிலேப்ரவேசித்தார்கள்.

—※—

குலோத்துங்கச்சோழன் திருச்சித்திரகூடத்தில் கோயிலைக்குலைத்தபோது, உடையவர் திருப்பதியில்கோயில்கட்டுவித்து அதில்தில்லை கோவிந்தராஜனை ப்ரதிஷ்ட்டிப்பித்தது.

* அம்பொற்குடைச்சகஸ்ரயிரத்தொன்பதாம் வர்ஷத்துத்தென்பால்சென்னிகுலோத்துங்கன், சித்திரகூடச்செங்கண்மால்தன்னை அலையெறிநாள்தான்)என்றுசொல்லும்படி, *பைம்பொன்னும் முத்தும்மணியுங்கொணர்ந்துபடைமன்னவன்பல்லவர்கோன்பணிந்த |, செம்பொன் மணிமாடங்கள்சூழ்ந்ததில்லைத் திருச்சித்திரகூடம் குலைந்தபடியைக் கேட்டுத்திருவுள்ளமுழைந்து,அங்குள்ளபரிசாரகரும்*கருமாகடலில்கிடந்தானையுமாவாஹநம்பண்ணிக்கொண்டு,அவருத்ஸவபேரமான*வீதியாரவருவாரையும் பரிகரங்களுடனேதிருப்பதியேற எழுந்தருளப்பண்ணுவித்துக்கொண்டுபோய் அங்கேபதியாயிருக்கிறவிருப்பையுங்கேட்டு சடக்கெனப்புறப்பட்டருளி*தானிருந்தஊரெல்லாமானதிருப்பதியினிருப்பையும்திருவடித்தொழுது,திருப்பதியேறவெழுந்தருளி, ( வீதியாரவருவானைவிருந்தாவனத்தேகண்டோமே)என்னும்படி ஸேவித்து, கட்டியதேவனென்கிறயாதவராயனைக்கொண்டு திருவிருந்தபெருமாள்திருவீதிபுக்குவடக்காகச்சடக்கெனஒருகோயில்கட்டுவித்தருளி, (கோவிந்தராஜனை,(தேனமர்பூம்பொழிற்றில்லைச்சித்திரகூடமமர்ந்த|வானவர்தங்கள்பிரானை) என்னும்படிஸுப்ரதிஷ்ட்டிதமாகப்ரதிஷ்ட்டிப்பித்து, அநந்தரம்*கருமாகடலுட்கிடந்தானுகந்துகவைநா வரவினணைப்பள்ளியின்மேல்திருமால்திருமங்கையோடாடுகிறபடியை*இன்று தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்ளத்தனையுங்கண்குளிரக்காணப்பெற்று,'குளிரருவிவேங்கடத்தென் கோவிந்தன்)என்றும்,(தென்தில்லைச்சித்திரகூடத்தெஞ்செல்வனை மின்னிமழைதவழும்வேங்கடத்தெம்வித்தகனை) என்றும் பொய்யில்பாடலாக ஆழ்வாரருளிச்செய்த பவிஷ்யதர்த்தம்ப்ரத்யக்ஷமாக பலிப்பதே!என்று ஹர்ஷ்டராய்ஸேவித்து, (நற்றிருவாழுந்தில்லை

நாராயணப்பெருமாள்।சித்ரமணிப்பொற்கூடஞ்சேருநாள்। சத்தியமே। நானூற்றின்மேல்வர்ஷம் நான்மூன்றும்சென்றதற்பின்।வானோர்தொழ வாழ்வர்வந்து) என்றும்சொல்லுகிறபடியேஸ்வஸ்த்தாநத்திலேஸுஸ்த்திரராய்த்விகுணமாகவாழும்படிமங்களாசாஸநம்செய்தருளி.

—⁂—

## உடையவர் எழுபத்துநாலுஸிம்ஹாஸநாதிபதிகளுக்கும் அழகியசிங்கரைத்திருவாராதநமாகக்கற்பித்தாரென்பது.

அநந்தரம், * கோவிந்தன்தன்னடியார் * கோவிந்தன்குணம்பாடுவாராய் மங்களாசாஸநம்செய்துகொண்டுபோரும்படிக்கு இளமண்டியத்தையும் க்ரயமாகக்கொண்டு அகரமாக்கி,தம்முடையதிருவடிகளில் ஸம்பந்தமுடையநம்பி, நல்லான்,அநந்தாழ்வான்,எச்சம்பாடிஜீயர்முதலான ஆசார்யபுருஷர்களுக்கு இளமண்டியத்தில் ரஸகண்டமான க்ஷேத்ரங்களும் ப்ரஸாதித்துத் திருவீதியில்கட்டுமனைகளும்ப்ரஸாதித்து அந்தத்திருமாளிகைகளுக்குதிருவாராதநமாக,(அழகியான்தானேயரியுருவன்தானே) என்கிற அழகியசிங்கர்திருக்கோலமும் தீர்த்தநாயனாரும் ப்ரஸாதித்தருளினார். இவர்அடியிலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமைசெய்கையாலுண்டான ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயையுடையவராகையாலே, அசேஷஜநவத்ஸலனான ஸ்ரீமந்நாராயணனைப்ரஸாதித்தருளினார். (వన్దేవరదరాజేనమమనల్లానితిస్మృతమ్| పారమైకాన్తిసంస్కారాత్ప్రఖ్యాతంలోకదేశికమ్) (வந்தேவரதராஜேநமமநல்லாநிதிஸ்ம்ர்தம்। பாரமைகாந்திஸம்ஸ்காராத்ப்ரக்யாதம்லோகதேசிகம்) என்னக்கடவதிறே. அநந்தரம்,இம்மூவர்க்கும்போலே மற்றஎழுபத்தொருமுதலிகளுக்கும் அழகியசிங்கரையேப்ரஸாதித்தருளினார், அதுக்கடியென்னென்னில்; * வளர்ந்தவெங்கோபமடங்கலொன்றாய்விளைந்திடும் சிந்தையராகையாலே ப்ரஸாதித்தருளக்குறையில்லை. அதுக்கடிஎன்னென்னில்;ரஜஸ்தமோமிச்ரமானவிபூதியாகையாலே,(வல்லாளன்மன்னுமணிக்குஞ்சிபற்றிவரவீர்த்து)என்றும், (மலைகீழதுபிளந்தசிங்கம்)என்றும், (இரணியனிலங்குபூணகலம்பொங்குவெங்குருதிப்பொன்மலைபிளந்துபொழிதருமருவியொத்திழியவெங்கண்வாளெயிற்றோர் வெள்ளிமாவிலங்கல்விண்ணுறகனல்விழித்தெழுந்ததங்ஙனேயொக்கவரியுருவானான்)என்றும், (வால்நிறத்தோர்சீயமாய்)என்றும்சுத்தஸத்வமயமான திவ்யமங்களவிக்ரஹமாகையாலே தமஸ்ஸைத்தலைமடியப்பண்ணிரஜஸ்ஸைஆஸநபலத்தாலேகீழ்ப்படுத்திமேல்கொள்ளுமதாகையாலும்,ஆச்ரிதவிரோதிநிரஸநஸமர்த்தமாகையாலும்,(இவையா)இத்யாதிப்படியேஆச்ரிதர்க்கநுபாவ்யமாயிருக்கையாலும்*வளர்ந்தவெங்கோபமடங்கலொன்றாய் அன்றுவாளவுணன், கிளர்ந்தபொன்னாகங்கிழித்தவன்கீர்த்திப்பயிரெழுந்து । விளைந்திடுஞ்சிந்தை இராமாநுசனாகையாலும், *மாறாயதானவனை வள்ளுகிரால்மார்பிரண்டு

கூறுகக்கிழிய கோளரியையிவேறுகவேத்தியிருக்கு மவராகையாலும், தம்முடைய உத்தேச்யவஸ்துவாகையாலும் ப்ரஸாதித்தருளக்குறையில்லை. தமக்கும் ஓர்வெண்ணைக்காடும்பிள்ளையாய்த்துத் திருவாராதநம். ஒரு ஸ்ரீவைஷ்ணவர் சக்ரவர்த்தித்திருமகனைத் திருவாராதநமாகக் கொண்டுவந்துஸமர்ப்பிக்க, “அந்தோ! தேவைபிடாதார்வந்தார்” என்று அவரையும் ஆதரித்தருளி, இப்படிநர்ஸிம்ஹராமக்ர்ஷ்ணர்களையாய்த்து விரும்பியாராதித்துப்போருவது. இப்படிஇவர்களெல்லாரையும் ப்ரஸாதித்து ப்ரதிஷ்டிப்பித்துத்தாமுமங்கேவிசேஷாதிஷ்டாநம்செய்தருளித் திருப்பதியேவிருப்பாகக்கற்பித்தவிவர்களுக்கு அவ்வூராருகாயிருக்கிறபெரியஏரிக்கீழே உடையவர்பட்டடைஎன்று நிரூபகமாம்படியாக க்ஷேத்ரங்களையும்ப்ரஸாதித்து ப்ரஸந்நராகி,



## ஸ்ரீவேங்கடாசலமஹாத்ம்யம்.

அநந்தரம் அநந்தாசலத்தை நிரந்தர்யமான ஆந்தரபக்தியையுடையராய், (திருவேங்கடமடைநெஞ்சமே) என்கிறபடியே திருமலையேறவெழுந்தருளத்திருவுள்ளமாய், அடிவாரத்தில்சென்று அங்கேகுடியாகவிருக்கிறபராங்குசபரகாலாதிகளை ஸேவித்து, அநந்தரம் அவர்களநுமதியுடனே திருமலையாழ்வாரருகேசேர்ந்து (చిన్తితస్య తు సిద్ధ్యర్థం చిన్తామణిమిమం జగుః । కేచిజ్జ్ఞానప్రదత్వాచ్చ జ్ఞానాద్రిరితి తం విదుః ॥ సర్వతీర్థమయత్వాచ్చ తీర్థాద్రిం ప్రాహురుత్తమాః । పుష్కరాణాం చ బాహుళ్యాత్ గిరావస్మిన్ సరస్సు చ ॥ పుష్కరాద్రిం ప్రశంసన్తి మునయస్తత్త్వదర్శినః । గిరావస్మిన్ తపస్తేపే ధర్మోఽపి స్వాభివృద్ధయే ॥ తస్మాదాహుర్వృషాద్రిం తం మునయో వేదపారగాః । శాతకుమ్భస్వరూపత్వాత్ కనకాద్రిం చ తం విదుః ॥ ద్విజో నారాయణః కశ్చిత్ తపః కృత్వా మహత్పురా । ఐచ్ఛదస్య స్వనామ్నా చ వ్యపదేశం మురారితః ॥ వైకుణ్ఠాదాగతత్వేన వైకుణ్ఠాద్రిరితి స్మృతః । హిరణ్యాక్షవినాశాయ ప్రహ్లాదానుగ్రహాయ చ ॥ నారసింహాకృతిర్జ్ఞే యస్మాదస్మిన్నాయాద్ధరిః । సింహాచల ఇతి ప్రాహుస్తస్మాదేనం మునీశ్వరాః ॥ అఞ్జనాత్ర తపః కృత్వా హనూమన్తం వ్యజాయత । తదా దేవాస్సమాగమ్య దేవసాహాయ్యకారకమ్ ॥ యస్మాత్పుత్రమసూతాసౌ జగుస్తస్మాదయం గిరిః । అఞ్జనాద్రిం వరాహాద్రిం వరాహక్షేత్రలక్ష్మతః ॥ నీలస్య వానరేన్ద్రస్య యస్మాన్నిత్యమవస్థితిః । తస్మాన్నీలగిరిం నామ్నా వదన్త్యేనం మహర్షయః ॥ వేఙ్కారోఽమృతబీజం తు కటస్త్వైశ్వర్యముచ్యతే । అమృతైశ్వర్యసంఘత్వాద్వేఙ్కటాద్రిరితి స్మృతః । అయం కదాచిద్దేవానాం శ్రీనివాస ఇవాబభౌ ॥ శ్రీనివాసగిరిం ప్రాహుస్తదా దేవా దివౌకసః । ఆనన్దాద్రిమిమం ప్రాహుర్వైకుణ్ఠపురవాసినః ॥ ప్రాహుర్భగవతః క్రీడాప్రాచుర్యాత్తు తథాసురాః । శ్రీప్రదత్వాచ్ఛ్రియో వా సాచ్ఛబ్దశక్త్యా చ యోగతః ॥ రూఢ్యా శ్రీశైల ఇత్యేతత్ నామ చాస్మిన్గిరావరే । బహూని చాస్య నామాని కల్పభేదాద్భవన్తి హి ॥ యావన్తోఽత్ర భగవతః కల్యాణగుణరాశయః । తావన్తోఽస్య గిరేస్సన్తి గుణాః పరమపావనాః ) என்னும்படி

புராணோக்தமான திருமலையாழ்வார்திருநாமப்பெருமைகளையெல்லாம் திருவுள்ளத்திலேபராமர்சியாநின்றுகொண்டுபெரியவேத்தலருகேசென்றுஸேவித்து, (தண்ணார்வேங்கடவிண்ணோர்வெற்பு) என்றும், (விண்ணுளார் விண்ணின்மீதியன்றவேங்கடம்) என்றும் சொல்லுகிற *விண்ணார்நீள்சிகரங்களையும் * அண்ணார்ந்துபார்த்துக்கொண்டு அபூர்வாச்சர்யத்துடனே * ஏவம்வித்பாதேநாத்யாரோஹதிப்படியே ப்ரதிபத்திபண்ணிக்கொண்டுமெள்ளவேறி அங்குள்ளபக்ஷிஸங்கங்களையும், வ்ருக்ஷஸங்கங்களையும்கண்டுகளித்துக்கொண்டு கர்ப்பூரக்கல்லிலேகண்டுஷாதிகளையும்செய்து இடையிலமண்டபங்களிலேவிடாயாறிவிச்ரமித்து, * தென்னாதெனாவென்று வண்டுமுரலுகிறபாட்டுக்களையும், * பாடுங்குயில்களின்பாட்டுக்களையும்கேட்டுக்கொண்டு, அங்குண்டான் *குன்றுடுகொழுமுகில்களையும், அவற்றைக்கண்டொலியா * நின்றுடுகணமயில்களையும், * கடாக்ஷியாநின்றுகொண்டு, * திண்ணார்மேகமென்க்களிறு சேரும்படியையும், *மதயானைபோலெழுந்தமாமுகில்களையும், அத்தோடொத்து அங்கிருக்கிற * காரகிற்புகைகளையும்கண்டுகொண்டு சீரார்திருவேங்கடமாமலையின் ஊரருகேசெல்ல;

—✻—

ஏகாங்கிஸ்ரீவைஷ்ணவர்கள்முதலானோரெதிர்கொள்ளமலைகுனியநின்றான்முதலியதிருநந்தவநங்களையும், ஞாநப்பிரான்முதலானோரையும் ஸேவித்து உள்ளேசென்றது.

அவ்வளவில்அங்குண்டானஏகாங்கிஸ்ரீவைஷ்ணவர்கள், பிள்ளை, திருமலைநம்பி, அநந்தாழ்வான்தொடக்கமானஅனைவரும்எதிர்கொண்டுஸேவிக்க, அவர்களை (மேலாத்தேவர்) என்றும் (நிகரிலமரர்முனிக்கணங்கள்) என்றும்விரும்பியருளிஅவர்களுடனேகூடச்சென்று*திருவேங்கடமலைகோயிலையும் அதின்வாயில்களையுந்தொழுது ஸம்ப்ரீதராகவருகிறவர், மலைகுனியநின்றான், திருவாழிபரப்பினான், பங்கயச்செல்வி, திருமலைநம்பி, திருமழிசைப்பிரான், திருவேங்கடத்துநின்றான், வண்சடகோபன், இராமாநுஜன்திருமாலிருஞ்சோலை, பேரருளாளன், அழகியமணவாளன், ஸ்ரீராமாநுஜன், ஹரிஶரணாலயன், ஸ்ரீபுண்டரீகன், திருப்பேர்நகரான் தொடக்கமான அநேகம்திருநந்தவநங்களையும் திருப்பூமண்டபங்களையும் ஸேவித்துவிஸ்மிதராய், அவற்றில் * தென்னங்குலையில் பழம் நழுவிச் சிறந்தகமுகின்தாறிணங்கிச்செய்ய பலவின்கனிசிந்தத்துச் சிறந்தனார்த்தைக்கனியுதிர்த்து, மன்னுங்கதளிக்குலையொடித்துமதமாறிஞ்சிக்கணுமுறித்து, மற்றுங்கிடங்கில் குதித்துலவும்வள்த்தால்மிகுந்தவட்மலையிலுண்டான் வண்டுகளைக்கண்குளிரஸேவித்து * வையம்முற்றுமேனத்துருவாயிடந்தபிரானை ஞானப்பிரானையும்ஸேவித்துத் திருக்கோனேரியில் தீர்த்தஸ்வீகாரமும்செய்தருளித் திரளுடனே

உள்ளேபுக்குபூர்வக்ரமத்திலேஎங்கும்ஸேவித்துஸந்நிதியிலேசென்று; *கள்ளத்தால்மாவலியை மூவடிமண்கொண்டளந்தான்வெள்ளத்தான் வேங்கடத்தானையுந்திருவடித்தொழுது,(உள்ளத்தினுள்ளேயுளன்)என்று ஹார்த்யமாக்வநுபவியாநின்றுகொண்டு;

—⁂—

உடையவர்திருவேங்கடமுடையானை திருமுடிமுதல்திருவடிக்களளவும் ஒவ்வொருஅவயவங்களையும் தனித்தனியே யநுபவித்தது.

*தாராருநீண்முடியையும்,*கார்மேனிச்செங்கட்கதிர்மதியம்போல் முகத்தையும், அதற்கநுரூபமான * ஏரார்ந்தமகரகுண்டலங்களுடனேகூடின திருக்காதுகளையும், * காரார்திருமேனியையும், அதுக்கு ப்ரபாகாவஹமான * கூரார்ாழியையும்,*சீரார்வலம்புரியையும்,* வலமார்பினில்வாழ்கின்றமங்கையையும்,வலம்புரிநூலையும்,*அலங்கல்தொடையலையும்,அணிகலன்களையும், * செவ்வறத்தவுடையர்டையதன்மேலோர்சிவளிகைக்கச்சையும்*கச்சொடுபொற்சுரிகையையும், நிச்சலும் காணும்படியானநீள்கழல்களையும், இன்னமும்திவ்யாவயவங்களோடேகூடியிருப்பதானகிரீடமகுடமாகிற * மின்னுமாமணிமுடியையும், ஆகமாகிறதிருநெற்றிக்கட்டுக்குமேலானதாய் சூடாமணியோடேகூடித்திருச்சூட்டுப்போலே யிருப்பதொருதிருவாபரணவிசேஷத்தையும், அவதம்ஸமாகிற திருச்செவிப்பூவையும், அதுக்குக்கீழாய் மின்னுமாமணிமகரகுண்டலங்களையும், * க்ரைவேயகமாகிறத்ரிஸரமாய் * முத்தும் மணியும் வைரமும்மரகதமும்தெற்றியிருப்பதானஉள்திருக்கட்டுவடத்தையும், ஹாரமாகிற*குளிர்முத்தின்கோடாலமும், கேயூரமாகிறதோள்வளையும், கடகமென்கிறமுன்கைவளையையும், ஸ்ரீவத்ஸமென்கிற*மார்வில்திருமறுவும், கௌஸ்துபமென்கிற திருமாமணியும் முக்தாதாமமென்கிறமுத்துத்தாமமும், பீதாம்பரமென்கிறபீதகவாடையும், காஞ்சீகுணமென்கிற * வீடுநாணும்பட்டுநாணும், நூபுரமென்கிறசிலம்பும், அத்தோடேகூடின செறிகழலுமானவற்றோடேகூடினசேவடியும், அபரிமிததிவ்யபூஷணமாகிற பலபலவேயாபரணத்தோடேகூடியிருக்கிறபடியையும், கிரீடாதிநூபுராந்தமாக ஸ்வஸூக்திப்படியே பெருக்கவநுபவித்து, * சீதக்கடல்தொடங்கி, * செங்கமலக்கழலில்படியே பதாதிகேசாந்தமாகவுமநுபவித்து, * (ஶ்ருதிஶிரஸி விதீப்தே ப்ரஹ்மணி ஶ்ரீநிவாஸே) (சுருதிஶிரஸி விதீப்தேப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே) என்று * வேங்கடமலைமேவிய *வேதநல்விளக்கான * நலங்கொண்டநாரணனை வேதாந்ததீபமுகத்தாலேகண்டநுபவித்து, * நாற்றேளமுதான * சீரார்திருவேங்கடமாமலைமேய ஆராவமுதேதாரகமாகநிரவதிகாநந்தயுக்தராயிருக்க;

—⁂—

14-11-86.

## திருமலையின்வளப்பம்.

அவ்வளவிலே தீர்த்தம் சடகோபன் பூவார்கழல்கள்பரியட்டந் தொடக்கமானவரிசைகளையும்ப்ரஸாதித்துவிடைகொடுத்தருள, விடைகொண்டுநின்று (శ్రీమాన్ వృషాచలపతేయదిదంత్వదీయం దివ్యం వపుర్నయనయోరమృతాంజనం మే । ఏవం సమగ్రమణిభూషణమాల్యమేతత్ పూర్వేసతో పిహృదిసన్నిహితం సమిద్ధం । (ஸ்ரீமாந் வ்ர்ஷாசலபதேயதிதம்த்வதீயம்திவ்யம்வபுர்நயநயோரம்ர்தாம்ஜநம்மே। ஏவம்ஸமக்ரமணிபூஷணமால்யமேதத்பூரேஸதோபிஹ்ர்தி ஸந்நிஹிதம்ஸமிந்தாம்) என்கிறபடியைத்திருவுள்ளத்திலேதேக்கிக்கொண்டு முதலிகளுடனேபுறப்பட்டருளி, இப்பால் அவ்விடத்தில் * காணலுறுகின்றேன் கல்லருவிமுத்துதிரஓணவிழவிலொலியதிரும்படியையும், * படையாரும்வாட்கண்ணார்பாரசிநாள்பைம்பூந்தொடையலோடேந்தியதூபப் புகையையும், (விண்ணெடுங்கக்கோடுயரும்) என்று அதிலேசூகிக்கிற * வீங்கருவிகளுடையத்வநியையும், *சார்ந்தகடுதேய்ப்பத்தடாவியகோட்டுச்சிவாயூர்ந்தியங்கும்வெண்மதியினெண்முயலைச்சேர்ந்துசினவேங்கைபார்க்கும்படியையும், (பார்த்தகடுவன்) இத்யாதிப்படியே * கார்த்தகளங்கனிக்குக் கைந்நீட்டும்படியையும், * முடிந்தபொழுதிற்குறவாணரேனம்படிந்துழுசால்பைந்தினைகள் வித்ததடிந்தெழுந்தவேய்ங்கழைபோய்விண்திறக்கும்படியையும், *குரவைமாதர்களோடு வண்டுகுறிஞ்சி மருளிசைபாடும்படியையும் கண்டுகேட்டாஸ்சர்யப்பட்டு, (வேங்கட முன்றனக்கெத்தனையின்பந்தரும்) என்னும்படி ஆநந்தத்தையுடையராய், அங்குநின்றுமிறங்கியருளி அடிவாரத்தில் *வன்குன்சிமயத்தையுடையதிருமலையாழ்வாரையும்திருவடித்தொழுது கோவிந்தராஜனையும்ஸேவித்து ஸ்ரீகார்யமெல்லாமாராய்ந்து, தத்பரிசாரகராய் கூடஸேவித்துக்கொண்டுவந்தஅனைத்துபரிகரத்தையும் தத்தத்பரிசர்யங்களையமாக தத்விஷயத்திலே செய்துகொண்டுபோரும்படி தத்ஸந்நிதிவீதிதொடக்கமானஸ்த்தலங்களிலே ஸ்த்தாபித்து, திருப்பணிதிருவாராதநந்தொடக்கமானவைநடத்தும்படிதொண்டனுயாதவராயனைக்கொண்டுகொத்துப்படுத்தி, அநந்தரம் ஸ்ரீரங்கராஜநுடைய ஸ்ரீகார்யம்விசாரிக்கவேண்டுமென்றுபுறப்பட்டருளி ஸ்ரீரங்காபிமுகராய்ப்போகிறவர், (பொன்னும்பொன்னிகொணர்ந்தலைக்கும்) என்கிறபடியே, ஸ்வர்ணமுகியாய்*வடதிருவேங்கடநாட்டைப்பொன்விளைந்துவாழ்விக்கிறவாற்றையுங்கடந்து, * (திருமலைக்குப்புறமலையாய்ப்போவியாய்க்கடல்கொண்டவர்களுக்குக் காட்சிகொடுத்து) என்னும்படியானமலையருகில் ஆரணியாற்றங்கரையான நாராயணபுரம்வழியாகவெழுந்தருள; (కుశస్థలేనివసతిసప్రాతర్హాస్యతి) (குஶஸ்த்தலேநிவஸதிஸசப்ராதர்ஹாஸ்யதி) என்கிறபடியே குசஸ்த்தலீபரிஸரத்திலேவழிப்பட்டே

ழுந்தருளி, அநந்தரம் காஞ்சீநகரத்திலே வாஞ்சையுடையராய்ப்போந்து திருக்கச்சித் திருவத்தியூர்நின்றசிங்கப்பெருமாளையும், திருக்கச்சிநம்பிபுருஷகாரமாகஸேவித்து, மற்றுஞ்சுற்றிலுண்டானதிருப்பதிகளையுஞ்ஸேவித்து,

—※—

உடையவர் அழகியமணவாளனை மங்களாசாஸநஞ்செய்தருளியது.

அநந்தரம், (ஶ்ரீமத்³ரங்க³ம் மஹத்³தா⁴ம) (ஸ்ரீமத்ரங்கம் மஹத்தாம) என்றுசொல்லப்படுகிற பெரியகோயிலேற வெழுந்தருளுவதாகப் புறப்பட்டுஜந்மபூமியைவிட்டகன்று கோயிலைநோக்கிஆவலுடனே யெழுந்தருளிஆயனையும் ஆழ்வார்கள்நாயனாரையும்ஸேவித்து.(கோவலுலகளப்பானடிநிமிர்த்தவந்தணனை யான்கண்டதணிநீர்த் தென்னரங்கத்தே) என்கிறபடியே காண்பாராய்வழியிலுண்டானபலவாறுகளையுங்கடந்து அநந்தரம்திருவெள்ளறையிலேஎழுந்தருளி, அங்கேபங்கயச்செல்வியார்ப்ராதாந்யத்தைப்பற்ற (ஶ்ரீம் ஶ்ரியை நம:) (ஸ்ரீம்ஸ்ரியைநம:) என்றுஸேவித்துப்பின்பு அவள்புருஷகாரமாகச்செந்தாமரைக்கண்ணரையும்ஸேவித்துஇப்படியே (மாமலராள்புணர்ந்தபொன்மார்பன் பொருந்தும் பதிதொறும்புக்குநிற்கும்)என்னும்படி எங்குஞ்ஸேவித்து*வண்பொன்னிப்பேராற்றருகிலே*கரம்பனூர் உத்தமனையும்ஸேவித்துஅந்தக்காவேரீதீரமானஅவ்விடத்து, (அன்னம்மலராசனத்திருப்பவண்டினமிசைகள்பாடசின்னமாமயில்கணடநஞ்செய்ய, குணமாகக்கோகிலங்கள்கொண்டாடக்கொண்டல்முழவதிர கனகமிகுபொன்கள்நயந்தளிர்ப்ப, பூகம்மிகும் சோலைதலையசையச், சொல்லரியவண்மைமிகுமாலைவயல்களையுங்கண்டுகளித்துக்கொண்டு * வண்டுபாடும்மதுவார்புனல்வந்திழிகாவிரியிலேயிழிந்துபொன்னிநதியிலேசென்னிக்கபிஷேகம்செய்தருளி, பன்னிருநாமம்பரிவுடனேசாத்திமன்னித்ததீயர்மகிழ்ந்துஸேவிக்க*பொன்னுமாமணியும்முத்தமும்சுமந்துபொருதிரைமாநதிபுடைசூழ்ந் தன்னமாடுலவுமலைபுனல்சூழ்ந்த வரங்கமாநகரமர்ந்தானையடைவேசென்றுஸேவித்து, * உலகமளந்தபொன்னடியையும்,*பொன்னிறவாடையையும், * முத்திலங்கு காரார்திண்கடலேழுமலையேழு முலகேழுமுண்டாராதென்றிருந்த * ஏரார்வயிற்றையும், * அம்மானறன்மலர்க்கமலக்கொப்பூழையும், (திருவாரமார்பன்) என்னும்படி அவற்றூடே யொருகோவையான * அல்லிமாதரமரும் திருமார்பையும், உபாதாநமாகவும், ஆதிராஜ்யஸூசகமான திருவபிஷேகத்தை சேஷித்வஸம்பந்தந்தோற்றத்தொட்டுக்காட்ட மடித்ததிருக்கையையும், சேஷபூதனுக்குத் திருவடிகளே உபாயமாகக்காட்டிநீட்டி அந்தத் திருவடிகளின்நேரேபோகட்டதிருக்கையையும், * அண்டமெல்லாமுண்டவரங்கனார் திருக்கண்டத்தையும், * களிமலர்சேர்பொழிலரங்கத்துரகமேறிக் கண்வளருங்கடல்வண்ணர் குழலக்கண்ணும் ஒளிமதிசேர்திருமுகத்தையும், * மன்னுங்கதிர்முற்று

வெண்ணகைச் செய்யவாயையும், * ஆயசீர்முடியையுமநுபவித்து, (முடியானேமூவுலகுந்தொழுதேத்துஞ் சீரடியானே) என்கிறபடியே, திருவடிக்கீழேநின்று, "பின்னையென்றும்நின் திருவடிப்பிரியாவண்ண மடிமைகொண்டருளவேணும்,, என்றுவிண்ணப்பஞ்செய்ய; பெரிய பெருமாளும் உடையவரைக்கடாக்ஷித்து, அப்படியே (பிரியாதாள் செய்) என்னும்படியே பிரியாதஅடிகொண்டருளும்படி நம்முடைய பெரியகோயிலிலே பிரியாமலிருமென்று வரிசையுடனே வாழ்வித்து மடமேபோய் ஸுகமேயிருமென்று விடைகொடுத்தருளவெழுந்தருளி; (வையம்மன்னிவீற்றிருந்து) என்றும், (எல்லாருந்தொழுதெழவீற்றி ருப்பாரே) என்றும்சொல்லுகிறபடியே*சீரியசிங்காசனத்திலே சிஷ்ய வர்க்கங்களெல்லாரும் ஸேவிக்கவீற்றிருந்துவாழ்ந்தருளினார்.

(இன்னவாறு திருப்பதிகளெங்கும் வாழ்வித்தெதிராசன் । தன் னதாக்கித்தரிசநமுந்தரணியெங்கும் விளங்குவித்து। முன்னமுரைத்த பாடியத்தின்முற்றமூன்றத்தொருகூறு ।தன்னைச்சென்றுண்டாயிரத்தாங் கெழுபத்தேழில்சாத்தினன்) என்கிறபடியே சேஷித்த பாஷ்யத்தில் த்ரிஷ்வைகபாஷ்யத்தையும் பூஷித்துத் தலைக்கட்டியருளினார். அத்தை ப்பற்ற ( యోబాహ్యసిద్ధాన్తకుదృష్టిదృష్టాన్ విచిన్త్యవాదాన్ వితతాన భాష్యమ్, శేషావతారందయయాతిపూర్ణం రామానుజంతంమునిమాశ్రయామః) (யோபாஹ்ய ஸித்தாந்தகுத்ர்ஷ்டித்ர்ஷ்டாந் விசிந்த்யவாதாந்விததாந பாஷ்யம்; ஶேஷாவதாரம் தயயாதிபூர்ணம் ராமநுஜம் தம் முநிமாஶ்ரயாமஃ) என்றும், ( వేదార్థస్యచసఙ్గ్రహంమృదుపదంవేదాన్తదీపంతథా వేదాన్తస్యచసారమర్థగహనం శ్రీభాష్యమత్యద్భుతమ్ । గీతాభాష్యమపిప్రపత్తివిషయేగద్యత్రయంచాకరోత్ నిత్యంలక్ష్మణలక్షణాయమునయేతస్మైనమస్కుర్మహే ) (வேதார்த்தஸ்யசஸங்க்ரஹம் ம்ர்துப தம் வேதாந்ததீபந்ததா வேதாந்தஸ்யசஸாரமர்த்தகஹநம் ஸ்ரீபாஷ்ய மத்யத்புதம் । கீதாபாஷ்யமபிப்ரபத்திவிஷயே கத்யத்ரயஞ்சாகரோத் நித்யம் லக்ஷ்மணலக்ஷணாயமுநயே தஸ்மைநமஸ்குர்மஹே என்றும், (చిదచిత్పరతత్త్వానాం తత్త్వయాథాత్మ్యదర్శినే । రామానుజాయమునయేనమోమమ సర్వదా)(சிதசித்பரதத்வாநாம் தத்வயாதாத்ம்யதர்ஶிநே।ராமாநுஜாயமுந யேநமோஸ்துமமஸர்வதா) என்றும், అర్థంతంతమనర్థరూపమసకృత్సన్దర్శ్యము గ్ధైర్హృతా నిత్యంతైరపిదుర్గ్రహస్వహృదయావేశ్యాస్వదేశ్యాత్రయీ । యస్మిన్నవ్యభిచారిణీ స్వహృదయం సన్దర్శ్యపాతివ్రత్యంధత్తేలక్ష్మణలక్షణాయమునయే తస్మైనమస్కుర్మహే) (அர்த்தந்தந்தமநர்த்தரூப மஸக்ர்த்ஸந்தர்ஶ்யமுக்த்தைர்ஹ்ர்தாநித்யந் தைரபிதுர்க்க்ரஹஸ்வஹ்ர்தயாவேஶ்யா ஸ்தேஶ்யாத்ரயீ । யஸ்மிந்நவ்ய பிசாரிணீஸ்வஹ்ர்தயம் ஸந்தர்ஶ்யபாதிவ்ரதம் தத்தே லக்ஷ்மண லக்ஷண யமுநயேதஸ்மைநமஸ்குர்மஹே) என்றும்,(తస్మైరామానుజార్యాయనమఃపరమ యోగినే। యశ్శ్రుతిస్మృతిసూత్రాణాం అన్తర్జ్వరమశీశమత్ ॥ జగతామపకారాయ

జాతంయతివరాత్మనా। ప్రగుణీకృతవేదాన్తంభజామఃపురుషంపరమ్) (தஸ்மைராமாநுஜார்யாய நமஃபரமயோகிநே। யஶ்ஶ்ருதிஸ்ம்ருதிஸூத்ராணாம் அந்தர்ஜ்வரமஶீஶமத்! ஜகதாமுபகாராயஜாதம்யதிவராத்மநா ப்ரகுணீக்ருத வேதாந்தம்பஜாமஃ புருஷம்பரம்) என்றும், (రామానుజమునిర్జీయాద్యోహరే ర్భక్తియన్త్రితః। కలికోలాహలక్రీడాముఖాగ్రహమపాహరత్) (ராமாநுஜமுநிர் ஜீயாத்யோஹரேர்ப்பக்தியந்த்ரிதஃ। கலிகோலாஹலக்ரீடாமுகாக்ரஹமபாஹரத்) என்றும், (సూత్రాణిప్రణినాయ వేదశిరసాం ద్వైపాయనః ప్రాఙ్మునిః వ్యాఖ్యాతశ్చశఠద్విషాద్రమిడవాక్ వృత్త్యాతదన్తస్స్ఫుటమ్। చక్రేమర్కటహస్తమాల్యమపరైర్యస్తన్నిరస్యంస్తయోః ద్వౌగ్రన్థౌసమజీఘటచ్చజయతిశ్రీమాన్సరామానుజః॥ సైసపాదపదవిన్యాసపాదన్యాసైశ్చపావనైః। రామానుజమునీనాంతుభువంవాణీవసున్ధరా) ஸூத்ராணிப்ரணிநாத வேதஶிரஸாம்த் வைபாயநஃப்ராங்முநிஃ வ்யாக்யாதஶ்ச சடத்விஷா த்ரமிட வாக்வ்ர்த்யாததந்தஸ்புடம்। சக்ரேமர்கடஹஸ்தமால்யமபரைர்யஸ்தந்நிரஸ்யம்ஸ்தயோஃ த்வௌக்ரந்தௌ ஸமஜீகடச்சஜயதிஶ்ரீமாந்ஸ ராமாநுஜஃ॥ ஸபாதபதவிந்யாஸபாதந்யாஸைஶ்ச பாவநைஃ। ராமாநுஜமுநீநாந்துத்ருவம் வாணீவஸுந்தரா என்றும், (వేదాజాతప్రమోదాస్తదవయవచయస్సేతిహాసస్సహాసః ప్రాప్తంప్రాణంపురాణంస్మృతిరహతగతిర్న్యాయసీన్యాయసీమా। మీమాంసాసప్రశంసాపరమతనిరతావాదినోవాదినోస్యేజాతేరామానుజార్యేజగదుపకృతయేకించధన్యావయఞ్చ) (வேதாஜாதப்ரமோதாஸ்ததவயசயஸ்ஸேதிஹாஸஸ்ஸஹாஸஃப்ராப்தம்ப்ராணம்புராணம்ஸ்ம்ர்திரஹதகதிர்ஜ்யாயஸீந்யாயஸீமா। மீமாம்ஸாஸப்ரஶம்ஸாபரமதநிரதாவாதிநோபதிநோஸ்யேஜாதே ராமாநுஜார்யேஜகதுபக்ர்தயேகிஞ்சதந்யாவயஞ்ச) என்றும். இப்படி இவர்ஸ்ரீபாதத்தில்பக்தியுக்தரானவர்கள் பாஷ்யநிகமநவைபவத்தை பஹுமுகமாக ஸ்துதித்து அநுபவித்த அநந்தரம் ஸ்ரீபாஷ்யகாரரும் விஶேஷித்து ஶேஷசாயியான பெரியபெருமாள் ஸந்நிதியிலேசென்று, అశేషచిదచిద్వస్తుశేషిణేశేషశాయినే। నిర్మలానన్తకల్యాణనిధయేవిష్ణవేనమః) (அஶேஷசிதசித்வஸ்துஶேஷிணே ஶேஷஶாயிநே। நிர்மலாநந்தகல்யாணநிதயேவிஷ்ணவேநமஃ) என்று தொடங்கி பஹுமுகமாகபாஷ்யப்ரமேயங்களைத்விஷயமாக உபந்யஸித்துக்கொண்டுநிற்க ;

---

நம்பெருமாள்நியமநப்படி உடையவர்க்கு சதகலசாபிஷேகம்பண்ணி அலங்கரித்து ப்ரப்ஹாரத்திலேதிருவீதிவலம்வந்து "உபய விபூதிநாதர்" என்று பட்டாபிஷேகமும், பட்டர்க்கு யுவராஜபட்டாபிஷேகமும் செய்தது.

பெருமாளும், ஸ்வவிஷயமான ஸ்ரீபாஷ்யத்தைசேகரித்தருளின

படியைச்ரவித்தருளிப்போர உகந்து ,இவர்க்கு சதகலசாபிஷேகபூர்வகமாகப்ரஹ்மரதம்பண்ணியுபலாளிக்கும்படி அனைத்துபரிகரத்தையுமாக்ஞாபித்தருளி இவர்க்குபரியட்டமும்திருமாலைமுதலானவரிசைகளும் ப்ரஸாதித்து ப்ரீதியுடனே அனுப்பியருள ; அநந்தரம், அந்த அநுமதியை அவமதிபண்ணுதேஸவிநயராய்முநிவாஹநரைப்போலேநினைத்துதாமும்நிர்மமராயிருக்க; அவ்வளவிலே அங்குத்தைக்கு அதிசயாவஹராய் அத்யந்தம்அந்தரங்கரான கந்தாடையாண்டான் தொடக்கமான முதலிகளெல்லாரும் இவரைஸத்காரம்செய்கையிலே ஸாவகாசராய்ப்பெருமாளருள்பாட்டைக்கேட்டு, மிகவும் ஹ்ர்ஷ்டராய் ஸ்ரீபாஷ்யகாரர் வைபவத்தைசிஷ்யர்களானநாம், (గురుం ప్రకాశయేత్) (குரும்ப்ரகாஶயேத்) என்றும், (ప్రత్యక్షగురవస్తుత్యాః) (ப்ரத்யக்ஷகுரவஸ்துத்யா:) என்றுஞ்சொல்லுகிறபடியே-ஆசார்யவைபவத்தை*நாடும்நகரமும்நன்கறியும்படி நகரிவலமாக ப்ரஹ்மரதம்பண்ணிஎல்லாருமறியும்படிஎழுந்தருளப்பண்ணவேணுமென்று அறுதியிட்டு பெருமாள்நியமநத்தின்படி செய்வாராய் சக்ரவர்த்தித்திருமகனை பெருமாள்திருவபிஷேகத்துக்கு மாருதிமுதலானமுதலிகள், *நாற்றிசைத்தீர்த்தங்கொண்டுவந்தாப்போலே,*தோதவத்தித்தூய்மறையோர் துறை, தவராஜன்துறை.திருமுகத்துறைமுதலானதுறைதோறும் * கங்கையில்புநிதமாய், விரஜாஸமையானகாவேரியில் திருமஞ்சநத்தை மாருதியாண்டான் தொடக்கமானமுதலிகள் பலகுடங்களிலேகொண்டுவந்து * கடாரத்தைப்பூரித்து * அன்பினால் ஞாநநீர்கொண்டாட்டுவாராய், (రామం రత్నమయే పీఠే సహసీతం న్యవేశయత్) (ராமம்ரத்நமயேபீடேஸஹஸீதம்ந்யவேஶயத்) என்கிறபடியேஒருதிவ்யஸிம்ஹாஸநத்திலே யெழுந்தருளப்பண்ணுவித்து, * மெய்திமிருநானப்பொடியாலே நிலங்குக்காப்புச்சாத்தித் திருவடிகளைவிளக்கி, ஷோடசோபசாரமுமடைவேநடத்தி,அருகில்கடாரத்தில் சுத்தோதகத்திலே ஸுகந்தத்ரவ்யங்களையும், துளஸீதளங்களையும்பரிமாறி கலசங்களிலும் கலசப்பானைகளிலும்பூரித்து அத்தைதரித்துக்கொண்டுநின்று, தக்காலோசிதமாக, (குத்திரப்பரசமயநிரசநத்தால்வந்தகொடுவிடாய் தீருகைக்கோ கூற்றப் பெருங்கலியைமாற்றிப்புகட்டகொடுஞ்சந்தாபமாறுகைக்கோ, மர்த்தளத்தோடுமுரசுடக்கை மல்லாரிபேரிகைகள் திமித்மெனவே வவானவர்கள்மலர்தூவவாவலொடுகின்நரர்கள் தனதனவென்றேத்தவே, எத்திசையுமெண்ணிலெழுபத்துநால்வருடனே யெந்தைகந்தாடையாண்டான் எப்பொழுதுமினிதாக வேற்றகைங்கர்யங்கள் செய்திணையடிதொழுதேத்தவே, பத்தியுடையடியவர்கள்சுற்றிநீராகவேபண்ணும்பரந்தாமனே பரவாதிமத்தகஜ பஞ்சாநநப்பெரியபாபாத்ரிவஜ்ராயுதா, முறித்தனைவித்தாரமாவருளண்ணலே முடிமன்னர்பணிபாதனே, முரவைரிபரனென்றவெதிராசனேநீரிங்நின்ற திருமஞ்சனம்செய்வதே) என்று அபியுக்தோக்திகளான திருமஞ்சநக்கவியும்,

மற்றும் திருமஞ்சநச்லோகமும்ஸேவிக்க, ஸ்ரீபுருஷஸூக்தத்தாலும், த்வயாநுஸந்தாநத்தாலும் ஆழ்வார்கள்ஸ்ரீஸூக்த்யநுஸந்தாநத்தாலும் விஶேஷமாகஅலங்காரத்திருமஞ்சநம்பண்ணி, பெருமாளுக்குவீராபிஷேகங்கொண்டருளப்பண்ணினப்போலே இங்கும்பரமஸமயிகளை ஸ்ரீபாஷ்யஸூக்திஸூஸ்த்ரங்களினுலேநிரஹித்தமைக்கு இருவகையானதிருவபிஷேகங்கொண்டருளப்பண்ணி, இப்படி மந்த்ரபூதஜலத்தாலே மந்த்ரஜ்ஞரானவர்களெல்லாரும் தந்த்ரத்தின்படியே உபயவிபூதிக்கும் நாதராகயதிராஜரான்விவரை திருவபிஷேகம்பண்ணினவநந்தரம் திருவயோத்யையிலே பெருமாள்திருவபிஷேகத்துக்குப்பின்பு, ஸ்ரீபரதாழ்வானுக்கு யுவராஜபட்டங்கட்டினப்போலே இங்கும்பட்டர்க்கு யுவ்ராஜபட்டங்கட்டினார்கள்.

எம்பெருமானரைத் திருவபிஷேகம்பண்ணின வநந்தரம், திருவொற்றுவாடைசாத்தி அஞ்சிதமானகாஷாயத்திருப்பரியட்டத்தையும் திருவரையிலேரஞ்ஜிதமாம்படிசாத்தி, காஷாயவிரசிதமானகௌஶேயோத்தரீயத்தையுஞ்சாத்தி, அநந்தரம் ருசிரதரமானத்வாதசோர்த்வபுண்ட்ரங்களைச்சாத்தி, அநந்தரம் * அரங்கத்தம்மானரைச்சிவந்தவாடையான (உடுத்துக்களைந்தநின் பீதகவாடையுடுத்து) என்கிறபடியே அத்தைசிரோபூஷணமாகச்சாத்தி வகுளதுளஸீநளிநாக்ஷமாலைகளையும், பெருமாளுடையப்ரஸாதமான * மங்கலநல்வனமாலைகளையும் திருமார்பிலேசாத்தி, அநந்தரம்ப்ரணவாகாரமானதொருதிவ்யவிமாநத்திலேசுபாஸ்தரணத்தோடேகூடினஆஸநத்திலேஎழுந்தருளுவித்து, * சிற்றெயிற்றுமுற்றல் மூங்கல்மூன்று தண்டரான எழுநூறுஜீயர்கள் ஜயஶப்த்தத்தைகோஷித்துக்கொண்டு ஆநந்தத்துடனே யதிராஜராஜராய் யதிசூடாமணியாயிருக்கிறவிவரை (நாராயணபரம்ப்ரஹ்ம) (நாராயணபரம்ப்ரஹ்ம) இத்யாதிவாக்யத்தாலே பரப்ரஹ்மத்தைஸாதித்தபடியாலே, (நுங்கால்களெந்தலைமேல்) என்று ப்ரஹ்மரதம்பண்ணி ஸ்ரீபாதந்தாங்கிக்கொண்டுசெல்ல ; அநந்தரம் எழுபத்துநாலுமுதலிகளான ஆசார்யபுருஷர்கள் அங்குத்தைக்குசாத்ரராகையாலே, கைங்கர்யோபகரணமான சத்ரசாமரதால்வ்ருந்தப்ருங்காரபதத்க்ரஹபதாகாபாதுகாதிகளை தரித்துக்கொண்டுசெல்ல, மற்றுண்டான சாத்தினசாத்தாதமுதலிகளாயுள்ள அனைவரும் நூற்றந்தாதியநுஸந்தாநத்துடனே நடவாநிற்க, வேறேசிலர்விஜயத்வஜமான ஹம்ஸத்வஜம் ஹநுமத்வஜம் முதலானத்வஜங்களை தரிப்பார், காஷாயவேஷாநுரூபமான ஸமயக்குடைபிடிப்பார், பூரணபொற்குடங்களை தரிப்பார், திருவொண்பந்தம் பிடிப்பார், திருவீதிசெப்பனிடுவார், திருநீர்பரிமாறுவார், பூமழையானபுஷ்பவ்ருஷ்டிகளைப் பொழிவார், காவொத்தபலகதலிக்குலை*கடியரங்கன் திருவீதியெட்டும்நாட்டுவார், *தோரணமநிரைப்பார், பூந்தோப்புக்கள்சமைப்பார், பொரிகளைச்சிதறுவார், எண்ணெயிறைத்தாடுவார், பரி

வரானவர்கள் திருமேனிக்காவலாக ஆயுதங்களை தரித்துக்கொண்டுபோருவார், இப்படிபலபரிசர்யையிலுமங்வயித்துஸேவித்துக்கொண்டுபோர கோயிலிலுண்டானசங்ககாஹளபேரீம்ர்தங்கபணவாதிகளான வாத்யங்கள் கடல்போலேகோஷிக்க, *ராமாநுசனைத்தொழும் பெரியோரான ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்தவாத்யகோஷத்தைக்கேட்டு* மூந்திரைத்தாடி இப்படிவாத்யகோஷத்துடனே நகரிவலஞ்செய்து பெரியதிருநாளாகத் தம்மைஸேவித்துவருகிறவளவிலே, எம்பெருமானாரும் இஸ்ஸப்தத்தையும் ஸமூஹத்தையுங்காண்பதுகேட்பதாய்க்கொண்டு ஹ்ர்ஷ்டராய்எழுந்தருளியிருக்க ;

* சிறப்புடையமறையவர்வாழ் * நல்லார்கள்வாழ் * தோதவத்தித்தூமறையோர் என்று அங்குத்தையிலிருப்பே வாழ்வாக கோயிலில் வாழும் வைஷ்ணவர்களுடைய * மணிமாடமாளிகைகளான * மஞ்சுசேர்மாளிகையில்நீடகிற் புகையையும், * மறையோர்செஞ்சொல்வேள்விப்புகையையும், திருமாளிகைகளருகில் * தேன்றொடுத்தமலர்ச்சோலையையும், * குரவரும்பக்கோங்கலரக்குயில் கூவும்குளிர்பொழில்சூழும்படியையும், அங்குள்ளவர்கள்தான் * தேனும்பாலுங்கலந்தன்னவர்என்னும்படி ஏகரஸராயிருக்கிறபடியையும், அவ்வளவுமன்றிக்கே,* வருவிருந்தையளித்திருப்பாராயிருக்கிறபடியையும் பாராநின்றுகொண்டு (நல்லபதத்தால்மனைவாழ்வர் கொண்டபெண்டிர்மக்களே) என்கிறபடியே அவர்களுக்கு அநுகூலைகளாய்வர்த்திக்கிற அவர்கள் தேவியாரான * சதிரிளமங்கையர் * கதிரொளிதீபம் கலசமுடனேந்தும்படியையும், ஆண்மின்கள்வானகம் ஆழியான்தமரென்று வாளொண்கண்மடந்தையர் வாழ்த்தும்படியையும், அவர்கள்தான்பக்நாபிமானைகளாய் வாசல்களிலேநின்று வணங்கி ஸேவிக்கும்படியையும், அவ்வளவிலே திருப்பிண்டிபரிமாறித்திருவிளக்கேற்றிவைக்கும்படியையும், அவ்வவ்க்ர்ஹத்வாரங்களிலே ஸங்கம்ஸங்கமாகவிளையாடுகிற * பிள்ளைக்குழாவிளையாட்டொலியையுங்கேட்டு, இப்படி இவையெல்லாவற்றையுங்கண்டுகளித்துக்கொண்டு எழுந்தருளாநின்ற அவ்வளவிலே,*(ஆழ்வார்கள் சொல்லாமருளிச்செயலெழுவைாரி யோசையென்னுள்ளே விளங்க | ஆழ்வான் முக்கோலமாமலரணிமுற்றுமிகவேற்றுக்கொண்டு முக்கோலழகுமுறையொளிர முன்நத்துருவ கத்தொருவன் முதலுருவோ. அன்னத்துவசமநேகமெழ முன்னிலிடக்கை முரசங்களிணையெண் மத்தளகட முதல்வாத்யங்களார்ப்ப, அடக்கமிகும்பாகவதர்பலகோடிசூழ வரமாகருணைசோத்தியர்வாழ்த்தி வரநாகணையைத் தீர்த்தவதாரம்செயநெடியவடிவன்வந்தான் வாய்த்தபெரும்பூதூரில் மன்வந்தான் எத்துமிளையாழ்வா ரென்னுமெம்பிரான்வந்தான் ,வளையாழியேந்தியமால்வந்தான், நளிநமுக வெம்பெருமானெங்க ளெதிராசன்வந்

* இந்தபாட்டுக்குச்சரியானபாடத்தை ப்ரத்யந்தரத்தில்கண்டுகொள்வது.

ரன், வம்பொருநாட்செய்யாவானவன்வந்தான், உம்பரெல்லாம்நோக்கு மிராமாநுசமுனிவனேவந்தான், வாக்கிலுயர்சூரியில்மன்னவன்வந்தான், பார்கருளுடையவராமென்று மொருமுதல்வன்வந்தான், பற்றுவிடாக்காமாதி தோஷங்களைந்துகடிந்தியலாக்கும் மாமறைவர்முனிவர்க்குமால்வந்தான், தாமாகிவாக்கியத்துள்த்தம்முறுவல்கள் நாலும்காகரும்கருணைக்கடல்வந்தான், ஆர்க்குமறியானென்று ஞானமன்புவைராக்யமும் மருவுகுணக்கொண்டல்வந்தான், தேருசினத்தையென்று நிலைபிட்டவெதிராசமுனிவன் வந்தான், ஒன்றுமடியாருயிர்வந்தான், மனனெல்லாமன்னவயல் சேர்கூரத்தாழ்வான் குலதெய்வமென்றும் மருவுமிறைவந்தான், மன்னுதுழாய்த்தாரன் அநந்தாவதாரன்வந்தான் மடலவிழ்தாராம் புயத்தான்வந்தான்தொடைபுனை நூலகத்வர்களேஸ்ரீபாஷ்காரென்றும் ஸ்ரீமான்வந்தான் என்றும்,

(స్త్రీ) బాలయువవృద్ధానాం రామోయమితికీర్త్యతే। (ஸ்த்ரீபாலயுவவ்ர்த்தாநாம்ராமோயமிதிகீர்த்யதே) என்கிறபடியே இருந்ததேகுடியாகஎல்லாருமீடுபட்டு அவ்விஷயத்திலே, "பல்லாண்டுபல்லாண்டு போற்றி போற்றி வாழிவாழி" என்று மங்களாசாஸநம்பண்ணுகின்றுகொண்டு, (சீராருமெதிராசர் திருவடிகள்வாழி திருவரையிற்சாத்தியசெந்துவராடைவாழி) என்று மங்களாசஸநம்பண்ணுகின்றுகொண்டு, மஹாஸம்ப்ரமத்துடனே மடத்திலே எழுந்தருளுவித்துஸம்பாவித்து பின்புமஹாகோஷ்டியாகவிருந்து (తత్పాదాంబ్వతులంతీర్థం) (தத்பாதாம்ப்வதுலம்தீர்த்தம்) என்கிறபடியேஸ்ரீபாததீர்த்தத்தைச்சேர்த்து ஸ்வீகரித்து பெருமாளமுதுசெய்த வநந்தரம் எல்லாரும்கல்யாணமாகவேபதியாக எம்பெருமானுருடனேகூடியிருந்து, (அதன்பின்னேபால்சோறுமூடநெய்பெய்து முழங்கைவழிவார) என்றுஞ்சொல்லுகிறபடியே, ஸ்நேஹோத்தரமாய்பாலும்பழமும், பருப்பமுதுடன்கறியமுதும், கிடாம்பியாச்சான்பரிமாற, பகவத்ப்ரதிபாதகதயா தொண்டர்க்கமுதானப்ரஸாதத்தை ஸரஸமாகவே அமுதுசெய்து திருக்கைவிளக்கிப் பெரியதிருவோலக்கமாகவிருந்து தந்தம்ப்ரேமாநுகுணமாகயதாஜ்ஞாநம்ஸ்துதித்து, (శ్రీపరాంకుశపాదాబ్జసురభీకృతమౌలయే। శ్రీవత్సచిహ్నమిశ్రాయ యతిరాజాయమంగళమ్।) (ஸ்ரீபராங்குஸபாதாப்ஜஸுரபீக்ர்தமௌலயே।ஸ்ரீவத்ஸசிஹ்நமிஸ்ராயயதிராஜாயமங்களம்) என்றுமங்களாஸாஸநம் பண்ணிககொண்டு எழுந்தருளியிருந்தார்கள்.

—⁂—

உடையவர்திருவடிகளிலே ஆச்ரயித்த முதலிகளின் திருமுடியடைவு

இப்படிஎழுந்தருளியிருக்கிற உடையவர்திருவடிகளிலே ஆஸ்ரயித்த முதலிகளுடைய திருமுடியடைவெங்ஙனேயென்னில்; கூரத்தாழ்வான் ,கோமடத்தாழ்வான், திருமோகூராழ்வான், மாடபூசியாழ்வான, சேட்லூரில்சிறியாழ்வான், அநந்தாழ்வான், நடாதூராழ்

வான், எங்களாழ்வான், அரண்புரத்தாழ்வான்,நெய்யுண்டாழ்வான், உக்கலாழ்வான், வேதாந்தியாழ்வான், நடுவிலாழ்வான், பிள்ளைபிள்ளையாழ்வான்,மிளகாழ்வான், காராஞ்சியாழ்வான், ஈயுண்ணியாழ்வான், கோயிலாழ்வான், திருக்கோவலூராழ்வான், அகளங்கநாட்டாழ்வான், முதலியாண்டான், பெரியாண்டான், சிறியாண்டான், அம்மங்கியாண்டான், மாருதிப்பெரியாண்டான், மாறொன்றில்லாமாருதிச்சிறியாண்டான், சோமாசியாண்டான், கந்தாடையாண்டான், சீயராண்டான்,ஈச்வராண்டான், ஈயுண்ணிப்பிள்ளையாண்டான், குஞ்சுப்புரச்சிறியாண்டான்,ஆளவந்தாராண்டான், ஐயராண்டான், கிடாம்பியாச்சான், பெரியாச்சான், சிறியாச்சான், என்னாச்சான், ஐவர்பிள்ளையாச்சான், தூயபிள்ளையாச்சான், ஆச்சி,எச்சான், திருமலைநல்லான், அருளாளப்பெருமாளெம்பெருமானார், தொண்டனூர்நம்பி, மருதூர்நம்பி, மழுவூர்நம்பி, சொட்டைநம்பி, குரவிநம்பி,திருக்குறுங்குடிநம்பி,வங்கிப்புரத்துநம்பி, முடும்பைநம்பி, ஸ்ரீபராங்குசநம்பி,ஸ்ரீவில்லிபுத்தூர்நம்பி, வடுகநம்பி, திருக்குருகூர்நம்பி, ஸ்ரீபராசரபட்டர், ஸ்ரீபராங்குசபட்டர், ஸ்ரீவேதவ்யாஸபட்டர், செருப்புள்ளிதேவராஜபட்டர், கோவிந்தபட்டர், நம்பிமாரில் ஸ்ரீரங்கராஜபட்டர், உள்ளூரில்பெரியபெருமாள்பட்டர், வரந்தரும்பெருமாள்பட்டர், அழகியமணவாளப்பெருமாள்பட்டர், சட்டம்பள்ளிஜீயர், ஈச்சம்பாடிஜீயர், ஸ்ரீகுலசேகரஜீயர், திருவெள்ளறைஜீயர், ஆள்கொண்டவில்லிஜீயர், திருமழிசைஜீயர், திருவாய்மொழிஜீயர்,திருநாராயணபுரஜீயர்,திருப்புட்குழிஜீயர், கோவிந்தஜீயர், திருமாலிருஞ்சோலைஜீயர், திருநாராயணபுரத்தரையர், திருவரங்கமாளிகையரையர், திருவாய்மொழியரையர், திருநறையூரரையர், திருக்குறுங்குடியரையர், திருநகரியரையர், திருக்கண்ணபுரத்தரையர், திருவநந்தபுரத்தரையர், ராஜமஹேந்த்ரப்பெருமாளரையர், ராஜநாராயணப்பெருமாளரையர்,பிள்ளைவிழுப்புத்தூரரையர்,ஆளக்கொண்டார், அம்மங்கியம்மாள், பருத்திக்கொல்லையம்மாள், சொட்டையம்மாள், உக்கலம்மாள், ஆசூரியம்மாள், கிடாம்பிப்பெருமாள், அம்மங்கிப்பெருமாள், முனிப்பெருமாள், பட்டினிப்பெருமாள், திருமலைநல்லான், எம்பார் காஞ்சிஸோமயாஜியார், அலங்காரவேங்கடவர், திருக்குருகைப்பிரான் பிள்ளான்; ஆர்க்காட்டுப்பிள்ளான், ராமாநுஜப்பிள்ளான், திருநகரிப்பிள்ளை, வைத்தமாநிதி,சிறியையர்,பெரியையர்,அணியரங்கத்தமுதனார், திருவரங்கத்தமுதனார்,குமாண்டூரிளையவல்லி,நம்பிகருந்தேவர், எம்பெருமானார், செல்வப்பிள்ளை, சாத்தாதமுதலிகள்,ஸ்ரீகுலசேகரப்பெருமாள்தாஸர், பட்டர்பிரான்தாஸர், பழகவல்லிதாஸர், ஸ்ரீவில்லிபுத்தூர்தாஸர், நாராயணதாஸர்,ஸ்ரீகோவர்த்தநதாஸர், திருவழுதிவளநாடுதாஸர்,பிள்ளையுறங்காவில்லிதாஸர், வண்டர், சொண்டர், ராமாநுஜவிளக்கானார். நத்தத்தின்முதலிகள் மூவர்; திருநாமம்-திருவரங்கதாஸர், திருமாலிருஞ்சோ

லைதாஸர், வானமாமலைதாஸர் ; கொங்கின்முதலிகள்மூவர் ; திருநாமம்-அழகியமணவாளதாஸர், திருவேங்கடதாஸர், பேரருளாளதாஸர் ; திருமணலைக்கூட்டத்தின்முதலிகள்மூவர்; திருநாமம்-யதிவரசூடாமணிதாஸர், யதிராஜதாஸர், இளையாழ்வார்தாஸர் ; பாண்டியநாட்டில்முதலிகள்மூவர்; திருநாமம் மகிழலங்காரதாஸர், சடகோபதாஸர், பிள்ளைதிருவாய்மொழிதாஸர்; பிள்ளைதேவராஜர், பிள்ளையுறங்கையுடையார், திருமஞ்சனமெடுக்கும்தூயமுநிவேழம், ஸ்ரீபண்டாரம்நோக்கும் திருவரங்கமாளிகையார், ஸ்த்தாநத்தாரில்ப்ரஹ்மராயர், வீரஸுந்தரப்ரஹ்மராயர், வீரராகவப்ரஹ்மராயர், ஜகந்நாதப்ரஹ்மராயர், பிள்ளைதேவர், அம்மைமார்களில் திருவநந்தபுரத்தம்மை, திருவண்பரிசாரத்தம்மை, திருவாட்டாற்றம்மை, திருநறையூரம்மை, திருக்கண்ணபுரத்தம்மை, திருப்பதியில்ஸ்ரீகார்யஞ்செய்யுமம்மை, மன்னார்கோயில்போரேற்றம்மை, ஆண்டாளம்மை, நாயகத்தேவியார், உரியபெருந்தேவியார், பெரியபெருந்தேவியார், சிறியபெருந்தேவியார், ஸ்ரீபெரும்பூதூரில்திருவரங்கம், திருக்குடந்தையில்தூயவாயிரம், கோயில்பெரியபிராட்டியார், அத்துழாய், அம்மங்கி, கூரத்தாண்டாள், தேவகிப்பிராட்டியார், யதிராஜவல்லியார், பங்கயச்செல்வியார், பொன்னாச்சியார், இன்னிளவஞ்சியார், சூடிக்கொடுத்தாள், திருப்பாவைபாடினாள், (సంసేవితస్సంయమి సప్తశత్యాపీఠైశ్చతుస్సప్తతిభిస్సమేతైః। అన్యైరనన్తైరపి విష్ణుభక్తైరాస్తేధిరఙ్గం యతిసార్వభౌమః) (ஸம்ஸேவிதஸ்ஸம்யமி ஸப்தஶத்யாபீடைஶ் சதுர்ஸ்ஸப்ததிபிஸ்ஸமேதை: । அந்யைரநந்தைரபிவிஷ்ணுபக்தைராஸ்தேதிரங்கம் யதிஸார்வபௌம:) என்கிறபடியே எழுநூறுஉத்தமாச்ரமிகளாலும், எழுபத்துநாலுஸிம்ஹாஸநஸ்த்தரானஆசார்யபுருஷர்களாலும், அஸங்க்யாதமானசாத்தினசாத்தாதமுதலிகளாலும் முந்நூறுகொத்தியம்மைமார்களாலும், பன்னீராயிரம்ஏகாங்கிகளாலும், இப்படியெல்லாராலும் ஸேவ்யமாநராய்க்கொண்டு (శ్రీరఙ్గనాథో జయతు శ్రీరఙ్గశ్రీశ్చ వర్ధతామ్) (ஸ்ரீரங்கநாதோஜயது ஸ்ரீரங்கஸ்ரீஶ்சவர்த்ததாம்) என்கிறபடியே நம்பெருமாளை மங்களாசாஸநம்பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.



இப்படிஎழுந்தருளியிருக்கிற உடையவர்திருவடிகளிலே நித்யகைங்கர்யம்பண்ணுமாசார்யர்கள்.

கந்தாடையாண்டானும், நடாதூராழ்வானும்; பட்டவர்க்கம், கூரத்தாழ்வான்ஸ்ரீபாஷ்யத்துக்குஉசாத்துணையாயும், கோசபண்டாரஉக்ராணமடஸமாத்யக்ஷபாரபத்யத்துக்கும் கடவராயிருப்பார் ; அருளாளப்பெருமாளெம்பெருமானார், ஜ்ஞாநஸாரப்ரமேயஸாரமென்கிற ப்ரபந்தங்களையெழுதிஉடையவர்ஸந்நிதியிலேவைக்க, உடையவரும்ஆத்யந்தமாகத் திருக்கண்கள்சாத்தியருளி யுகந்து அன்றுமுதல் தம்முடையவெம்பெருமானைபேரருளாளரைத் திருவாராதநம்பண்ணிக்கொண்டிருமென்றுநிய

மித்தருளினர்; கிடாம்பியாச்சானும்கிடாம்பிப்பெருமாளும்திருமடைப் பள்ளிகைங்கர்யத்துக்குக்கடவராயிருப்பர்கள்; வடுகநம்பிதிருச்சுரபிக்கு புல்லிடுவிக்கைக்கும், எண்ணெக்காப்புச்சாத்துகைக்குங்கடவர்; முதலியாண்டானுக்குக் கைங்கர்யம் திருமண்காப்புக்கும், திருவாராதநத்துக்கும்பரிசாரமும்திருவடிநிலைகள்ஸமர்ப்பிக்கவும்; எம்பாருக்குக்கைங்கர்யங்கள்; திருமேனிதிருவடிகளைப்பிடிக்கவும், திருப்பரியட்டங்கள்திருத்தவும், திருக்கைஸமர்ப்பிக்கவும், திருப்படுக்கைசோதிக்கவும், திருமேனிக்காவல்முதலானகைங்கர்யங்கள்; கோமடத்துச்சிறியாழ்வான்திருக்கைச்செம்பும், ஸ்ரீபாதரக்ஷையுமெடுப்பர்; பிள்ளையுறங்காவில்லிதாஸர் கருவூலம்நோக்குவர்; அம்மங்கி பாலமுதுகாய்ச்சுவர்; உக்கலாழ்வான் திருத்தளிகைமாற்றுவர்; உக்கலம்மாள் திருவாலாவட்டம்பரிமாறுவர்; மாருதியாண்டான் திருமஞ்சநமெடுப்பர்; மாறொன்றில்லாச்சிறியாண்டான்மடத்துக்கு அமுதுபடிகறியமுதுநடத்திப்போருவர்; வண்டரும்சொண்டரும் கைக்காயிரம்பொன்னுக்குச்சேவித்து மடத்துக்குத் திருக்கைவழங்கிக்கொண்டு போருவர்கள்; ராமாநுஜவேளைக்காரர் திருமேனிக்காவலாய்ப் போருவர்கள்; அகளங்கநாட்டாழ்வார்ப்ரதிபக்ஷநிரஸநம்பண்ணிப்போருவர்; பிள்ளைதிருவரங்கத்தமுதனர் ஸ்வாசார்யவைபத்தை நூற்றந்தாதியிலேயருளிச்செய்து பரமஸாத்விகருக்குஉபகரித்தருளினர்! மற்றும்உடையவர்ஶிஷ்யரான ஆசாரியர்கள் தங்களையுடையவர் நியமித்தருளினகைங்கர்யங்களைச்செய்துகொண்டு எழுந்தருளியிருப்பார்கள்;

வடுகநம்பிவைபவம்.

இவர்களில் வடுகநம்பி உடையவர்திருவடிகளது உபாயோபேய, மென்றத்யவஸித்து அவர்திருவடிகளைத் திருவாராதநம்பண்ணிக்கொண்டுபோருவர்; ஒருநாள்பயணகதியிலே உடையவர் திருவாராதநத்தையும், தம்முடையதிருவாராதநத்தையும்சேர வெழுந்தருளப்பண்ணிக்கொண்டுவர, இத்தைக்கண்டுஉடையவர்“வடுகா! இதென்னசெய்யுதாய்”என்ன; ணி கனம்பியும், “உங்கள்தேவரில் எங்கள்தேவர்க்கென் குறை” என்றுவிண்ணப்பஞ்செய்தார். வடுகநம்பி உடையவருடனே பெருமாளைஸேவிக்க எழுந்தருளிஞல் இத்தைக்கண்டு உடையவரும், “வடுகா! பெருமாள்திருக்கண்ணழகைப்பாராய்,, என்ன; வடுகநம்பியும், பெருமாள்திருக்கண்ணழகையும் உடையவர் திருக்கண்ணழகையும்ஸேவித்து, (என்னமுதினைக்கண்டகண்கள்மற்றொன்றினைக்காணவே) என்றுஅருளிச்செய்தருளினர். வடுகநம்பிஉடையருக்குப் பாலமுதுகாய்ச்சாநிற்கச்செய்தே பெரியதிருநாளுக்கு பெருமாள்உடுத்துமுடித்துப்புறப்பட்டருளி வாசலிலேஎழுந்தருள; உடையவர்புறப்பட்டுப் பெருமாளைஸேவித்து, “வடுகா! பெருமாளைஸேவிக்கவா, சின்றழைக்க; வடுகநம்பியும்அடியேன் உம்முடையபெருமாலுஸேவி

க்கவந்தால் என்னுடையபெருமாளுக்குப் பாலமுது கும்பிப்போங் காணும், இத்தைவிட்டு வரப்போகாதுகாணென்று விண்ணப்பஞ்செய்தார். வடுகநம்பிஉடையவர் ஸ்ரீபாததீர்த்தமல்லது வேறொருவர் ஸ்ரீபாததீர்த்தங்கொள்ளார், தீர்த்தநியதியும்அவர்க்கேஉள்ளதொன்றிறே; உடையவர்ஸ்ரீபாததீர்த்தத்தை ஸ்ரீஸாளக்ராமத்திலேசேர்த்துச் சேமித்துவைத்து, தமக்கந்தரங்கரான ஸ்ரீவைஷ்ணவர்களையழைத்து, சிறந்ததநமிது, வருந்தியும் பேணிக்கொண்டுபோருங்களென்று அடைக்கலமாகக்காட்டிக்கொடுத்தருளினார்.

—✻—

## அநந்தாழ்வான்வைபவம்.

அநந்தாழ்வான்திருவேங்கடமாமலையிலே ராமாநுஜபுத்தேரிகட்டும்போதுமணல்சுமவாநிற்க, பிள்ளைகளிலேயொருவர்வந்து கூடையைவாங்கப்புக, அநந்தாழ்வானும் நான்கூடையைவிடிவிளைப்பற்று நீகூடையைத்தொடில்இளைப்புதியென்ன, பிள்ளையுமிளைப்பாகாதென்று பின்னையுங்கூடையைவாங்கப்புக, நான் ஜீவிக்கிறஜீவநத்தை வாங்கவேணுமோ, நீயுமொருகூடையை எடுத்துச்சுமக்கலாகாதோ வென்றருளிச்செய்தார். பின்னையுமொருநாள் அநந்தாழ்வான், கர்ப்பவதியான தேவிகள்மேலேமண்சுமத்தாநிற்க, திருவேங்கடமுடையான் ஒருபிள்ளையாய்வந்து எதிரேகூடையைவாங்கிக்கொண்டுபோக, தேவிகள்கடுகிவருமதுகண்டு, இதென்னகடுகிவருகிறாய்என்ன, தேவிகளும்ஒருபிள்ளை கூடையைஎதிரேவாங்கிக்கொண்டுபோகிறானென்ன, அநந்தாழ்வானும் கைங்கர்யவிக்நகாரீகூடையைத்தொடாதேகொள்ளென்றுகொட்டெடுத்துஓடியடிக்கப்புகதிருவேங்கடச்செல்வன்கோவிலிலே புகுந்தானென்பார்கள். அநந்தாழ்வான்திருநந்தவநத்திலே திருப்பள்ளித்தாமமெடாநிற்கச்செய்தே போகிஸந்தஷ்டமாக, இவரும்நீராடி கைங்கர்யத்திலே புகுர திருமேனிக்குப்பரிவராயிருப்பார் விஷம்தீர்க்கவேண்டாவோ வென்றுகேட்க இவரும்வேண்டாவென்றார். திருவேங்கடமுடையான் ஸந்நிதியிலே அநந்தாழ்வானைப்பார்த்து விஷந்தீர்க்கவேண்டாவென்று என்னநினைத்துச்சொன்னாய்என்ன, அநந்தாழ்வானும் கடித்தபாம்பு வலிதாகில்விரஜையிலேதீர்த்தமாடி ஸ்ரீவைகுண்டநாதனை ஸேவித்துக்கொண்டிருக்கிறேன்; கடியுண்டபாம்புவலிதாகில் திருக்கோனேரியிலதீர்த்தமாடி, தேவரீரைஸேவித்துக்கொண்டிருக்கிறேன் என்றிருந்தேனென்று விண்ணப்பஞ்செய்தார். அநந்தாழ்வான்போஸலராஜ்யத்துக்கு எழுந்தருளும்போது, தீர்த்தப்ரஸாதங்கள்கொண்டெழுந்தருள.ஓரிடத்தில்நீராடி யமுதுசெய்யப்புக்கவாறே பட்டையடங்கலும் சிற்றெறும்பாயிருக்கக்கண்டு துணுக்கென்று (எம்பெருமான்பொன்மலைமேலேதேனுமாவேனே) என்கிறபடியே யிப்படிசிலராய்த்திரிவார்கள், ஆகையால் இப்படியே வைத்துவாருங்கோளென் றெழுந்தருளினார். பின்னையுமொருநாள் அநந்தாழ்வான் திருமாலைசேர்க்

கும்பலகையிலே யிருந்து திருமாலை சேர்க்கும்போது திருவேங்கடமுடையானருள்பாடிட, இவரும் பேசாதே எழுந்தருளியிருந்து திருமாலை சேர்த்துக்கொண்டு ஸந்நிதியிலேசென்ற வளவிலே, திருவேங்கடமுடையான் நானழைப்ப வாராதிருப்பதேனென்ன, உம்மைக்கொண்டுகார்யமென்? ஆசார்யகைங்கர்யமான கருமுகைமொட்டுவெடியா நிற்கவென்று விண்ணப்பஞ்செய்தார். திருவேங்கடமுடையான் உம்மைஇங்கிலும்போகச்சொன்னால்என்செய்வீரென்ன ; ஆழ்வானும் இவ்விடம்தேவரீரைஆச்ரயித்தவர்களதன்றோ, தேவரீர் ஒருகிழமைமுற்பட்டீரித்தனே*பரன்சென்றுசேர்திருவேங்கடமன்றோ, நாங்கள்திருமலையையாச்ரயித்தோமென்றுவிண்ணப்பஞ்செய்தருளினார்.

கூரத்தாழ்வான்வைபவம்.

இப்படி ஶிஷ்யஸங்கத்தையுடைய எம்பெருமானார்வாழ்ந்தருளுகிறகாலத்திலே, (శ్రీవత్సచిహ్నమిశ్రేభ్యో నమఉక్తిమధీమహే । యదుక్తయస్త్రయీకణ్ఠే యాన్తి మఙ్గళసూత్రతామ్। (ஸ்ரீவத்ஸசிஹ்நமிஶ்ரேப்யோநம உக்திமதீமஹி। யதுக்தயஸ்த்ரயீகண்டே யாந்தி மங்களஸூத்ரதாம்) என்று அபிஜந வித்யாவ்ருத்தங்களை காற்கடைக்கொண்டிருக்கிற விவ்வாழ்வான் தான் மண்டுகத்தினுடைய ஆர்த்தத்வநிகேட்டுமோஹிக்கும்படிபரதுஃகாஸஹிஷ்ணுவாய், பகவத்ப்ரேமத்திலும்வந்தால்,(கள்வன்கொல்) என்கிற திருமொழியைப் பெண்பிள்ளைகளுக்குச்சந்தைஸாதிக்கிறசமயத்திலே, பர்த்தாவந்து அந்தப்பெண்பிள்ளையைக் கையைப்பற்றிக்கொண்டுபோக, அத்தைக்கண்டு பாவநாப்ரகர்ஷத்தாலே மோஹித்துப்போருமவராய், நித்யமான அநுஷ்டானகாலம் அதிக்ரமிக்கையிலும், அருளிச்செயல் த்வநியிலே அவசராய்கால்தாழ்ந்துபோருமவராய், இப்படி தயாதிகுணங்களாலும், பக்த்யாதிகுணங்களாலும் பூர்ணராய், அத்தாலே (பொன்னுலகாளீரோ) என்னும்படி நித்யவிபூதியையும் வழங்கவல்லவைபவத்தையுடையரானவிவர் ; ஆழ்வார்கள் ஆர்த்த்யதிசயஸூசகஸூக்திகளைஸ்வோக்திகளாலே ப்ரகாஶிப்பித்துக்கொண்டுகண்ணழிவற்ற பகவத்ப்ராவண்யத்தையுடையராய் அத்தாலேதிருவாய்மொழியையும் குமாரர்களுக்கு ப்ரஸாதித்துத்தாமும்ஆற்றாமையாலே*முகில்வண்ணனடியைஅடைந்து அடியேனை முகில்வண்ணவானத்திமையவர்சூழவிருப்பர் என்னும்படியான அப்பெரியதிருவோலக்கத்திலே *அந்தமில்பேரின்பத் தடியரோடே அடிமைகொண்டருளவேணுமென்று அப்படியே கொண்டருளுமிடத்து எம்பெருமானார், (నిత్యకింకరోభవాని) (నిత్యకింకరః ప్రహర్షయిష్యామి) (సర్వావస్థోచితాశేషశేషతైకరతిస్తవ భవేయం పుణ్డరీకాక్ష త్వమేవైవం కురుష్వమామ్) (நித்யகிங்கரோபவாநி)(நித்யகிங்கரஃ ப்ரஹர்ஷயிஷ்யாமி) (ஸர்வாவஸ்தோசிதாஶேஷஶேஷதைகரதிஸ்தவ பவேயம் புண்டரீகாக்ஷத்வமைவைவம்குருஷ்வமாம்)என்றும் வழுவிலா வடிமைசெய்யவேண்டுநாம்)என்றும்,ப்ரார்த்தித்தபடியேயாகவேணுமெ

ன்றும், அவ்வளவுமன்றிக்கே ஆற்றுமைதலையெடுத்து எங்கலங்கொள் சுடரையென்றுகொல் கண்கள்காண்பதுவேகாண்பதெனுஞான்றுகொலோவென்றும், (కదానుసాక్షాత్కరవాణిచక్షుషా) கதாநுஸாக்ஷாத்கரவாணிசக்ஷுஷா) என்றும்சொல்லுகிறபடியே) (భగవత్సరణారవిన్దద్వన్ద్వం కదానుభవితా విషయేమమాక్ష్ణోః) பகவதஶ்சரணாரவிந்தத்வந்த்வம்கதாநுபவிதா விஷயேமமாக்ஷ்ணோ:)] என்றும், (నీలాంజనాద్రినిభంనీలమేఘనిభం) (நீலாஞ்சநாத்ரிநிபம்நீலமேகநிபம்) என்றும்சொல்லுகிறபடியே கரியான்கழல்காணக்கருதி, அப்படியே (மைப்படிமேனியும்செந்தாமரைக்கண்ணும்வைதிகரே மெய்ப்படியாலுன்திருவடிச்சூடும்தகைமையினால் (என்னும்படி பரமவைதிகரானவிவரும், (భాంతంభవంతమనిమేషముదీక్షిషీయ) பாந்தம்பவந்தமநிமேஷமுதிக்ஷிஷீய) என்றும்திவ்யசக்ஷுஸ்ஸாலேகண்டு (మదుత్తమాంగమంగీకరిష్యతిచిరంతవపాదపద్మః) மதுத்தமாங்கமங்கீகரிஷ்யதிசிரம்தவபாதபத்ம:, என்று, * பாதபங்கயமேதலைக்கணியாகவும்வேணுமென்றும், (మన్మూర్ధ్నిహన్తకరపల్లవతల్లజన్తేకుర్వన్కదా) (மந்மூர்த்நிஹந்தகரபல்லவதல்லஜந்தேகுர்வங்கதா) என்று அணிமிகுதாமரைக்கையைதலைக்கு அலங்காரமாகவைக்கவேணுமென்றும், அதற்குமேலே (பைகொள்பாம்பணையாய்) எனறும் பாம்பணையான்ன்றும், (శ్రీరంగేభుజగేన్ద్రభోగశయనేలక్ష్మీమహీసేవితే) (ஸ்ரீரங்கேபுஜகேந்த்ரபோகஶயநேலக்ஷ்மீமஹீஸேவிதே) என்றும், | இங்குத்தையில் முக்தப்ராப்யமான அநுபவத்தை * ஆயிரவாய்நாகத்தணையான்நகரானவவ்விபூதியிலே, (அணைவதரவணைமேல்] பூம்பாவையாகம்புணர்வது) என்றும், (தேவிமாராவார் திருமகள்பூமியேவமற்றமரராள்செய்வார்என்றும்,) (తయాసహాసీనమనన్తభోగినే) (தயாஸஹாஸீநமநந்தபோகிநே) இத்யாதியாலும், (శేషభోగేశ్రియాసహాసీనంవైనతేయాదిభిస్సేవ్యమానం) (ஶேஷபோகேஶ்ரியாஸஹாஸீநம் வைநதேயாதிபிஸ்ஸேவ்யமாநம்) என்றும், ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அநுதியிட்டபேக்ஷித்தமுக்தப்ராப்யவேஷத்தை யிவரும் நித்யவிபூதியிலே) (దేవ్యాశ్రియాసహవసన్తమనన్తభోగేభుజ్ఞేయసాంజలిరసంకుచితాక్షిపక్ష్మ) (தேவ்யாஶ்ரியாஸஹவஸந்தமநந்தபோகே புஞ்சியஸாஞ்சலிரஸம்குசிதாக்ஷிபக்ஷ்ம) என்றும், (కైంకర్యనిత్యనిరతై) (கைங்கர்யநித்யநிரதை) என்றுதொடங்கி (మద్దేవతైఃపరిజనైస్తవసంగసీయ) (மத்தேவதை: பரிஜநைஸ்தவஸங்கஸீய) என்று அத்தை எல்லையாகப் பெறும்படி திருவுள்ளத்திலே சூழ்ந்தருளவேண்டுமென்ன ; இப்படி தாஸ்யமஹாரஸக்ஞராய், பரமார்த்தராய் நூற்றெட்டுதிருநக்ஷத்ரம் சென்றிருக்கிற விவ்வாழ்வானை ஒருநாள், பெருமாளருள்பாடிட்டருள; ஆழ்வானும் அப்படியே பெருமாள்திருவடிகளிலே தெண்டன்ஸமர்ப்பித் தி (రామానుజాంఘ్రిశరణోస్మికులప్రదీపస్త్వాసీత్స యామునమునేస్సచనాథవంశ్యః । వంశ్యఃపరాంకుశమునేస్సచసోపిదేవ్యాదాసస్తవేతివరదాస్మితవేక్షణీయః) (ராமாநுஜாங்க்ரிஶரணோஸ்மிகுல ப்ரதீபஸ்த்வாஸீத்ஸயாமுநமுநேஸ்ஸசநாத

வஶ்யः। வஶ்யः பராங்குஶமுநேஸ்ஸ சஸோபிதேவ்யா தாஸஸ்தவேதி வரதாஸ்மிதவேக்ஷணீயः) என்கிறஶ்லோகத்தை யுபந்யஸித்து விண்ணப்பஞ்செய்தார்.

பெருமாளும் இத்தைக்கேட்டுப்போரத்திருவுள்ளமுகந்து ஆழ்வான்! உமக்குவேண்டினத்தைக்கேட்டுக்கொள்ளீரென்று திருவுள்ளம்பற்றியருள; ஆழ்வானும், அடியேனுக்கவையொன்றும் வேண்டுவதில்லையென்றுவிண்ணப்பஞ்செய்தார்: பெருமாளும் நம்மாணையேதருகிறோம் கேட்டுக்கொள்ளீரென்று திருவுள்ளம்பற்றியருள; ஆனால் அடியேனுக்கவையொன்றும்வேண்டுவதில்லை, ஒன்றும் வேண்டுவதில்லையென்று விண்ணப்பஞ்செய்தார்: மீளவும் பெருமாள் நம்மாணை நம்பெண்டுகளாணை நம்மிராமாநுசனாணையேதருகிறோம் கேட்டுக்கொள்ளீரென்று திருவுள்ளம்பற்றியருள; ஆழ்வானும் திருவாணைக்குமேலாணையில்லையேயென்றுகொண்டு (பொங்கைம் புலனும் பொறியைந்தும் கருமேந்திரிய மைம்பூதம்இங்கு இவ்வுயிரேய் பிரகிருதிமானாங்காரமனங்களே) என்கிறபடியே அடியேனுக்கு இந்த இருபத்துநாலுதத்வங்களும் கூடியிருக்கிற விரோதமானசரீரத்தை விடுவித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்தார்: பெருமாளும் இத்தைக்கேட்டுப் போரக்லேசித்து ஆழ்வான்! இத்தையொழியக்கேட்டுக்கொள்ளீரென்றுதிருவுள்ளம்பற்றியருள; ஆழ்வானும் தேவரீர்இரண்டுவார்த்தையருளிச் செய்யலாமோவென்று விண்ணப்பஞ்செய்ய; ஆனால் தந்தோமென்றுதிருவுள்ளம்பற்றியருளினார்.

அநந்தரம், ஆழ்வானும் அடியேனுக்குப்ரஸாதித்தருளின பேறு நாலூரானுக்கும் ப்ரஸாதித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்தார்; பெருமாளுமிதென்? ஆழ்வான்! நாம் அவனையன்றே (க்ஷமாமி) (க்ஷமாமி) என்று முனிந்தோமென்றருளிச்செய்ய; ஆழ்வானும் (நாமோத்விர்நாபிபாஷதே) (நாமோத்விர்நாபிபாஷதே) என்கிறபடியே தேவரீர் இரண்டுவார்த்தை யருளிச்செய்யலாமோவென்று விண்ணப்பஞ் செய்தார்; ஆனால்உம்முடையபேர்சொன்னவர்களுக்கும் உம்முடையஸம்பந்திஸம்பந்திகளுக்கும் நாமுகந்தமேலைவீடு தந்தோமென்று திருவுள்ளம்பற்றி பரமபதத்திலே திருமாமணிமண்டபத்திலே நடுவில்நாயகப்பத்தியிலே உமக்குநாமுகந்தமேலைவீடு தந்தோமென்று திருவுள்ளம்பற்றி, இவருக்குதீர்த்தப்ரஸாதமும், திருமாலைப்ரஸாதமும், சடகோபனும் ப்ரஸாதித்து விடைகொடுத்தருளினார்: ஆழ்வானும்,மாகவைகுந்தங்காண்கையிலே மநோரதத்தையுடையராய், அர்ச்சிராதிமார்க்கத்துக்கு ப்ரதமாலங்காரம் பண்ணினுப்போலே யிருக்கப்புறப்பட்டருளி விமாநப்ரதக்ஷணமாக எழுந்தருளாநிற்கச்செய்தே, பிள்ளையாழ்வீர், எம்பெருமானார்திருவுள்ளத்திலே பெருமாள் நம்மையிப்படி அங்கீகரிக்கக்கடவரோஎன்று ஆநந்தபாஷ்பங்கள்விழ, பட்டருக்கும் சீராமப்பி

ள்ளைக்கும், ஆண்டாளுக்குமறிவியாதே, உடையவர்க்குவிண்ணபப்ஞ் செய்யாதே, கூரத்தாழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளவேண்டி யிருந் தது. ஆழ்வானும் தம்முடையதிருமாளிகையிலே எழுந்தருளாமல் ஆழ்வார்திருமாளிகையிலே பிறவீடுவிட்டெழுந்தருளியிருந்தார்.

ஆண்டாளும் இச்செய்தியைக்கேட்டு, பட்டரையும், சீராமப்பிள் ளையையும்பார்த்து, பிள்ளைகாள்! நீங்கள் உங்களுக்குப் பெருமாளுள ரென்றிருந்தீர்களேயாகிலும், ஆழ்வானுக்குப் பெருமாள் மேலைவீடு ப்ரஸாதிக்கத் திருவுள்ளம்பற்றியருளினர், நாம் இனி ஆழ்வான்ஸந் நிதியிலே ஸேவிக்கப்போவோம்வாருங்கோள், என்றுபட்டரையும் சீரா மப்பிள்ளையையும் கூட்டிக்கொண்டு, ஆழ்வான் எழுந்தருளியிருக்கிற ஆழ்வார்திருமாளிகையிலே விடைகொண்டு, ஆழ்வான் திருவடிக ளிலே ஆண்டாள்! தெண்டன்ஸமர்ப்பித்துநிற்க; ஆழ்வானும், ஆண் டாளைப்பார்த்தருளி ஆண்டாள் நீயென்னநினைத்திருக்கிறுயென்ன; அடி யேனுக்கொரு நினைவுண்டா, தேவரீர்திருவடிகளைப் பின்செல்லுகை யென்று விண்ணப்பஞ்செய்தாள். ஆண்டாள்। (திருவுடைமன்னரை க்காணில் திருமாலைக்கண்டேனே) என்கிறபடியே, ஸ்ரீவைஷ்ணவவி ஷயத்திலே மிகவுமாதரத்தோடே ஸேவித்துப்போரு, எம்பெருமானர் திருவடிகளிலே பசியன் சோற்றைக் கண்டாப்போலேமிகவும்ஆதரத் தோடேஸேவித்துப்போருஎன்று அருளிச்செய்தருளினர். பட்டரும் ஆழ்வான் திருவடிகளிலே தெண்டன்ஸமர்ப்பித்துநிற்க, ஆழ்வானும் பட்டரைஎடுத்தணைத்து, பட்டரே நீரும் எம்பாருகந்தருளின விஷய மன்றோ (பீதகவாடைப்பிரானர் பிரமகுருவாகிவந்து) என்று, எம்பார் திருவடிகளிலேயும், எம்பெருமானர் திருவடிகளிலேயும், மிகவும் ஆத ரத்தோடேஸேவித்துப்போரும், எம்பெருமானர் ஸ்ரீபாதத்தின் முத லிகளைக்கண்டால் நம்மைக்கண்டாப்போலே மிகவும் ஆதரத்தோடே ஸேவித்துப்போருமென்று அருளிச்செய்தருளினர். சீராமப்பிள்ளை யும் ஆழ்வான்திருவடிகளிலே தெண்டன்ஸமர்ப்பித்துநிற்க, ஆழ்வா னும் சீராமப்பிள்ளையைப்பார்த்து, நீரும் பட்டர்திருவடிகளிலேமிகவும் பக்திப்ரேமத்தோடே ஒதுங்கிவர்த்தியுமென்றுஅருளிசெய்தருளினர். பிள்ளைப் பிள்ளையாழ்வானும் திருவடிகளிலேதண்டன்ஸமர்ப்பித்துநிற்க; பிள்ளைப் பிள்ளையாழ்வீர் (యదిచ్ఛసివశీకర్తుంజగదేకేనకర్మణా। పరాపవాదసస్యేభ్యో గాశ్చరన్తీన్నివారయ) (யதிச்சஸிவஶீகர்த்துஂஜகதேகேந கர்மணா।பராபவா தஸஸ்யேப்யோகாஶ்சரந்தீர் நிவாரய) என்கிறபடியேவாக்கொன்றை யுங்குறிக்கொண்டிரும், எதிரிகூடக்குத்தும் என்றதனுல், ராஜதண்டம் வருமென்றதனுல், காயத்தால்வாராதபடிநெஞ்சால்நினைத்திருந்தீராகில், அதுதிருவுள்ளத்தில்படாதபடி எம்பெருமானர்திருவடிகளே தஞ்சமெ ன்றிருமென்று அருளிச்செய்தருளினர். ஆழ்வானும், ஸ்ரீபாதத்தில்

லிகளைப்பார்த்து,பிள்ளைகாள்! நீங்கள்உங்களுக்கு ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களை,தாரகபோஷக போக்யங்களாகவும்,திருவாய்மொழிதானே காலக்ஷேபப்ரகாரமாகவும் அநுஸந்தித்துக்கொண்டு போருங்கோள்" என்று அருளிச்செய்தருளினார். முதலிகளும், ஆழ்வான்திருவடிகளிலே தெண்டன்ஸமர்ப்பித்துநிற்க, ஆழ்வானும்,பிள்ளைபிள்ளையாழ்வானைக் காணப்பெற்றிலோமே என்று அருளிச்செய்தருளினார்.

—✻—

ஆழ்வான் மேல்வீடுபெறுவதற்கு உடையவர்களிப்புற்றதும், பின்பு இருவரும் ஸம்பாஷித்தது.

உடையவரும் முதலிகளுமாக, (சிற்றம்சிறுகாலே) என்கிறபாட்டுக்கு அர்த்தமருளிச்செய்துகொண்டு எழுந்தருளியிருக்கச்செய்தே பெருமாளுடையதிநசரிதை எம்பெருமானார்ஸந்நிதியிலே ப்ரஸங்காத்ப்ரஸங்கமாக,இப்படிஆழ்வானுக்கு பெருமாள் மேலைவீடுப்ரஸாதிக்கத்திருவுள்ளம்பற்றியருளினாரென்று விண்ணப்பஞ்செய்தார்கள். எம்பெருமானாரும் இத்தைக்கேட்டு த்ரிதண்டத்தையும் காஷாயத்தையும் எறிவது ஏற்பதாய் மிகவும் களித்து, நாம்இனி ஆழ்வானுடைய ஸம்பந்தஸம்பந்தம்பெற்றோமே நமக்குஇனி ஒருகுறைகளுமில்லையேயென்று, நாம்இனிஆழ்வான்பக்கல்போகவேணுமென்று தாமும்,ஸ்ரீபாதத்தில்முதலிகளுமாக ஆழ்வான் எழுந்தருளியிருக்கிற ஆழ்வார்திருமாளிகையை நோக்கி எழுந்தருளா நிற்கச்செய்தே,"பிள்ளைபிள்ளையாழ்வானும், உடையவரும்முதலிகளுமாக எழுந்தருளுகிறார்கள்" என்று ஆழ்வானுக்கு விண்ணப்பஞ்செய்ய ,ஆழ்வானும் எம்பெருமானார்க்குஎதிராகவெழுந்தருளி,எம்பெருமானார்திருவடிகளிலே தெண்டன் ஸமர்ப்பித்துநிற்க, எம்பெருமானாரும், ஆழ்வானை எடுத்தணைத்து, ஆழ்வான்! நீர் இப்போதிதுவென்னென்றார்; ஆழ்வானும் பேசாதே எழுந்தருளியிருந்தார். ராமாநுஜனும், ஆழ்வான்! நீர் பேசாதிருப்பதென்? முற்பட்டநாமிருக்க உமக்குப்புறப்பட வாய்த்ததே! யென்றருளிச்செய்தருளினார். ஆழ்வானும்,முற்பட்டவர்கள் பிற்பட்டவர்களை எதிர்கொள்ளுவர்கள்அடியேன்பிற்பட்டால்அடைவுகேடாமென்றார்; உடையவரும்அடைவான 'போகவிபூதியிலே ஆழ்வான்! நீரொருவருமடைவுகெடுவதென்? "சேஷத்வத்திலுறைப்பிருந்தபடி முதலிகாள்பாரிகோள்" என்றுபோரவித்தராய்த் திருமுத்துதிர்த்து, (𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌨𑌾𑌂 𑌨𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂𑌨𑍈𑌵𑌚𑌕𑍍𑌰𑌮𑌃) (அத்யந்தபக்தியுக்தாநாம் நஶாஸ்த்ரம்நைவசக்ரம:) என்றுஞ்சொல்லுகிறபடியே ஆழ்வான்திவுருள்ளத்திலே ஓடுகிறத்தையறிந்து ஸ்ரீபாஷ்யகாரரும் செவியிலே த்வயத்தை ப்ரஸாதித்தருளினார்.முதலிகளும் இப்போது இதுவென்னென்றார்கள் ; இளையாழ்வாரும் முதலிகாள், பாரிகோள் நீங்கள்அறிவிகோளே, உங்களுக்குத்தெரியுமோ,நம்முடைய

ஆழ்வானுடைய நிலையையாரால்லேயறியலாம், ராஜகுமாரனுக்குகர்ப்பூர நிகரமில்லாதபோது நாக்குவரளுமாப்போலே நம்முடைய ஆழ்வானுக்கும்,த்வயவசநமில்லாதபோதுநாக்குவற்றுமென்றருளிச்செய்தருளினார்

எம்பெருமானாரும் ஆழ்வானை எடுத்தணைத்து உடைகுலைப்பட்டுஉகந்துஉள்ளம்விம்மல்பொருமலாய், ஆழ்வான்! நீர்நமக்கு ஸ்ரீபாஷ்யத்துக்குஉசாத்துணையாகவும் நம்முடைய உடம்புமுயிருமாகவும், நிழலாகவும்இப்படிஎழுந்தருளியிருக்கிறஉம்மையிழந்து எங்ஙனேதரிப்போம்? உடன்போகத்திருவுள்ளம்பெற்றிலீர், நம்மைவிட்டுப்போக உமக்கு ருசிப்பதே! இனி உம்முடையதிருவுள்ளங்கலங்கச்சொல்லி என்ன பிரயோஜநம், * பும்ஸாம்த்ர்ஷ்டிசித்தாபஹாரியானபெருமாள் ஸங்கமற்று பரமபதநாதன் இப்படி அருள்பாடிட்டுமுந்தப்பண்ணுவதே!, (ప్రణవోధనుశ్శరోహ్యాత్మా) (ப்ரணவோதநுஶ்ஶரோஹ்யாத்மா) இத்யாதி ச்ருதிப்ரமாணத்துக்கு விஷயமானீரே! பரமபதநாதனுக்கும் நாய்ச்சிமார்களுக்கும், நித்யஸூரிகளுக்கும் பெரும்செல்வமும், பெருங்களிப்புமாய்ப் பெருகிச்செல்லாநின்றதே ! இங்கிருக்கிறபெருமாளுக்கும், நாய்ச்சிமார்களுக்கும், அடியேனுக்கும், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் போராரவாரமாய்ச்செல்லாநின்றதே ! ஆழ்வான்!தேவரீர் லீலாவிபூதியில்நின்றும் நித்யவிபூதியிலேறவெழுந்தருளி விரஜாஸ்நாநம் பண்ணி அமாநவன்திருக்கை ஸ்பர்சமும்பெற்று, ( தம்மையேநாளும்வணங்கித் தொழுவார்க்குத்தம்மையேயொக்க வருள்செய்வராதலால் ) என்கிறபடியே, நிரஸ்ததுர்மாநராய், உயர்ந்த மகுடத்தையுடையராய், பரமபதத்திலே திருமாமணிமண்டபத்திலே நடுவில் நாயகப்பத்தியிலே, பரமபதநாதனையும், நாய்ச்சிமாரையும், நித்யஸூரிகளையும், ஸேவித்துக்கொண் டெழுந்தருளியிரும்என்று திருமுதுகைத்தடவிவிடைகொடுத்தருளினார்; ஆழ்வானும் எம்பெருமானார்திருவடிகளிலே வேரற்றமரம்போலேவிழுந்து, திருவடிகளை, திருமுடியிலும், திருமார்பிலும், திருக்கண்களிலும்தரித்துக்கொண்டு, ஸ்ரீபாததீர்த்தமும்சேர்த்துக்கொண்டு திருக்கைகளாலேப்ரஸாதிக்க நிறையப்ரஸாதப்பட்டு,(యోనిత్యమచ్యుతపదాంబుజయుగ్మరుక్మ వ్యామోహతస్తదితరాణితృణాయమేనే। అస్మద్గురోర్భగవతోస్యదయైకసింధోః రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే ) (யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணயமேநே । அஸ்மத்குரோர்ப்பகவதோஸ்யதயைகஸிந்தோ ராமாநுஜஸ்யசரணௌஶரணம்ப்ரபத்யே) என்கிற ச்லோகத்தை அநுஸந்தித்துக்கொண்டுநிற்க, முதலிகளும் இதுசரமதசையில்ப்ரபந்தம்என்று பட்டோலைகொண்டார்கள். எம்பெருமானாரும்,ஆழ்வான்நீர்இங்கேயிரும்என்று அநந்தரம், வடவாற்றங்கரையேறவெழுந்தருளி, ஆற்றிலேநீராடி, அகமர்ஷணம்பண்ணியருளி,மீண்டுஎழுந்தருளும்போது,இதுநம்முடைய

ஆழ்வான் எழுந்தருளியிருந்த விடமென்று திருக்கண்சாத்தியருளி மடத்தில்எழுந்தருளியிருந்தார்.

கூரத்தாழ்வான், தம்திருவடிகளிலேவிழுந்துக்லேசித்த அமுதனருக்கு "எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிரும்" என்று அருளிச்செய்து விடைகொடுத்தருளியது.

எம்பெருமானரும் ஆழ்வான் எழுந்தருளியிருக்கிற ஆழ்வார் திருமாளிகையிலேஎழுந்தருளி, திருமுதுகைத்தடவி ஆழ்வானுக்கு விடைகொடுத்தருளினார்என்று சிலஸ்ரீவைஷ்ணவர்கள் அமுதனருக்கு விண்ணப்பஞ்செய்ய, அமுதனரும் இத்தைக்கேட்டு, தாயிழந்தகன்றுபோலே ஆழ்வான்எழுந்தருளியிருக்கும் ஆழ்வார்திருமாளிகையிலே விடைகொண்டு, ஆழ்வான்திருவடிகளிலே தெண்டன்ஸமர்ப்பித்து, ஆழ்வான்! தேவரீர், (பீதகவாடைப்பிரானர் பிரமகுருவாகிவந்து)என்றும்,(பயனன்றாகிலும் பாங்கலராகிலும் செயல்நன்றாகத்திருத்திப்பணிகொள்வான்) என்றும், (என்னைப்பெற்றவத்தாயாய்த்தந்தையாய்) என்றும், (பெற்றதாய்நீயேபிறப்பித்தந்தைநீ)என்றும், (பெற்றாரும்சுற்றமுமென்றிவையேபேணேன்நான்,)என்றும்,(பெற்றார்பெற்றொழிந்தார்பின்னுநின்னடியேனுக்கு)என்றும்,(கற்றார்பற்றறுக்கும்பிறவிப்பெருங்கடலே) என்றும், (இச்சுவைதவிரயான்போ யிந்திரலோகமாளும் அச்சுவைபெறினும்வேண்டேன்) என்றும்,(எங்கண்மாலிறைவனீசன் கிடந்ததோர்கிடக்கைகண்டும் எங்ஙனம்மறந்துவாழ்கேன்) என்றும் - நடையழகிலும் கிடையழகிலும்நீராசையற்று;*வீற்றிருந்தேழுலகிலும் தனிக்கோல்செல்லுகிறவிருப்பிலே,தேவரீர்க்குத்வரைவிஞ்சி, திருநாட்டுக்கெழுந்தருளினல், அடியேன் இத்தை எப்படி ஸஹிப்பேன்என்று அமுதனரும் அழுதுக்லேசிக்க ; ஆழ்வானும் (செழுந்திரைப்பாற்கடல்கண்டுயில்மாயன்றிருவடிக்கீழ்) என்றும், (இருப்பிடம் வைகுந்தம்வேங்கடம்மாலிருஞ்சோலை) என்றும்,(அங்கயல்பாய்வயல் தென்னரங்கனணியாகம் ) என்றும், அநுபவித்துக்கொண்டதேவரீர், "வெண்ணய்பிடித்து நெய்க்கழுகிறதென்,எம்பெருமானர்திருவடிகளே தஞ்சமென்றிரும்" என்று அருளிச்செய்தருளினர்; அமுதனரும்,ஆழ்வான்திருவடிகளிலேதெண்டன்ஸமர்ப்பித்து, ஸ்ரீபாததீர்த்தமும் சேர்த்துக்கொண்டு, திருக்கைகளாலேப்ரஸாதிக்க நிறையப்ரஸாதப்பட்டு அஞ்சலித்துக்கொண்டுநிற்க, ஆழ்வானும், அமுதனர்க்கு விடைகொடுத்தருளினர்.

ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளின வ்ர்த்தாந்தம்.

அமுதனுர்க்குவிடைகொடுத்தருளின வநந்தரம், ஆழ்வார்திருமாளிகைக்கருகாக இட்டதிருக்காவணத்திலே, பிள்ளைப்பிள்ளையாழ்வான்திருமடியிலே திருமுடியும், ஆண்டாள்திருமடியிலேதிருவடிகளும், பட்டர்திருமடியிலே திருக்கைகளுமாய்க்கண்வளர்ந்தருளி, ( உகிப்பனவுத்தமர்சிந்தையுள் – எதித்தலைநாதன் இராமாநுசன் தன்னிணையடியே ) என்கிறபடியே உடையவர்திருவடிகளை த்யாநித்துக்கொண்டு கூரத்தாழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளினுர்.(மஞ்சுயர்மாமதிதீண்டநின்றமாலிருஞ்சோலை மணாளர்வந்து– மஞ்சுயர்பொன்மலைமேல்எழுந்தமாமுகில்போன்றுளர்வந்துகாணீர் ) என்று ஸேனைமுதலியாராழ்வார், ஆழ்வானை யருள்பாடிட்டருள, ஆழ்வானும் சடக்கெனஎழுந்திருந்து தெண்டனிட்டு,(முழுசிவண்டாடியதண்டுழாயும், மொய்ம்மலர்க்கண்ணணியும்மேனியஞ்சாந்திழிசியகோலமிருந்தவாறுமெங்ஙனந்சொல்லுகேன்) என்று, இவன் * காஷ்டபாஷாணஸங்கிபனேயாகிலும், நான்எப்படி ஸஹிப்பன்என்று அருளிச்செய்தபடியே * உலகமளந்தபொன்னடியையடைந்து, ( அணிபொழிற்றிருவரங்கத்தம்மானே ) என்று – பெருமாள்திருவுலகளந்தருளினதிருவடிகளை பாதேயமாக எழுந்தருளாநிற்கச்செய்தே, அவ்வழகியமணவாளப்பெருமாள்தாமே இவருக்குக் கையாளாகஎழுந்தருளி தேசாந்தரகதனை புத்ரனை மாதா உகந்து எடுத்தணைக்குமாப்போலே ஆழ்வானையெடுத்தணைத்து, அத்தவாளத்தலையாலேமுடிக்கைக்கொண்டுலோகங்களெல்லாங்கடந்து *முடிவில்பெரும்பாழானமூலப்ரக்ருதியையும்கடந்து, இப்பாலுள்ளவைகளெல்லாவற்றையுங்கடந்து, அம்ர்தவாஹிநியான விரஜையைச்சென்று கிட்டி,அம்ர்தவாஹிநியான விரஜையிலேநீராடி,சுத்தஸத்வாத்மகமாய்,திருமேனியெல்லாம்பொன்னுய், (தம்மையேநாளும்வணங்கித்தொழுவார்க்குத் தம்மையேயொக்கவருள்செய்வராதலால்) என்று,திருமங்கையாழ்வார்அருளிச்செய்தபடியேதிருவாழியையும், திருச்சங்கையும்,தரித்துக்கொண்டு,திருவபிஷேகங்களையுடையனுய்நானப்பொடிபீதகவாடை—*விரையார்நறுஞ்சாந்தங்கொண்டுஜ்நூறுதிவயாப்ஸரஸ்ஸுக்களும்,நித்யஸூரிகளும்,எதிரேவந்து,(கதிரொளிதீபங்கலசமுடனேந்தி)என்கிறபடியே ஆழ்வானை எதிர்கொண்டுஸத்கரிக்க,ஆழ்வானும்பரமபதத்துக்கெழுந்தருளாநிற்கச்செய்தே,(கூரகுலமன்னர்வந்தார்,கோயில்வாழுமவர்வந்தார், வாதியர்காலன்வந்தார், வாக்கிறுல்வென்றூர்வந்தார், வேதமுடிசூடிய வேதவ்யாஸர்வந்தார், இலைத்தளயடியாக எதிராஜர்க்கினியார்வந்தார், எதிராருமில்லாதார்வந்தார், சதிராகஎழுத்திட்டார்வந்தார், சகலகுணஸம்பந்நர்வந்தார், ஸ்ரீகூரத்தாழ்வான்வந்தார், தனக்கு விரோதியான நாலூரானுக்குந் தன்பேறுஅளித்தார்வந்தார், பதக்கென்றெழுத்திட்ட பராசரபட்டர்வந்தார்,வந்தார்) என்றுஎங்கும்பொற்களம்மாறுடியூதிற்

று, செம்பொனல்சின்னந்திகழநின்றூதிற்று, ஆழ்வானும்பரமபதத்திலேஎழுந்தருளி பாதபீடத்திலே அடியிட்டு, ஸ்ரீவைகுண்டநாதன் திருவடிகளிலே தெண்டன்ஸமர்ப்பித்துநிற்க, ஸ்ரீவைகுண்டநாதனும் ஆழ்வானைஎடுத்தணைத்து,பெரியபிராட்டியார்திருக்கையிலேகாட்டிக்கொடுக்க,பெரியபிராட்டியாரும்இவரைமார்விலணைத்து,மதுரமானகடாக்ஷத்தாலேகுளிர்விழியப்பார்த்து,ஸ்ரீவைகுண்டநாதன்திருக்கையிலேகொடுக்க,ஸ்ரீவைகுண்டநாதனும்,ஆழ்வான் *இந்தவானவர்நாட்டையும்நீகண்டுகொள்என்றருளிச்செய்தருள,ஆழ்வானும்பூவளரும்திருமகளால் அருள்பெற்றுப்புறப்பட்டு*உத்தம்ஸிதாஞ்சலியாய்நிற்க, *எதிரெதிரிமையவரிருப்பிடம்வகுக்க,ஆழ்வானும்அஞ்சலித்துக்கொண்டுநிற்க, திருநாட்டிலேஒருஅபிஷேகம்வைத்தாப்போலே(ஆஹமந்நமஹமந்நம்)' அஹமந்நமஹமந்நம்) என்று அநுபவித்துக்கொண்டுஹ்ருஷ்டராய் எழுந்தருளியிருந்தார். நித்யஸூரிகளோடே ஒருகோவையானார்.

—❧❧✻❧❧—

உடையவர்,கூரத்தாழ்வான்திருநாடலங்கரித்ததைப்பற்றிக்லேசித்தது.

ஆண்டாளும்பிள்ளையாழ்வானைப்பார்த்து,இப்படிஆழ்வான்திருநாட்டுக்கெழுந்தருளினாரென்று உடையவர்க்குவிண்ணப்பஞ்செய்துவாரும்' என்ன, பிள்ளையாழ்வானும், வங்கிபுரத்துநம்பியைப்பார்த்து, இப்படி ஆழ்வான்திருநாட்டுக்கெழுந்தருளினாரென்று உடையவர்க்குவிண்ணப்பஞ்செய்துவாரும்என்ன, வங்கிபுரத்துநம்பியும் மடத்தேறவிடைகொண்டு, எம்பெருமானார்திருவடிகளிலேதெண்டன்ஸமர்ப்பித்து, இப்படி ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளினாரென்று விண்ணப்பஞ்செய்ய; எம்பெருமானாரும் இத்தைக்கேட்டு, கன்றிழந்தபசுப்போலே திருவுள்ளங்கலங்கி, (ஒருமகள்தன்னையுடையேனுலகம் நிறைந்தபுகழால், திருமகள்போலவளர்த்தேன்செங்கண்மால்தான்கொண்டுபோனான்,)(நல்லதோர்தாமரைப்பொய்கைநாண்மலர்மேற்பனிசோர, அல்லியுந்தாதுமுதிர்ந்திட்டழகழிந்தாலொத்ததாலோ, இல்லம்வெறியோடிற்றாலே என்மகளைஎங்குங்காணேன் மல்லரையட்டவன்பின்போய்மதுரைப்புறம்புக்காள்கொலோ)ஆழ்வான்!*வாராய்(வந்திடாய்)(நீகாணவாராய் (காண்பதெஞ்ஞான்றுகொலோ)காணுமாறருளாய்)(கள்வன்கொல்யானறியேன்கரியானொருகாளைவந்து வள்ளிமருங்குலென்றன் மடமானினைப்போதவென்றுவெள்ளிவளைக்கைப்பற்றப்பெற்றதாயரைவிட்டகன்று, அள்ளலம்பூங்கழனி யணியாலிபுகுவர்கொலோ) என்று பரபக்தி பரஜ்ஞாநபரமபக்திகளால், ஜ்ஞாநபக்திவைராக்யங்களையுடையராய் ஆசார்யபூர்த்தியும்'சிஷ்யபூர்த்தியுமுடைய இவ்வாழ்வானைவைத்துக்கொண்டிருக்கப்பெற்றோமில்லையே! என்று அருளிச்செய்து போரக்லேசிக்க ; அப்போது அருளாளப்பெருமாளெம்பெருமானார் ஸ்ரீமதுரகவிகளைய்

போலே பஞ்சமோபாய நிஷ்டராய்க்கொண்டு எழுந்தருளியிருக்கை யினுலேயும், தேவரீருடையபரமக்ர்பையினுலேயும், இத்தனையெல்லா ம்ப்ரஸாதித்தருளிற்று: இப்படிப்பட்டஆழ்வானுக்குத்திருவுள்ளங்கல ங்கவேண்டுவதில்லை என்று விண்ணப்பஞ்செய்தார்.

—❦—

கூரத்தாழ்வானை ப்ரஹ்மமேதத்தாலேஸம்ஸ்கரித்து, திருவத்யயநமும் பெருக்கநடத்தியருளியது.

எம்பெருமானுரும்ஸ்ரீபாதத்தின்முதலிகளைப்பார்த்து நம்முடைய ஆழ்வானைத் திருப்பள்ளிபடுத்துவாருங்கோள் என்று வேண்டுந்திருக் கைவழக்கமாருதிருக்கப்ரஸாதித்து, பின்பு பெருமாளுடைய திருமா லைப்ரஸாதங்கள், களபப்ரஸாதம்,பரியட்டப்ரஸாதம்முதலான வரிசை களையும் வாத்யகோஷத்துடன்வரக்காட்டியருளினுர். எம்பெருமானுர் ஸ்ரீபாதத்தில்முதலிகளும்பெருமாள்பரிகரமுமாகஆழ்வான்எழுந்தருளி யிருக்கிறஆழ்வார்திருமாளிகையிலேயெழுந்தருள,பட்டரும்,எம்பெரு மானுர்ஸ்ரீபாதத்தில் முதலிகளையும்,பெருமாள்பரிகரத்தையுங் கூட்டிக் கொண்டு,தாம்(సర్వకర్మాణి సూత్రేణ కాయత్ర్యా వైష్ణవేన చ। నారాయణానువాకేన స్థాపయేత్పితరం సుతః) (ஸர்வகர்மாணிஸூத்ரேணகாயத்ர்யாவைஷ்ணவேநச। நாராயணுநுவாகேநஸ்த்தாபயேத்பிதரம்ஸுத:)என்றுஞ்சொல்லுகிறபடி யே,ஆழ்வானைத்திருமஞ்சநம்பண்ணித்திருவொற்றுவாடைசாத்தி,திரு ப்பரியட்டம்சாத்தி, திருமண்காப்புச்சாத்தி, திருமுடிச்சீலை சாத்தி, ஆழ்வானுக்குத்திருக்கோலமுமணிந்து, முதலிகளைத்தீர்த்தங்கொண்டு சுருளமுதுபரிமாறி வேண்டிக்கொண்டு அநந்தரம்திருசூர்ணமிடித்து, எல்லாருமெண்ணெய்சுண்ணங்கொண்டாடி, அநந்தரம் ஆழ்வானைத் திருத்தேரிலே ஏறியருளப்பண்ணி (కేశవార్పితసర్వాఙ్గం శరీరం మఙ్గళావహమ్। న ప్రదాహయేద్విప్రో బ్రహ్మమేధవిధిం వినా) (கேசவார்ப்பிதஸர்வாங்கம் சரீரம்ம ங்களாவஹம் । நப்ரதாதாஹயேத் விப்ரோப்ஹ்மமேதவிதிம்விநா) என் றும், (బ్రహ్మమేధవిధిం ప్రోక్తం మునిభిర్బ్రహ్మతత్పరైః। మహాభాగవతానాం వై కర్తవ్యమిదముత్తమమ్) (ப்ர்ஹ்மமேதவிதிம்ப்ரோக்தம்முநிபிர்ஹ்ம்ப்ரமதத்பரை:।மஹா பாகவதாநாம்வை கர்த்தவ்யமிதமுத்தமம்) என்றுஹாரீதஸ்ம்ர்தியிலே சொல்லுகையாலே, மஹாபாகவதரான கூரத்தாழ்வானுக்கு பட்டர் ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்துப் பள்ளிபடுத்தார் ; ஆண்டாளும் கர்தார்த்தையாய், முதலிகளும் திருக்காவேரியிலேநீராடி, பட்டர் திரு மாளிகையிலேஎழுந்தருளி, ஆழ்வான்எழுந்தருளினுரென் றெழுந்தரு ளாதே, நெடுநாள் * திருவரங்கன்திருப்பதியிலே எழுந்தருளியிருந்து பகவத்விஷயத்தை ப்ரஸாதித்துக்கொண்டு, (శతం జీవ శరదో వర్ధమానః)(ஶத ஞ்சீவஶரதோவர்த்தமாந:) என்கிறபடியே,ஆசீர்வாதங்களைப்பண்ணித் தந்தாம்திருமாளிகையிலே எழுந்தருளினுர்கள்;பட்டரும்ஆண்டாள்தி

ருவடிகளிலேதெண்டன்ஸமர்ப்பித்துதிருமுத்துதிரளஎழுந்தருளியிருக்க, ஆண்டாளும், ஆழ்வானுக்காகஎம்பெருமானார்எழுந்தருளியிருக்க க்லேசிக்கிறதென்னவென்று திருமுதுகைத்தடவி, திருக்கண்மலரைத்துடைக்க,எம்பெருமானாரும் மடத்திலும் தளிகைவரவிட்டருளினார்; இவர்களும் அமுதுசெய்துஎழுந்தருளியிருந்தார்கள்; அதின்மற்றைநாள்எம்பெருமானாரும்ஸ்ரீபாதத்தில்முதலிகளைப்பார்த்து,நம்முடையவாழ்வானுக்குப்பன்னிரண்டுநாளில்க்ரியையும்நடக்கும்படிக்குவேண்டுந்திருக்கைவழக்கமாராதிக்க ப்ரஸாதித்துவரக்காட்டியருளினார், பன்னிரண்டுநாளையில் க்ரியையும்முடிந்தபின்பு திருவத்யயநம் நடத்தவேணும்என்று பட்டர் உடையவரையும், அரையரையும், ஸ்ரீவைஷ்ணவர்களையும் எழுந்தருளப்பண்ணிக்கொண்டுபோய், (శుభాదౌ ద్విజవర్యైశ్చ సర్వసంపచ్ఛుభావహమ్। సహస్రశాఖాధ్యయనం కారయేద్వైదికోత్తమః)(ஸுபாதௌத்விஜவர்யைஸ்சஸர்வஸம்பச்சுபாவஹம்|ஸஹஸ்ரஸாகாத்யயநம்காரயேத்வைதிகோத்தம:) என்றும், (అశుభాన్తే విశేషేణ ద్రావిడీ బ్రహ్మసంహితా। అధ్యేతవ్యా ద్విజవరై రాద్యంగీత సహస్రకమ్) (அசுபாந்தேவிஸேஷேணத்ராவிடீ ப்ரஹ்மஸம்ஹிதா| அத்யேதவ்யாத்விஜவரைராத்யம்கீத ஸஹஸ்ரகம்) என்றுஞ்சொல்லுகிறபடியேபுஷ்பாஞ்சலிபண்ணிசாத்தி, (నాతః పరతరం తీర్థం వైష్ణవాంఘ్రిజలాచ్ఛుభాత్। తేషాం పాదరజః పుణ్యం గంగామపి పునాతి హి) (நாத:பரதரம்தீர்த்தம்வைஷ்ணவாங்க்ரிஜலாச்சுபாத்|தேஷாம்பாதரஜ: புண்யம்கங்காமபிபுநாதிஹி) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸ்ரீபாததீர்த்தத்தைசேர்த்து ஸ்வீகரித்து அதின்மற்றைநாள், (యథా తుష్యతి దేవేశో మహాభాగవతార్చనాత్। తథా న తుష్యతే విష్ణుః విధివత్స్వార్చనాదపి) (யதாதுஷ்யதிதேவேஸோமஹாபாகவதார்ச்சநாத்|ததாநதுஷ்ய தேவிஷ்ணு: விதிவத்ஸ்வார்ச்சநாதபி)என்றுஞ்சொல்லுகிறபடியே ஸ்ரீவைஷ்ணவர்களையமுதுசெய்வித்துஸத்கரித்தருளினார்.

—❧—

## அழகியமணவாளன், பட்டரையும் சீராமப்பிள்ளையையும் உடையவர் திருக்கையிலேகாட்டிக்கொடுத்தது.

அதின்மற்றைநாள்பட்டரும்ப்ராத்ர்ஸஹாயராய்ஸ்ரீவைஷ்ணவர்களுடன் கூடப்புறப்பட்டுவந்து எம்பெருமானார்திருவடிகளிலேஸேவித்துநிற்க ; எம்பெருமானாரும், (బహుమానేన మహతా హనూమన్తమవైక్షత) (பஹுமாநேநமஹதாஹநூமந்தமவைக்ஷத) என்னும்படி விசேஷகடாக்ஷம்செய்தருளி, பட்டருள்ளிட்டாரையுங் கூட்டிக்கொண்டு ப்ரதக்ஷிணமாகஎழுந்தருளிவைநதேயனையும்ஸேவித்து, உள்ளேபுகுந்து, பெருமாளைஸேவிக்கப்பண்ணியருளி, ஆழ்வான்திருநாட்டுக்கெழுந்தருளினாரென்றுவிண்ணப்பஞ்செய்ய; பெருமாளும் இளையாழ்வீர்,

நாம்இந்தஆத்மாவை அன்றேபுத்ரஸ்விகாரம்பண்ணிக்கொண்டோமே, நம்புத்ரரானபட்டரையும், சிராமப்பிள்ளையையும் ஆழ்வானைப்போலே ஸம்ரக்ஷணம்பண்ணிக்கொண்டுவாரும்என்று வினவியருளித்தந்திருமகனைவாகிதோன்ற, பட்டரை ஆதரத்துடன் அருள்பாடிட்டு, ஆழ்வான்போனாரென்று வ்யாகூலப்படவேண்டாம், நாமேஉமக்குபிதாமுதலானாரெல்லாரும்என்று அருளிச்செய்து, (తత్సూనుం స్వసుతమతాన్నిజాం స్పుదానాత్ సశ్రీకశ్రుతిగురుభట్టనామధేయమ్) (தத்ஸூநும்ஸ்வஸுதமதாங்நிஸாம்புதாநாத் – ஸச்ரீகச்ருதிகுருபட்ட நாமதேயம்) என்கிறபடியே அபிமாநித்து, (வேதமுன்விரித்தான்) என்னும்படிவிசேஷமாக "வேதாசார்யபட்டர்" என்றுதிருநாமமும்ப்ரஸாதித்து, தீர்த்தப்ரஸாதங்களும் சடகோபனும் ப்ரஸாதிக்கப்பெற்று க்ர்தார்த்தராயிருக்க, உடையவரும் தேவரீர்இவருக்கு ஆயுஸ்ஸைப்ரஸாதித்தருள, அடியேன் வித்யையை அப்யஸிப்பிக்கிறேன்என்றுவிண்ணப்பஞ்செய்து, ஒருரு த்வயத்தைப்ரஸாதித்து, விசேஷாபிமாநம்செய்தருளி, ஒருச்லோகத்தை திருமுன்பேசொல்லிவைத்து சுற்றும்பிற்றும்பார்த்து "நம்முடையவர்களெல்லாரும் இவரைநம்மைக்கண்டாப்போலே காணுங்கோள்" என்றருளிச்செய்து, அநந்தரம்நாய்ச்சியார்ஸந்நிதியிலேகொண்டெழுந்தருளிஸேவிக்கப்பண்ண, நாய்ச்சியாரும்அப்படியே புத்ராபிமாநம்பண்ணியருள ※பூவளருந்திருமகளாலருள்பெற்றுப்புறப்பட்டு உடையவருடனேஸேவித்துகொண்டு மடமேயெழுந்தருள ;

—※—

பட்டர் உபந்யாஸத்தைக்கேட்டு முதலிகள்கொண்டாடியது.

உடையவரும் எம்பாரையழைத்தருளி, பட்டரைஅவர்திருக்கையிலேகாட்டிக்கொடுத்து, இவர்தர்சநப்ரவர்த்தகராம்படி தர்சநார்த்தங்களையெல்லாம்ப்ரஸாதியுமென்று நியமித்தருள ; அவரும் அப்படியே கைக்கொண்டு,ஸகலார்த்தங்களையும்ப்ரஸாதித்தருளி,ஒருநாள்ஒருச்லோகத்தைத்திருமுன்பே உபந்யஸிக்கச்சொல்ல; அவரும் அப்படியேஉபந்யஸித்தவநந்தரம், அத்தைக்கேட்டருளி, (జనకానాంకులే కీర్తిమాహరిష్యతి మే సుతా)(ஜநகாநாம்குலேகீர்த்திமாஹரிஷ்யதிமேஸுதா)என்கிறபடியே, நமக்கும், ஆழ்வானுக்கும்,உடையவருக்கும் அதிசயத்தைவிளைத்தீரே! என்றுமிகவும்உகந்தருளினார்.இத்தை,(భట్టార్యాయప్రపత్తింహ్యదిశదథవరదార్యో విదామ్నాయమౌలేరర్థం శ్రీభాష్యమస్యాప్యపిచ యతివరాదేశతోర్థాన్రహస్యాన్ । యశ్చోక్తోదేశికేన్ద్రైర్యతివరచరణచ్ఛాయ నామార్యవర్యైః స్తం గోవిన్దార్యమస్మత్కులగురుమమితం జ్ఞానవైరాగ్యమీడే) (பட்டார்யாயப்ரபத்திம்ஹ்யதிஸததவரதார்யோவிதாம்நாயமௌலேரர்த்தம் ஸ்ரீபாஷ்யமஸ்யாநபிசயதிவராதேஸதோர்த்தாந்ரஹஸ்யாந் । யஸ்சோக்தோதேசிகேந்த்ரோயதிவரசரணச்சாயநாமார்யவர்யை ஸ்தம்கோவிந்தார்யமஸ்மத்குலகுருமமிதஜ்ஞாநவைராக்யமீடே ) என்றும் அநுஸந்தித்தார்கள்.

17-2-87.

ஆசார்ய சேஷத்வம்முறைதவற வொண்ணாதென்கிற த்வரையும், சரமதசையில் *ப்ராணப்ரயாணபாதேயமாகஸ்வாசார்யன்தானே த்வயத்தை விடாய்கெட உபதேசிக்கப்பெற்றதன்னேற்றமும், பகவதபிமாநஸ்த்தலத்திலும் ததீயாபிமாநஸ்த்தலமே சரம்தசையாகப் பெற்ற தன்னேற்றமும், ஆழ்வான்பக்கலிலே அநுஷ்டாநசேஷமாகக்கண்டதிறே.

ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளின ஆறும்மாஸம் தத்துல்யரானமுதலியாண்டானும் அப்படியே நூற்றைந்துதிருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்து, திருநாட்டுக் கெழுந்தருளினார். உடையவரும், ஆண்டான் எழுந்தருளின வன்று, "இன்று இருவருங்கூடப் பரமபதத்தேற எழுந்தருளுவர்கள்" என்றருளிச்செய்தார். அதுக்குமேல் சிலநாள்சென்றபின்பு ஆழ்வானுடையவிச்லேஷம்ஸஹிக்கமாட்டாமல் பிள்ளையுறங்காவில்லிதாஸரும் பரமபதத்துக்கெழுந்தருள, அவருடைய விச்லேஷம் ஸஹிக்கமாட்டாமல் (மாரிமாக்கடல்) இத்யாதிப்படியே பொன்னாய்ச்சியாரும் பரமபதத்துக்குப் போக, இருவரையும் பள்ளிபடுக்கும்படி பட்டரைக் கட்டளையிட்டனுப்ப, அவரும் அப்படியே செய்வித்தருளினார்.

---

உடையவர் பள்ளிகொண்டருளியது.

ஏவம்விதரான ஆழ்வானுடைய சரமதசாவைபவம் சதுரமாக நடந்த வநந்தரம், உடையவரும் பெருமாளுடைய ஸ்ரீகார்யமாராய்ந்துகொண்டு, (భాష్యరఙ్గమివాపరమ్) (பாஷ்யரங்கமிவாபரம்) என்று, ஸ்ரீரங்கசாயியான பகவானைப்ரகாசிப்பிக்கிற ஸ்ரீபாஷ்யத்தையும், (மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்றதமிழ்மறைகளாயிரமும்) என்றும் சொல்லுகிறதிருவாய்மொழியையும்,இவர் அஹோராத்ரம் நடத்திக்கொண்டு பகல்ஸ்ரீபாஷ்யத்திலேகாலக்ஷேபமாய், ராத்ரி குடிநீர்பாலமுதுசெய்து திருப்பள்ளியிலே யேறியருளினால், *பாலோடமுதன்னவாயிரமான திருவாய்மொழி யநுபவத்திலே பரவசராயிருக்க; அத்தசையிலே முதலிகளெல்லாருங் கூடி அவருடைய அநுபவபாரவச்யதையை அநுபவித்துக்கொண்டிருந்து அங்குத்தையின் ஸௌகுமார்யத்தாலே (కూరేశ దాశరథి సౌమ్యవరాభిధానయోగీన్ద్రవన్ద్య పదపఙ్కజయోగిరాజ। శేషాద్రిరుహ్యశయనం మహనీయ మార్యవర్యైరభిష్టుతయశాజగతాంహితాయ) (கூரேஶதாசரதி ஸௌம்யவராபிதாநயோகீந்த்ரவந்த்ய பதபங்கஜயோகிராஜ। ஶேஷ்வாதிருஹ்ய ஶயநம்மஹநீய மார்யவர்யைரபிஷ்டுதயஶாஜகதாம்ஹிதாய) என்கிறபடியே ஜாகரூகராய்க் கண்வளர்ந்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; அநந்தரம், (శ్రీరఙ్గరఙ్గరత్నకేశరా నఙ్గరత్నకేశచారు

మూర్తయే। భోగిభోగశయనీయశాయినే మాధవాయమధువిద్విషేనమః) (க்ஷீராஸாகரதரங்கஶீகராஸாரதாரகிதசாருமூர்த்தயே । போகிபோகஶயநீயஶாயிநே மாதவாயமது வித்விஷேநம:) என்றும், * பள்ளியாவது பாற்கடலரங்கமாகையாலே * நாகத்தணைப்பாற்கடல் கிடக்கும் ஆதிநெடுமாலை * யோகத்திலே அணையா நின்றுகொண்டு *அரவத்தமளியில் படியே எங்கும் காவலடைத்து நிர்ப்பாராய், (యానిశాసర్వభూతానాం తస్యాంజాగర్తిసంయమీ। యస్యాంజాగ్రతిభూతాని సానిశాపశ్యతోమునేః) என்றும், (వాసుదేవప్రసుప్తోస్మి యావన్నోదయతేరవిః। అహన్యావన్నివత్స్వామిసర్వభూతహితాయవై) என்கிற அநுஸந்தாநத்துடனே ததகதசித்தராய்க்கண் வளர்ந்தருளப்புக்கார்.



உடையவரைத்திருப்பள்ளியுணர்த்தியது.

பெருமாள் ச்ரிங்கிபேரபுரத்திலே இங்குதீவ்ர்க்ஷத்தின்கீழே பள்ளிகொண்டருளினபோது, (నియమ్యపృష్ఠేతుతలాఙ్గుళిత్రవాన్ శరైస్సుపూర్ణావిషుధీపరన్తపః। మహద్ధనుస్సజ్యముపోహ్యలక్ష్మణో నిశామతిష్ఠత్పరితోస్యకేవలమ్॥ తతస్త్వహంచోత్తమబాణచాపధృత్ స్థితోభవంతత్రసయత్రలక్ష్మణః। అతన్ద్రిభిర్జ్ఞాతిభిరాత్తకార్ముకై ర్మహేన్ద్రకల్పంపరిపాలయంస్తదా) என்று லக்ஷணகுஹாதிகள் நோக்கினாப்போலவும், கடற்கரையிலே மஹாராஜருள்ளிட்டமுதலிகள் நோக்கினாப்போலவும், காவேரிக்கரையிலே (உலகமுண்டுமிழ்ந்தகற்பகத்தை)என்கிறகல்பகச்சாயையிலே பள்ளிகொண்டருளுகிறயதீந்த்ரரானஇவரையும் உறங்காவில்லிதாஸர் போல்வாரானராமாநுஜவேளைக்காரர், ஸ்ரீகுஹதாஸர்,ஹநுமத்தாஸர்முதலானோர் நோக்கிக்கொண்டுபோந்தார்கள். இப்படி(శ్రీమాన్సుఖసుప్తః) (ஸ்ரீமாந்ஸுகஸுப்த:)என்னும்படி, ஸ்ரீமானானராமாநுஜனும் பள்ளிகொண்டருளினவநந்தரம், (ప్రభాతాయాన్తుశర్వర్యాం పృథువక్షామహాయశాః। ఉవాచరామస్సౌమిత్రిం లక్ష్మణంశుభలక్షణమ్। భాస్కరోదయకాలోయం గతాభగవతీనిశా। అసౌసుకృష్ణోవిహగః కోకిలస్తాతకూజతి। బర్హిణానాఞ్చనిర్ఘోషః శ్రూయతేనదతాంవనే। ఉష్యరాత్రింతుతత్రైవ గఙ్గాకూలేసరాఘవః। భరతఃకాల్యముత్థాయశత్రుఘ్నమిదమబ్రవీత్। శత్రుఘ్నోత్తిష్ఠకింశేషే నిషాదాధిపతింగుహమ్। శీఘ్రమానయభద్రన్తే తారయిష్యతివాహినీమ్) என்று ராமாநுஜர்களை ப்ரபாதகாலஸூசகமான அடையாளங்களைச்சொல்லி எழுப்பினாப்போலவும்,(செங்கழுநீர்வாய்நெகிழ்ந் தாம்பல்வாய்கூம்பினகாண்) என்றும், ப்ரபாதஸமயஸூசகமான அடையாளங்களைச்சொல்லி,எல்லாரையும்எழுப்பிப் பின்பு, (செம்பொற்கழலடிச் செல்வாபலதேவா உம்பியும் நீயும் உறங்கேல்) என்று நம்பி மூத்தபிரானைத் திருப்பள்ளியெழுப்பினாப்போலேயும், ததவதாரமான இவரையும் திருப்பள்ளியுண

ர்த்தி, பின்னையும் இவர் ஆசார்யப்ரேமாதிகளாலுண்டான வைபவத்தையும், பகவத்ப்ரேமாதிகளாலுண்டான வைபவத்தையும் சொல்லி,



## உடையவரைத் திருப்பள்ளியுணர்த்துகைக்காக முதலிகளருச்செய்த ஸுப்ரபாதம்.

ததீயர் திருப்பள்ளியுணர்த்த உபக்ரமித்து (జయజయ యతిసార్వభౌమా మలస్వాన్తతుభ్యన్నమో జయజయ జనిసిన్ధుమగ్నాత్మసన్తారక గ్రామణీః। జయ జయ భజనీయ కూరేశముఖ్యైః ప్రసీద ప్రభో జయజయ విదుషాంనిధే జాగృహి శ్రీనిధే జాగృహి ॥౧॥ పూర్ణార్యపూర్ణకరుణా పరిబృబోధ వైరాగ్య భక్తిముఖదివ్యగుణామృతాబ్ధే। శ్రీయామునార్యపదపఙ్కజరాజహంస రామానుజార్య భగవం స్తవసుప్రభాతమ్ ॥౨॥ ఆ సేతుమద్య వరదస్య గజాద్రిభర్తుః పానీయమచ్ఛమతిశీతమగాధకూపాత్। ధ్వాన్తం నిరస్తమరుణస్య కరైస్సమస్తా ద్రామానుజార్యభగవం స్తవసుప్రభాతమ్ ॥౩॥ శ్రీరఙ్గరాజపదపఙ్కజయోరశేష కైఙ్కర్యమాకలయితుం సకుతూహలత్వమ్। ఉత్తిష్ఠ నిత్యవిధిమప్యఖిలఞ్చ కర్తుం రామానుజార్యభగవం స్తవసుప్రభాతమ్ ॥౪॥ త్వాం శిక్షితుం సముపయాతి వృషాచలేన్ద్ర స్త్వత్సంప్రక్లృప్తవరశఙ్ఖరథాఙ్గపాణిః। సంయోజితామరసిమాం భవతైవ బిభ్ర ద్రామానుజార్యభగవం స్తవసుప్రభాతమ్ ॥౫॥ శ్రీమత్కురఙ్గపరిపూర్ణ విభుస్త్వదుక్తం శ్రీభాష్యశాస్త్రమనులం త్వయి భక్తియుక్తః। శ్రోతుం సమిచ్ఛతి యతీన్ద్ర సితోర్ధ్వపుణ్డ్ర స్తమ్బోధ యార్థసుఖిలం తవసుప్రభాతమ్ ॥౬॥ శ్రీభాష్యమాలిఖితుమాత్తవిశాలలేఖ్య శ్రీవత్సచిహ్నగురురానతదివ్యగాత్రః। వేదాన్తసూత్రమపి వక్తుమముష్య సర్వముత్తిష్ఠ లక్ష్మణమునే తవసుప్రభాతమ్ ॥౭॥ శ్రీమాన్ సపూర్ణవటురాదరతః ప్రగృహ్య శ్రీపాదుకాం యతిపతే పదయోః ప్రయోక్తుమ్। ద్వారి స్థితిం పతనుతే నతార్థిహారిన్ రామానుజార్యభగవం స్తవసుప్రభాతమ్ ॥౮॥ కాషాయవస్త్ర కటిసూత్ర కమణ్డలూంశ్చ శ్రీదన్తకాష్ఠమపి దేశికసార్వభౌమాః। పాణౌ నిధాయ నివసన్తి విశుద్ధగాత్రా రామానుజార్యభగవం స్తవసుప్రభాతమ్ ॥౯॥ త్వాం బోధయన్తి గురవః ప్రథితా మహాన్తః శ్రీవైష్ణవాశ్చ యమినస్తవపాదభక్తాః। ఏకాన్తినశ్చ విమలాస్త్వదనన్య భావాస్తాన్ పాలయాద్య యతిశేఖరసుప్రభాతమ్ ॥౧౦॥ బ్రాహ్మే ప్రబుధ్య విబుధాస్స్వగురూన్ ప్రణమ్య రామానుజాయ నమ ఇత్యసకృద్బ్రువాణాః। అష్టాక్షరం సచరమం ద్వయముచ్చరన్తి రామానుజార్యభగవం స్తవసుప్రభాతమ్ ॥౧౧॥ ప్రాతస్సరన్తి సరసి ప్రవణ ప్రపన్నా గాయత్రి మన్త్రిశతమష్టశిరస్కమచ్ఛమ్। శ్రీవైష్ణవాస్తవపదాబ్జనిః ష్టభారాః రామానుజార్యభగవం స్తవసుప్రభాతమ్ ॥౧౨॥ ఆరాధనం రచయితుం కమలాసఖస్య శ్రీయాదవాచలపతేర్వివిధోపచారైః। పాతుఞ్చ దృష్టికమలేన నతానశేషాన్ రామానుజార్యభగవం స్తవసుప్రభాతమ్ ॥౧౩॥ సంసేవ్య సప్తశతసంయమిసార్వభౌమైః స్వద్దేశికైస్సకలశాస్త్రవిదాం వరిష్ఠైః। ఏకాన్తిభిః పరమభాగవతైశ్చ సేవ్య రామానుజార్యభగవం స్తవసుప్రభాతమ్ ॥ ౧౪ ॥ గద్యత్రయం నిగమశేఖరదీపసారౌ శ్రుత్యర్థసఙ్గ్రహమపి ప్రథితఞ్చ

నిత్యమ్। గీతార్థభాష్యమపిదేశికపుఙ్గ వానాంవాతుంప్రసీదయతిశేఖరసుప్రభాతమ్ ॥౧౫॥ పాదామ్బుజంయతిపతేశ్శరణం విహర్తుంపఙ్క్త్యసంసరణవారిధితర్తుకామాః। ఆయాన్తిహస్త కమలాభిధృతోపచారాః తాన్పాహితేకరుణయాతవసుప్రభాతమ్ ॥౧౬॥ స్నాతుంకవే రతనయాసలిలేషుశిష్యైరాచార్యపుంఙ్గవవరైర్యతిభిర్విశుద్ధైః । శ్రీవైష్ణవైశ్చసహసేవ్యమ హానుభావైరామానుజార్యభగవంస్తవసుప్రభాతమ్ ॥౧౭॥ என்று இத்யாதிகளா லும் திருப்பள்ளியுணர்த்த, உள்ளினின்றும் புறப்பட்டருளி;



உடையவர் திருப்பள்ளியுணர்ந்து ஸ்வாசார்யன் தொடங்கி எம்பெருமான்வரையில் அநுஸந்தித்து நீராட்டத் துக்குப்புறப்பட்டருளியது.

அவ்வளவிலே கந்தாடையாண்டான் திருக்கைகொடுக்க, இப்பால் யமுனைத்துறைவனென்கிற திருமண்டபத்திலே எழுந்தருளியிருந்து, சுத்தாசமநம்செய்தருளி, பரிசுத்தராய் காலையெழுந்திருந்த விவர், (காலைநன்ஞானத்துறைபடிந்தாடி)என்கிறபடியே,குருபரம்பரா பூர்வகமாக (திருமால் திருநாமம் நானும் சொன்னேன் நமருமுரைமின்) என்கிறபடியே த்வயத்தை ஸார்த்தமாக அநுஸந்தித்து,ஸ்வாபிமாநாந்தர்ப்பூதரையும்அநுஸந்திக்கும்படி நியமித்தருளி,பின்னும் (వాసుదేవాదిదివ్యానాం నామ్నాంసఙ్కీర్తనంచరేత్) (வாஸுதேவாதிதிவ்யாநாம் நாம்நாம்ஸங்கீர்த்தநம்சரேத்) என்கிறபடியே மற்றுமுள்ள திருநாமங்களையும் ப்ராப்யபுத்த்யா அநுஸந்தித்துக் கொண்டு, (ప్రత్యూషేగురుపాదపద్మయుగళంధ్యాత్వాథతద్దేశికాన్ సేవిత్వా క్రమశో భరంభగవతిన్యస్యాత్మనోనిర్వృతః । ధ్యాత్వాగ్రేపరమేపదేమణిమయే శ్రీమణ్టపేహీంశమ ధ్యాసీనంపరవాసుదేవమభితస్సంసేవితంసూరిభిః॥ శ్రీశానాంమనసైవరఙ్గపురతోనిష్క్రమ్య భూమిష్వరఙ్గప్రాంపక్షిణ్యావశాదహంభగవతస్సంప్రాప్యదివ్యాలయాన్ । తత్తద్ధామనికే తనాన్ భగవతోరఙ్గేశితుర్విగ్రహాన్ నానాకారజుషశ్శుభాస్పదరసాన్ సేవేముకీన్ద్రిస్తతః) என்கிறபடியே பெரியபெருமாளுக்குமாகாரமாய் * வைகுந்தம் கோயிலான பரத்வமே தொடங்கி பெரியகோயில்முதலான அநேகம் கோயில்கள்தான் அர்ச்சாவதார பர்யந்தம் மாநஸாநுபவமாக அநுஸந்தித்து மக்நமநாவாய்ப் பின்பு ப்ராங்முகராய்ப்புறப்பட்டருள; அவ்வளவிலே வடுகநம்பியும் திருவடிநிலைகளிலே தெண்டன் ஸமர்ப்பித்துத் திருவடிநிலைகளைக் கொண்டுவந்து திருமுன்பே வைக்க; உடையவரும் கோலவடி நிலைகளைத் தொடுத்துப் புறப்பட்டு இப்பால் எழுந்தருளுகிறவளவிலே, * தொண்டர்குழாமெல்லாம் திரண்டுவந்து திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பிக்கக்கண்டு கடாக்ஷித்தருளி * புண்டரீகபாதத்தை அவர்கள்முடிக்கு நநமாக

ப்ரஸாதித்து ப்ரஸந்நராக்க; அவர்களும்கைங்கர்யோபகரணமான கநித்ரபிடகச் சாத்ரப்ர்ங்காதிகளை தரித்துக்கொண்டுஉடனேஸேவித்துக்கொண்டுபோர;

உடையவர் நீராட்டஞ்செய்தருளி ப்ராதராநுஷ்டாநஞ் செய்தருளியது.

அநந்தரம் அவ்வருகே எழுந்தருளி * குணதிசைபாதம்நீட்டின ப்ரதேசத்தைக்குறித்து ஸேவித்து, அநந்தரம் ஆதிகேசவப் பெருமாள்கோயிலுக்கு உத்தரதிக்காய் உத்தரகாவேரீ தீரமான தவராசன் துறையான தந்துறையிலேஇறங்கி தண்டகமண்டலாதிகளைக் கரையருகில் பரிசுத்தஸ்தலத்திலே வைத்து, அபரிக்ராஹ்ய தேசத்திலே ஆவச்யகமான திருமேனிசோதனையும் பண்ணி, உத்த்ர்தமான உதகத்தாலே யதா சாஸ்த்ரோக்தமாக (యతీనాన్తు చతుర్గుణమ్) (யதீநாந்து சதுர்க்குணம்) என்கிறபடியே, ம்ர்த்திகைக் காப்புசாத்தி, ஸ்ரீபாதம் விளக்கி அப்படியே திருக்கைகளும் விளக்கி, கண்டூஷம் செய்தருளி, சுத்தாசமநஞ்செய்தருளிப்ரணவத்தாலே தந்ததாவநம்செய்தருளி, புநஶ்ச கண்டூஷம்செய்தருளி, ஜலபவித்ர்தமான ஜலத்தாலே சுத்தாசமநம் செய்தருளி, ம்ர்த்திகாஸ்நாநார்த்தமாக,(மின்னு சோதி நவமணியும் வேயின் முத்தும் சாமரையும் பொன்னும் பொன்னி கொணர்ந்தலைக்கும்) என்றும், *அகிற்குறடுஞ் சந்தநமும் அம்பொன்னுமணி முத்தும்மிகக்கொணர்ந்து திரையுந்தும்) என்றும், (దుగ్ధాబ్ధిర్జనకో జనన్య హమియం శ్రీదేవపుత్రీవర శ్రీరఙ్గేశ్వరఏత దర్హణమహం కుర్యామితివ్యాకులా । చఞ్చచ్చామరచన్ద్రచన్దన మహామాణిక్యముక్తోత్కరాన్ కావేరీలహరీకరైర్విదధతీపర్యేతిసా సేవ్యతామ్ ) என்றும் சொல்லுகிறபடியே அரங்கநகரப்பன் திருவருள்போலே ப்ரவஹிக்கிற திருக்காவேரியிலே முழுகி, அகமர்ஷணமும் அகமர்ஷண ஸூக்தத்தின்படியே செய்தருளி, ( ధ్యాత్వాగఙ్గాం హరేః పాదాత్ పతమానాం స్వమూర్ధని। ధ్యాయం దేవం పరం బ్రహ్మ యథాశక్తినిమజ్యచ) என்னும்படி ப்ரதிபத்தி பண்ணிக்கொண்டு வல்லவளவும் அதிலே உள்புகுந்து * குள்ளக்குளிரக்குடைந்து நீராடி மெள்ளக்கரையேறி, (ఖణ్డద్వయం శిరశ్చాఙ్గం ప్రత్యేకం పరిమార్జయేత్) (கண்டத்வயம் ஶிரஶ்சாங்கம் ப்ரத்யேகம்பரிமார்ஜயேத்) என்கிறபடியே திருமுடி திருமேனிகளுக்கு தனித்தனியே திருவொற்றுவாடைசாத்தி, அநந்தரம்கடிஸூத்ரகௌபீந காஷாயங்களைதரித்து, கைங்கர்யப்படி திருமண்காப்பு சாத்தியருளி, ஜலபவித்ரபூர்வகமாக சுத்தாசமநம் செய்தரு

ளி, நித்யத்தில்படியே நித்யாநுஷ்ட்டாநங்களையும் நிறைவேற்றி, அவற்றையும் ஸ்ரீரங்கராஜார்ஹமாகவே சிந்தித்து, அஷ்டாக்ஷர பூர்வகமாக காயத்ரீஜபம் செய்தருளினபின்பு,



திருவீதிகளிலுள்ள ஆசார்யபுருஷர்கள் ஸத்கரிக்க உடையவர் திருக்காவேரினின்றும் மடத்துக் கெழுந்தருளியது.

(శ్రీరఙ్గరఙ్గశయమఙ్కరుణానివాసం శ్రీవేఙ్కటాద్రిశిఖరాలయకాళమేఘమ్। శ్రీహస్తిశైలశిఖరోజ్జ్వలపారిజాతం శ్రీశంనమామిశిరసాయదుశైలదీపమ్) என்று புஷ்பத்யாக போகஜ்ஞாநமண்டபங்களையும் திக்கு நோக்கி தண்டன்ஸமர்ப்பித்து (శ్రీరాఙ్గరఙ్గాద్యాన్యోన్యనాం హృదయాదపి। రఙ్గంగత్వా హరిస్త్వత్ర తత్క్రియామితికథ్యతే) என்கிறபடியே * ஒருகாலுடையதேரொருவனாய் * அரங்கமாநகரமர்ந்து கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுக்கு ப்ரீதியாகவேநித்யகர்மங்களைநீங்களும்செய்து போருங்கோள்என்று சிஷ்யர்களை யர்சாஸிக்க, அவர்களும் அப்படியே க்ர்தக்ர்த்யர்களாய்வந்து திருவடிகளிலே ஸேவித்த வுடனே திருவடிநிலைகளை சாத்தியருளி (స్తుష్టిపూర్ణంనప్యాణోపాదమ్) என்னும்படி, வடக்குத்திருவீதியிடமே யெழுந்தருளி, நடுவீதியிலேபுக்கு, வீதியார எழுந்தருள, அவ்வளவிலே அவ்வவதிருமாளிகையிலுண்டான ஆசார்ய புருஷர்கள் திருவடிகளிலேபடிந்து ஸேவிக்க, அவர்களையும் ஸந்மாநித்து, அவ்வருகேசென்று, பெரியதிருக்கோபுரத்தையும், திருவாசலையும், திருமதிள்களையும் கண்ணாலேகண் டநுபவியாநின்றுகொண்டு, அத்தோடே ஒத்திருப்பதான மற்றப்ராகார கோபுரங்களையும் பாராநின்றுகொண்டு, ஓங்கி யுயர்ந்திருக்கிற திருமாளிகைகளையும் திருக்கண்சாத்தாநின்றுகொண்டு, அருளிச்செயலைப்பண்ணிசைபாட்டுவிண்ணப்பஞ்செய்வார், இயல்ஸேவிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள், அவர்தம்தேவிமார், திருக்குமாரர்கள்வந்து விருப்பத்துடனே திருவடிகளிலே ஸேவிக்க, அவர்களை ஸவிநயராய் கடாக்ஷியாநின்றுகொண்டு, (ప్రాదక్షిణ్యేనగచ్ఛతి) (ப்ராதக்ஷிண்யேநகச்சந்) என்னும்படி-த்ரிவிக்ரமன்திருவீதியாலே ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி ஸ்வநிவேசநமான மடத்திலே யெழுந்தருளி மலர்ப்பாதங்கள் விளக்கிகூர்மாஸநத்திலே யெழுந்தருளியிருந்து திருமண்காப்புச்சாத்த உபக்ரமித்தருள; அவ்வளவிலே ஸந்நிதியில் கைங்கர்யபரரானவர்கள்திருமுன்னிடந்துடைத்து தீர்த்தப்ரஸாதத்திருமண்கூடை, திருப்புல்கூடை, திருமஞ்சநஶேஷந் தொடக்கமானவற்றைக் கொண்டுவந்து ஸந்நிதியிலேவைத்து தண்டன்ஸமர்ப்பித்துநிற்க,



## கோயில்முதலான திவ்யதேசத்தெம்பெருமான்களுடைய பவித்ரங்களைச் சாத்திக்கொண்டு திருமண்காப்புச் சாத்திக்கொண்டாரென்பது.

அநந்தரம், கோயில், திருமலை, பெருமாள்கோயில் தொடக்கமான திருப்பதிகளிலும் தத்ப்ரஸாதமாகவந்த திருப்பவித்ரங்களைத் திருமுடியிலும் திருக்கழுத்திலும் சாத்திக்கொண்டு, (స్నాతో ధృతోత్తరీయస్తు సోత్తరీయః పవిత్రవాన్ । ప్రాగుదగ్వా సమాసీనః సుగన్ధాం మృత్తికాం సితామ్॥ వామే త్రిశోధితే హస్తే వాగ్యతః ప్రణవేన తు। నిధాయ జలమాదాయ గన్ధద్వారేతి సేచయేత్॥ అస్త్రమన్త్రేణ రక్షాఞ్చ కృత్వా దశసు దిక్ష్వపి । నృసింహబీజఞ్చ లిఖేత్ రక్షార్థం దోషశాన్తయే॥ తామేకీకృత్య తర్జన్యా స్పృత్వా మమపదద్వయమ్। శతధారేతి మన్త్రేణ తీర్థతోయం వినిక్షిపేత్॥ తారమన్త్రేణ సంమృజ్య మూలమన్త్రేణ యోజయేత్ । సప్తభిర్వైష్ణవైర్మన్త్రైర్మన్త్రయిత్వా యథావిధి॥ శ్రీశ శ్రీభూమిగాయత్రీర్జప్త్వా తద్గతమానసః। ఉద్ధృతాసీతి మన్త్రేణ దేవం సంప్రార్థ్య వైవిభుమ్॥ హరేః పాదాకృతిం రమ్యం ఊర్ధ్వపుణ్డ్రం ప్రకల్పయేత్। లలాటే కేశవాయేతి చతురఙ్గులమాయతమ్ ॥ ద్వ్యఙ్గులం త్ర్యఙ్గులం వాపి సాన్తరాళం ప్రకల్పయేత్। కుక్షౌ నారాయణాయేతి ధారయేత్తు దశాఙ్గులమ్॥ వక్షఃస్థలే మాధవాయ న్యసేదష్టాఙ్గులం తథా। గోవిన్దాయేతి మన్త్రేణ కణ్ఠే చ చతురఙ్గులమ్। విష్ణుఞ్చ దక్షిణే కుక్షౌ ధారయేత్తు దశాఙ్గులమ్। న్యసేదష్టాఙ్గులం బాహౌ దక్షిణే మధుసూదనమ్। త్రివిక్రమం దక్షిణాంసే ధారయేచ్చతురఙ్గులమ్॥ వామనం వామకుక్షౌ తు ధారయేత్తు దశాఙ్గులమ్। శ్రీధరం వామబాహౌ తు న్యసేదష్టాఙ్గులం తథా॥ హృషీకేశం వామగళే ధారయేచ్చతురఙ్గులమ్। పృష్ఠే చ పద్మనాభఞ్చ ధారయేచ్చతురఙ్గులమ్। దామోదరం గళే పశ్చాత్ ధారయేచ్చతురఙ్గులమ్ ఊర్ధ్వపుణ్డ్రస్యాన్తరాళే హారిద్రాం ధారయేత్సదా। ధారణాదూర్ధ్వపుణ్డ్రస్య శరీరం మఙ్గళావహమ్) இத்யாதிப்படியே திருமண்காப்புச்சாத்தியருளுகிறபோது திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை, கண்ணிநுண் சிறுத்தாம்பு, ஸ்தோத்ரகத்யங்களின் அநுஸந்தாநத்துடனே திருமண்காப்பும், ஸ்ரீசூர்ணகாப்பும், சாத்தியருளினவநந்தரம்,



## உடையவர் திருமண்காப்பு சாத்திக்கொண்டவநந்தரம் பகவத்த்யாநஞ்செய்தருளினபடி.

(చతుశ్చక్రం నమస్యామి కేశవం కనకప్రభమ్। నారాయణం ఘనశ్యామం చతుశ్శఙ్ఖం నమామ్యహమ్॥ మాధవం మణిభఙ్గాభం చిన్తయామి చతుర్గదమ్ । చన్ద్రభాసం చతుశ్శార్ఙ్గం గోవిన్దముపసంశ్రయే॥ విష్ణుం చతుర్హలం వన్దే పద్మకిఞ్జల్కసన్నిభమ్ । చతుర్ముసలమబ్జాభం సంశ్రయే మధుసూదనమ్॥ అగ్నివర్ణం చతుఃఖడ్గం భావయామి త్రివిక్రమమ్। వామనం బాలసూర్యాభం చతుర్వజ్రం విభావయే॥ శ్రీధరం పుణ్డరీకాభం చతుఃపట్టిసమాశ్రయే। చతుర్ముద్గరమభ్యేమి హృషీకేశం తటిత్ప్రభమ్॥ పఞ్చాయుధం పద్మనాభం నమస్యామ్య

ర్చురోచిమ్। దామోదరం చతుఃపాశ విద్రుమోపనిభం భజే॥ ఊర్ధ్వపుణ్డ్రేష్వధిశ్రీశం నిత్యం ధ్యాయేత నామభిః। కేశవాద్యేషు పుణ్డ్రేషు మధ్యే ధృత్వా సుపావనమ్॥ హరిద్రాచూర్ణమైశ్వర్యం లక్ష్మీరూపమనుత్తమమ్। శ్రీర్లక్ష్మీః కమలా కాన్తా పద్మినీ కమలప్రియా॥ వృద్ధిదా ధారణా చరమోపాపద్మవాసినీ। సర్వలోకస్య మాతేతి నామభిః క్రమశో న్యహమ్॥ ధ్యాయేత్ పరమైకాన్తీ శరీరాత్మవిశుద్ధయే) இத்யாதிப்படியே த்யாநச்லோகமும் அநுஸந்தித்து, பொருந்தின திருவடிகளான * தென்னரங்கன் கழல் சென்னிவைத்து, * தென்னத்தியூரர் கழலிணைக்கீழ் பூண்டவன்பாளராய்த்தொழுது, * திருமாமகள் கேள்வனான திருவேங்கடமுடையானுடைய பூவார்கழல்களை, (கோலமாமென் சென்னிக்குன் கமலமன்னகுரைகழல்) என்றுசிரோபூஷணமாகதரித்து, * திருமாலிருஞ்சோலைநின்ற நலந்திகழ் நாரணனுடைய கணைகழல்களையும் அப்படியே * தொழுது* யமுனைத்துறைவரிணையடியாங்கதி பெற்றுடையராய் ஸேவித்து இப்படி ஸ்ரீயபதியான எம்பெருமானைத் தொடங்கி ஸ்வாசார்யபர்யந்தமாக குருபரம்பரையினடைவே எல்லார் திருவடிகளையும் ஸேவித்து,



உடையவர்தம் திருவாராதநமான பேரருளாளரைத் திருவடி விளக்கியருளி அழகியமணவாளன மங்களாசாஸநஞ் செய்ய ஸந்நிதிக்கெழுந்தருளியது.

தம்முடைய திருவாராதநமான பேரருளாளன் திருமுன்பே எழுந்தருளி, (గురుపరంపరయా పరమగురుం భగవన్తం ప్రణమ్య) என்கிறபடியே குருபரம்பரா பூர்வகமாக, திருமந்த்ரத்தையும் சரணாகதியையும், அர்த்தஸஹிதமாக அநுஸந்தித்து, ஸாஷ்டாங்கதீர்க்க ப்ரணாமம் பண்ணி அநந்தரம், சரமச்லோகாநுஸந்தாநத்தாலே நிர்ப்பரராய், தமக்கு ஸாதநத்தில் அந்வயமில்லாமையாலே தத்கைங்கர்யரூப ஸமாராதநத்திலே தத்பரராய், (தூநீர்வண்ணமாமலர்கொண்டு விரையேந்தி) என்று சொல்லுகிறபடியே ஸமாராதநோபகரணங்களையும் ஸம்பந்நமாக்கி, தத்பூர்வபாவியாக (మనసైవార్చయేద్ధరిమ్) என்கிறபடியே மாநஸதிருவாராதநமும் செய்தருளி, அநந்தரம் தாம் செய்தருளின நித்யதிருவாராதநக்கட்டளையிலே திருவாராதநம் செய்தருளி பலாதிவஸ்துக்களையும் நிவேதித்தருளி, மந்த்ரபுஷ்பம் ஸமர்ப்பித்து ஸாஷ்டாங்க தீர்க்கப்ரணாமம்பண்ணி, * வேதாந்த விஜ்ஞாநஸுநிஸ்சிதார்த்தரானதாம், சிஷ்யர்களுக்குத் பாஷ்யபாடத்தமுவாய்தொடங்கி ப்ராஸித்து, சீக்ரமாக சேஷசாயியான பெரியபெருமாளை ஸேவிப்பதாக சிஷ்யப்ரசிஷ்யர்களுடனே புறப்பட்டருளி, ஸ்ரீரங்கநாய்ச்சியாரை ஸேவித்து நிந்க, காருண்யரூபையான

ருபையான பெரியபிராட்டியாரும்விசேஷகடாக்ஷம்பண்ணியருளி, தீர்த்தம் திருமாலை முதலான வரிசைகளையும் ப்ரஸாதித்து ஸத்கரித்தருள, (సీతామాశ్రిత్యతేజస్వీ) (ஸீதாமாஶ்ரித்யதேஜஸ்வீ) என்னும்படி அத்யுஜ்வலராய்ப்புறப்பட்டு ஆழ்வார்கள்பதின்மரையும் அப்படியே பணிந்து, பரமபதநாதனையும் ஸேவித்து, ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி, திருமங்கையாழ்வார்திருப்பணிகளாயுள்ள கோபுரம்,திருமதிள்,திருக்கொட்டாரம்தொடக்கமானவற்றையும் கடாக்ஷியாநின்றுகொண்டு, * அணியரங்கன்திருமுற்றத்தில்சென்று ஸ்ரீபலிபீடத்தருகே தெண்டன் ஸமர்ப்பித்து, உள்ளே யெழுந்தருளி, கோயிலாழ்வாரை வலம்செய்து, ஸேனை முதலியாரையும் ஸேவித்து, அநந்தரம் ஸந்நிதியிலே அழகியமணவாளன்திருமண்டபத்திலேசென்று, பெரியதிருவடியைமுன்னிட்டுக்கொண்டு, பெரியபெருமாள்திருவடிகளிலே, (అనన్తానన్తశయన పురాణపురుషోత్తమ। రఙ్గనాథజగన్నాథనాథతుభ్యం నమోనమః) என்று ஸேவித்து, ஸ்ரீமத் பாதாரவிந்தபரிஸரத்திலேநின்று ஆபாதசூடம் அநுபவித்து, * அமலனாதிபிரான் * திருப்பள்ளியெழுச்சி * திருமாலைதொடக்கமான ப்ரபந்தங்களை அநுஸந்தித்துக்கொண்டு நிற்கிற வளவிலே, பெரியபெருமாளும், தீர்த்தம் திருமாலை, பரியட்டம், சடகோபன் முதலான வரிசைகளையும்ப்ரஸாதித்து விடைகொடுத்தருளி தம்முடைய செங்கோலையும் அங்குலீயத்தையும் ப்ரஸாதித்து ஸேநாதிபத்யத்திலே நியோகித்தருள;



நம்பெருமாளுக்கு ஸகல கைங்கர்யங்களும் காலகாலங்களிலே நடக்கும்படி பத்துக்கொத்திலுள்ளார்க்கும் கட்டளையிட்டருளியது.

உடையவரும் ரங்காதிராஜருடையஸ்ரீகார்யதுரந்தரரான ஏற்றந்தோற்ற உள்ளிலும் புறப்பட்டருளி பெரியதிருமண்டபத்திலே பெரியமதிப்புடனே எழுந்தருளியிருந்து,(సత్రై)లోక్యనిర్మాణ త్రాణసంహారకారణమ్। శ్రీమచ్ఛ్రీరఙ్గనాథస్య శాసనంశాశ్వతంపరమ్)என்கிற ஸ்ரீமத் ஸ்ரீரங்கராஜருடைய ஸ்ரீமச்சாஸநத்தின்படியே பெரியகோயில் கைங்கர்யம்பண்ணிப்போருகிற கோவணவர்க்குடவர், பட்டர்கள், ஸ்வாமிக்குஉடைவாளும் சட்டையும் எடுக்கும் * தோதவத்தித் தூய்மறையோருள்ளிட்டார், நம் மிராமாநுச முடையாரென்று அபிமாநிக்கும்படியான நாநாதேசத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்கள், பண்ணிலே பாடுவாரான விண்ணப்பம் செய்வார், தழையிடுவார், பெருமாளுக்குத் திருமஞ்சநமுமெடுத்துத் திருமாலையும் கட்டுவார்,

திருவாசல் காக்கும் ஆரியர்கள், பெருமாளுக்குத் திருவடிப்பந் தம்பிடித்துத், திருத்தோப்புச்செய்யும் ஸ்ரீபுண்டரீகருள்ளிட்ட பத்துக்கொத்திலுள்ளாரும், ஆசாரவ்ர்த்தங்கள் குறைவின்றியே பெருமாளுக்கு கைங்கர்யமாக நிவேதித்த கார்யத்துக்கு நல்லருமாய், நம் சடகோபன், கலியனுள்ளிட்டார்ப்ரபந்தங்களிலே பரிசீலநமுடையாரையும் மிகவும் க்ர்பை பண்ணிக்கொண்டு கீழுக்தரானவர்களை அவ்வவ ஸ்ரீகார்யங்களிலே நியோகித்தருளி, அவர்களுக்குண்டான பணப்ரஸாதங்களும் நடக்கும்படி கட்டளையிட்டருளி,



பலவிதமான தொழிலாளிகளை ஏற்படுத்தியது.

பின்பு, ஸ்ரீகார்யத்துக்குப் பரிவரான திருவேளைக்காரர், திருப்படைவீட்டுக்குக் கடைக்காவலாக விருக்கும்பாடிகாப்பார், திருவீதிதோறும் ஆராய்ந்துபோரும் தலையாரிகள், திருவீதி செப்பனிடுவார், திருமஞ்சனவழி திருத்துவார், திருக்காவேரிக்கரைகாப்பார், சுற்றுக்கோயில் செப்பனிடுவார், பெரியகோயிலுக்குப் பலதொழிலான ஊழியம்செய்து போருவார், ஸுவர்ணரஜததாம்ர காம்ஸ்ய அயஸ்காரர், கடபடாதிநிர்மாணகரான குலாலாதிகள், ரதகோபுராதி நிர்மாணகரானதக்ஷர், மண்டபாலய ப்ராஸாதாதிகளுக்கு உடலான பாஷாணபேதகரான தக்ஷர், மற்றும் தததநுகுணமான நிமந்தத் தொழிற்காரர், ப்ரதிமாதி நிர்மாணகரானதக்ஷர், சித்ரக்காரர், ரதமண்டபாலங்காரங்களுக்கு உசிதமாகத் தததநுகுணவஸ்த்ரங்களை விவிதசித்ரமாக்குகைக்குத்துன்னர், விஸ்த்ராஞ்சகர், நாட்யம் பழக்குகிறநாட்யவர், நாட்யத்துக்கநுகுணமான நாரிகள், பலசரக்குகள் கோயிலுக்குக் கொண்டுவந்து சேர்க்கும் செட்டிவ்யாபாரிகள், கோயிலுக்கு பாலமுது நெய்யமுதுக்குடலாக மாட்டுத்திறமாராய்ந்து போரும் கோபாலர் முதலானாரையும் அவ்வவ கைங்கர்யங்களிலே நியோகித்து அவர்கள் பெறும்பேறுகளான கணக்கரையும் விசாரித்து.

அநந்தரம் சோழநாட்டில் வடகரை, தென்கரை, கீழ்மாகாணம், மேலை மாகாணம், திருவிடையாட்டங்களிலே பொன்னும், நெல்லும் பொலிவுடனே செல்லும்படியையும் கணக்கின்படியே ஆராய்ந்து கணிகரைக்கொண்டு பரிகணிப்பித்து தாலபத்ரத்திலேலிகிப்பித்து, சென்றவகைக்குப் பத்துமுறியும் தம்முடைய திருவெழுத்து முன்னாகவே கொடுப்பித்து, அநந்தரம் நாநாதேசத்திலும் வந்திருக்கும் கோதூமசாலியவமாஷமுத்கதிலசணகாதி

களான பலபண்டங்களும், மரீசி ஜீரகஸர்ஷபலவணம் முதலான ஸம்பார த்ரவ்யங்களையும், * திருவருட்கமு கொண்பழுத்தது போலே யான அதில் அஷ்டபாகக்ரமுகத்தையும் ஸம்பந்தமாக்கி அங்குத்தைக்குஉசிதமான (ஐலாநஸ ) என்று அவற்றையும் அங்குத்தைக்கு அஷ்டதிவஸத்துக்கொருக்கால்வரும்படி ஆராய்ந்து, கர்ப்பூர கஸ்தூரி காச்மீரம்ர்கமதம், நீஹாரநீரம், ஏலாலவங்க தக்கோலஹாரித்ரம் முதலானவைகளும் அழைப்பித்துப் பேழைகளிலே சேர்ப்பித்து, சந்தநபாரத்தைஎங்கும்நிரப்பி,(முத்தும்மணியும்வைரமும் நன்பொன்னும் தத்திப்பதித்து) என்னும்படி நாநாரத்நங்களாலும் விசித்ரமாகச்செய்துபோரும் பலவான திருவாபரணங்களினிடையாட்ட மாராய்ந்து, ( ) என்றும், * பொன்னொத்தவாடை * பொன்னிறவாடை என்னும்படியானவற்றை தரிக்கும் வஸ்துவுக்கு, கார்ப்பாஸதந்துக்ர்தவஸ்த்ரம், ஊர்ணநாபிதந்துக்ர்த வஸ்த்ரம், அதில்நாநாவர்ணமானவஸ்த்ரங்கள், அதில் சௌஸூம்பஹேமவிரசிதவஸ்த்ரம், முக்தாஸந்தர்ப்பஸம்யுக்தமானவஸ்த்ரம், அப்படியேயான முத்தின்குடை, அதின்படியேயான குல்லாமுதலானவைகளும், இப்படி * வரைச் சந்தநக் குழம்பும் வான்கலனும் பட்டும் விரைப்பொலிந்த வெண் மல்லிகையும் நிரைத்து, இனி திருமடைப்பள்ளிக் குடலான நிலாக்குப்பல் போலே யிருக்கிற தண்டுலராசி, ஸூவர்ணம்போலே யிருக்கிறஸூபராசி பநஸாம்ரகதளீநாரிகேளகாரவல்லி கபித்தவ்ர்ந்தாககாமலகாதி பலபலவ்யஞ்சந ராசிகளையும், ஸர்வபலப்ரதவஸ்துவுக்குண்டாக்கி கந்தமூலாதிகளையும் அழைப்பித்து, கீழ்ச் சொன்னவைகளெல்லாம் சமையும்படி அஜ்ஜீர்யங்களான காஷ்டபாரங்களையும் காலாநுகுணமாக அழைப்பித்து, அவற்றை கோஷ்டாகாரப்ரமிதசத்திலே ஸர்வதோபமமாக சேர்த்து த்துவைத்துப் போக சதுரராய் நாய்ச்சியார் பரிசரமாய்ப் போருகிற திருவெள்ளறையில் பங்கயச் செல்விபரிகரமானவர்களையும் கொண்டு, சதுர்விதாந்நமாகச் சமைக்கும்படி கட்டளையிட்டு,

அப்படி சமைத்தவுடனே ஸரஸமாய்ப்படைத்து நீட்டும்படி க்ஷீராஜ்ய சர்க்கராதிகளும், (தூங்குண்பலவின்கனி தொகுவாழையின்கனியோடு மாங்கனி) என்னும்படியான பலத்ரயவர்க்கத்தையும் ஸபலமாம்படி யிடுவித்து, (* அப்பங்கலந்த சிற்றுண்டி) (கன்னலிலட்டுவத்தோடுசீடை காரெள்ளினுண்டை) * பேர்த்தும் பெரியன அப்பந் தொடக்கமான திருப்பணியாரவர்க்கத்துக்கு உடலாகதண்டுலாதியான பலபண்டங்களும், கண்டசர்க்கரைசமையும்படி நெய்யமுதும்விட்டு, இப்படி திருப்பவளத்துக்

கினிதானவை சமையும்படியும் ஆராய்ந்து, அநந்தரம் ச்ரவண ஸுகமாகவும் த்ர்ஷ்டிப்ரியமாகவும், (முன்னல்யாழ் பயில்நூல் நரம்பின்முதிர்சுவையே)என்று-காநஸ்வரூபியானவனுக்கு அநுகுணமாக ச்ராவ்யமாய், நாநாவிதமான யாழ், குழல், வீணை, கிந்நரி, முகவீணை வாசிப்பாரைக் கட்டளையிட்டு, மண்டபக் கொத்திலுள்ளாரையும் *பல் நடம் பயின்றுடும்படி கட்டளையிட்டு, அநந்தரம், காலவிதாயகர்சொன்ன காலங்களுக்கு அநுகுணமாக கைங்கர்யங்களை ஆராய்ந்து, திருப்பணி திருவாராதநச் செலவுபோக நீக்குண்டாவ தனங்களைக் கருகூலத்திலே சேமிப்பித்து, அவ்விடங்களுக்கெல்லாம் தம்முடைய திருவாழி முதலான பலவிலச்சினையும் இடுவித்து அரண்செய்து, அநந்தரம் கருகூலத்திலுண்டான கைவழி, திருவாபரணம், திருப்பரியட்டம் முதலானவை நன்றாகசோதித்து, பரிஹாரமாக வைப்பித்து, அநந்தரம், திருமாலைப்பலகையிலே யெழுந்தருளி நாநாவிதங்களாலே கட்டின கலம்பகன் திருமாலை நாநாவர்ணங்களாலே வகைந்து கட்டின வைஜயந்திமாலை நீட்டுவாரையும், திருமஞ்சந அறையிலும் ஏலாதிஸம்ஸ்க்ர்தமான திருமஞ்சநம் நீட்டுவாரையும், அப்படியே சாத்துப்படி திருத்துமிடங்களில் நின்று மர்த்திச்சு சாத்துப்படி நீட்டுவாரையும், கநஸாரஸஹிதமான அடைக்காயமுது அடிக்கடி நீட்டுவாரையும், கடாக்ஷித்துக்கொண்டு,

கைங்கர்யோபகரணமான சத்ரசாமர தாலவ்ர்ந்த பதத்க்ரஹ காளாசிகாதிகளையும், கநகப்ர்ங்காரஸ்வர்ண கடாதிகளையும், படைத்து நீட்டுகிற ஸ்வர்ணரஜத பாத்ரங்களையும், அதின்படியேயான படிக்கம், குத்துவிளக்கு, திருமுன்வட்டில்கள், ஸ்வர்ணதண்டாதிகளையும்கண்டு களியா நின்றுகொண்டு இப்பால் எழுந்தருளி, ஸ்வர்ணரூபமானஸுபர்ணாநந்தாச்வாதி வாஹநங்களையும் வந்தியா நின்றுகொண்டு இப்பால் இருவருமானசேர்த்திக்கு இனியபேச்சுகள் பேசுகிற சுகசாரிகாதிகளையும் ஆராய்ந்து அவற்றின் இனிய பேச்சுக்களையும் கேளாநின்றுகொண்டு, இப்பால் ஆடுவார், பாடுவார், ஸுவர்ணபேர்யாதி வாத்யங்கள் கொட்டுவார், அத்தாலே பண்ணப்பட்டகாஹளாதிகள் ஊதுவாரிருக்கிறகோலாஹலங்களையும் *வெள்ளை விளிசங்கின் பேரரவத்தையும் கேட்டுக்கொண்டு மெள்ளத் திருமடைப்பள்ளி யருகே எழுந்தருளி, திருப்பணியாரங்கள் நன்றாகச் சமைக்கும்படியையும், திருப்போனகம் சமைக்கும்படியையும், கறியமுது சமைக்கும்படியையும், அவைஸஸ்நேஹ ஸம்பார பரிதமாக்கி அவைகட்டி நீட்டும்படியையும், நியமியா நின்றுகொண்டு, வ்யஞ்சநபண்டாரத்தருகே யெழுந்தருளி, அவற்

றின் புஞ்சங்களையும் அவலோகித்து, மஞ்சுளமானவற்றில் அஞ்சநாபராய், (நெய்ச்சுவைத்தேறல்) என்னும்படியான ஸாரஸவஸ்துவுக்குகப்பாகத்தொட்டியிலே நெய்யமுது நிறைந்திருக்கும்படியையும், அவற்றை ஆராய்ந்து உருக்கி அளந்து உள்ளேவிடும்படியையும் ஸம்பாரவர்க்கம் திருத்தும்படியையும் கறியமுது திருத்தும்படியையும் ஆராய்ந்து,

அநந்தரம் இப்பால் சுற்றுக்கோயில்களுக்கு அமுதுபடி, பருப்பமுது, கறியமுது, நெய்யமுது, ஸம்பாரவகைகளும், வெடிவோறே விட்டபடிகளுமாராய்ந்து, திருக்கொட்டாரத் தருகே எழுந்தருளி அமுதுபடி பருப்பமுதுகள் அளக்கும்படியையும், அவலமுது இடிக்கும்படியையும், அவைபொரியமுதாகப் பொரிக்கும்படியையும் பராமர்சித்து, இப்பால் களஞ்சியங்களினருகே திருவரங்கனுக்குத் தகுதியாகத் திருவரங்கன் என்கிற நெல்லும், ஸ்ரீரங்கராஜர் போகத்தளிகைக்குத் தகுதியான ராஜாந்ந நெல்லும், நம்பெருமாளுக்குத் தகுதியான சம்பாநெல்லும், * என்திருமகள் சேர் மார்பனுக்குத் தகுதியான * சீரார் செந்நெல்லும், சேஷசாயிக்குத் தகுதியான * வரம்புற்ற கதிர்ச் செந்நெலான * செஞ்சாலிநெல்லும், மற்றும் பகவத் போக்யமான பஹுவ்ரீஹிவர்க்கஸமூஹங்கள், அதுக்குமேலே கோதூம மாஷமுத்கதிலாதிகளான இவை எல்லாம் அளந்து களஞ்சியங்களிலே சொரியும்படி நியமித்து அப்படியே செய்கிற அவற்றின் ஆரவாரமும் கண்டு கேட்பதாய்க்கொண்டு, நாய்ச்சியார்கோயில் தொடக்கமான சுற்றுக்கோயில்கள் திருச்சுற்றுக்கள் திருவலகு, திருப்பணி, திருவிளக்கு, திருமாலைகள் முதலானவைகளையு மாராய்ந்து,

அநந்தரம், (பாலென்கோ) என்கிற வஸ்துவின் * தித்திக்கும் திருப்பவளச் செவ்வாய்க்கு இனிதாகப் பாலமுது சுரக்கும் திருச்சுரபிகளுக்கு, பாலமுது ரஸிக்கும்படிக்குகருப்பஞ்சாற்றை முன்பு போலே பருகுவிக்கும்படி ஆராய்ந்து, அநந்தரம் தளிகைக்குறுப்பாக தாய பாரங்களை பரித்துக்கொண்டு போரும் எருதுகள், எழுந்தருளும்போது அலங்காராவஹமுமாய் மங்களாவஹமுமான துரங்கமாதங்காதிகளையும், மங்களாவஹமுமாய் பாவநமுமாய் அத ஏவ காட்சிக்குறுப்பான கபிலதேநுவையும் ஆராய்ந்து, அவற்றுக் குறுப்பானவைகளையு மாராய்ந்து, கீழ்உக்தரானக்ரியாசாரகராலே நிர்மிதமான நாநாவிதமான க்ரியைகளையெல்லாம் பரீக்ஷாமுகேநகடாக்ஷியாநின்றுகொண்டு மிகவும் பெரிய திருமண்டபத்திலே எழுந்தருள, அவ்வளவிலே நாழிகைவட்டில் காரர்வந்து ஷோடசகடிகை யாச்சுதென்று விண்ணப்பஞ்செய்ய; இதைப்பு

ர்வமான ப்ராதஃகாலத்திலே, பெரிய பெருமாள் மங்களகீத வாத்யத்துடன் திருப்பள்ளியுணர்த்த மங்களவஸ்துக்களும் கண்டருளி * சிற்றஞ்சிறுகாலே ஆனைமேல் * பூரண பொற்குடத்திலே அலங்காரத்திருமஞ்சநம்வர, பாஞ்சராத்ர தந்த்ரஜ்ஞரான அர்ச்சகமுகேந சிறுகாலைத் திருவாராதநமும், குறைவறக்கொண்டருளி சிறுகாலைச்சந்தியும் நிறைய அமுதுசெய்தருளி. அநந்தரம் பெரிய திருவாராதநம் தொடங்கிநடக்க, அதுக்குடலாக * பேராளன்பேரோதும் பெரியோர், தம்பிரான்மார், பட்டவர்க்கம், இயலிசை வேதவிண்ணப்பம் ஸேவிக்க, எம்பெருமானடியார்களும் நிரைநிரையாகநின்று திருநாமம் ஸேவிக்க, மங்களவாத்யங்கள் எங்குமுழங்க, தூபதீபாதியான ஷோடசோபசாரங்களும் நடந்து இப்படி பெருக்கத்துடனே கண்டருளின அநந்தரம்.

கீழ், தளிகைக்கான அனைத்துவகைகளும் அலங்காரத்துடனே ஆயிரம்வகையாகத்திருமுன்பே நீட்ட பெரிய திருவந்திக்காப்புக் கொண்டருளின வநந்தரம், மீளவும் உள்ளே தம்பிரான்மார் ஸாஸமாகக் கண்ணிநுண் சிறுத்தாம்பு முதலான பாட்டுகள் ஸேவிக்க, தளிகை மேலுக்கு சிலர் நெய்யமுது பரிமாற, சிலர் திருவெண்சாமரம்பரிமாற, திருக்குடக்கையார் திருவொற்றுவாடையுடன் கர்ப்பூரத் தண்ணீரமுது வணக்கத்துடன் அடிக்கடி நீட்ட, இப்படி பெரியமேன்மையோடே பெரியஸந்தியும் அமுதுசெய்தருளி * திருவரங்கச்செல்வரும் பலிப்ரஸாதிக்க, ஸ்வர்ணமயமான திவ்யவிமாநத்திலே ஏறியருளி சதுர்க்கதியுடன் நடந்தருளும்படி ஸாவதாநத்துடன் ஸமர்த்தரானவர்கள் ஸ்ரீபாதம் தாங்க, முக்தாதபத்ரம்பிடிக்க, சஞ்சத்தான சாமரம்பரிமாற, * வெண்துகிற்கொடி * ஆடிபுட்கொடி * குரக்குவெல்கொடி தொடக்கமான அநேகம் கொடிகள் பிடிக்க, திருமுன்பந்தமான பகல்பந்தம் பிடிக்க, பலபல இயங்களார்ப்ப, (ஶங்கபேர்யாதிவாத்யாநி) என்கிற * காளங்கள் வலம்புரிகளான மஹாராஜ சிஹ்நங்கள் ஆர்ப்ப, அந்த ஆரவாரத்துடன் புறப்பட்டருளி, * அணியரங்கன் திருமுற்றத்திலே தாளமத்தளத்துக்கநுகுணமாக அபஸராங்கனைகளுடைய ஆடல்பாடலோடே அப்பாலே எழுந்தருளி பலிபீடத்திலே பலியும் ப்ரஸாதித்து, இப்பால் உள்ளேமீள ப்ரதக்ஷிணமாக எழுந்தருள, அந்தக்ஷணத்திலே அமுதுசெய்தருளின தளிகை வகைகளெல்லாம் ஸ்தலாந்தரத்திலே மாற்றுவித்து, அவற்றில் விசேஷமான அலங்காரத் தளிகை அபூபவர்க்க பாயஸாதிரவர்க்கத் தளிகைகளெல்லாம் சேஷாசநருக்கு நீட்டுவித்து, அவர் அமுதுசெய்தருளினவுடனே, தாம் கடைகட்டி

விட்ட தளிகைவகைகள் எல்லாம் கொண்டுவந்து தம்முடைய திருமுன்பேவைக்க, இப்படி வைத்த அஸங்க்யாதமான அபூபாதி வர்க்கங்களையும், சுத்தோதநாதி தளிகை வர்க்கங்களையும் *(நூறு தடாவில் வெண்ணெய்) (நூறுதடாநிறைந்தவக்கார வடிசில்) (வைத்தநெய்யும் காய்ந்தபாலும் வடிதயிரும் நறுவெண்ணெயும்) என்று உக்தமானவைக ளெல்லாவற்றையும் திருக்கண்சாத்தி, இவற்றைக் குறியழித்திட்டு வைத்தாலாகாதோ என்று வெறுத்தருளிச்செய்து, பின்பு தீர்த்தமும் ஸ்வீகரித்து, ஆமலகப்ரமாணம் க்ர்பாதத்தமாய்வந்த ப்ரஸாதஸ்வீகாரமும் செய்து, இவைகளையெல்லாம் ப்ராப்தியடைவேவிநியோகிக்கும்படி விதேயரானவர்களை நியமித்து, பின்பு பெருமாளை ஸேவித்து, அங்குத்தையில் அநுமதியுடனே மடமே யெழுந்தருளப்புறப்பட்டருள, கோயில் கொத்திலுண்டான அனைவரும் பின்தொடர்ந்துவர அவர்களையும் தத்தத்பரிசர்யைகளிலே ஆஜ்ஞாபித்து நிறுத்தியருளிமடமே எழுந்தருள, அங்கே ஒரொரு ப்ரதேசங்களிலே சப்ததர்க்கம் பின்னையும் ஒரு ப்ரதேசத்திலே பூர்வோத்தர மீமாம்ஸைகளை ப்ரதிபக்ஷ நிரஸநத்துக்கு உறுப்பாக அப்யஸிப்பார், மற்றொரு ப்ரதேசத்திலே ஸ்ம்ர்திதிஹாஸபுராணங்களாலே வேதத்தில் பூர்வோத்தரபாகங்களில் அர்த்த நிஶ்சயம்பண்ணுவார், வேறொரு ப்ரதேசத்திலே வேதங்களையும், தது பநிஷத்துக்களையும் உருச்சொல்லுவார், ஓதுவிப்பார், ஓதுவார், பின்னையும் ஒரு ப்ரதேசத்திலே அருளிச்செயல்களையும் அப்படியே ஓதுவார் ஓதுவிப்பாராய், ததர்த்த நிர்ணயம் பண்ணுவார், திருமந்த்ராதி ரஹஸ்யார்த்த நிர்ணயம்பண்ணுவார், ஸ்ரீபாஷ்யசிந்தனைபண்ணுவார், வேறொரு ப்ரதேசத்திலே அநந்யகதிகளாய் அவருடைய அங்கீகாரத்தை அபேக்ஷித்துக்கொண்டிருப்பார், அதுக்குமேல் ஒரு ப்ரதேசத்திலே ஜிதேந்த்ரியரான ஜீயர்களும் அவர்களுடையசிஷ்யரானவர்களும் நெருங்கிராமாநுஜ நாமாஞ்சிததிவ்ய ப்ரபந்தாநு ஸந்தாநபரராயிருக்க; இப்படி ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயாலேநிபிடிதமாய் அவர்களுடைய பஹுவிதமான அநுஸந்தாந மஹாகோஷமானது நடந்து செல்ல, இவற்றையெல்லாம் ஆதரத்துடனே அவலோகியா நின்றுகொண்டு திருச்செவி சாத்தா நின்றுகொண்டு உள்ளே யெழுந்தருளித் திருமஞ்சநச்சாலையிலே ப்ரவேசித்தருளி, ஸ்ரீபாதம் விளக்கி, கண்டூஷபூர்வகமாக சுத்தாசமநம் செய்தருளி, மாத்யாஹ்நிகசர்த்யமும் நடத்தியருளி, பகவத்ஸந்நிதியிலே எழுந்தருளி இருக்க;

கீழுக்தரான பகவத்பாகவதர்கள் எல்லாம் ஸங்கம் ஸங்கமாகவந்து தச்சரணாரவிந்தங்களிலே ஸாஷ்டாங்க தீர்க்கப்ரணமம்

பண்ண, அவர்களை கருணுகடாக்ஷத்தாலே ஈக்ஷித்தருளி, திவ்ய ஸூக்தி அம்ர்தங்களாலும் ஸந்துஷ்டராக்கியருள, அவ்வளவிலே பகவத்ஸம்பந்தத்தை அபேக்ஷித்துக்கொண்டு ஆஸ்த்திகராயிருப்பார் அநேகர் திருவடிகளிலே ஆச்ரயிப்பதாக, (வந்துசூழ்ந்துபடுகாடுகிடப்ப) என்கிறபடியேஸேவித்துக்கொண்டுகிடக்க அவர்களையும் அப்படியே (యంయంస్పృశతిపాణిభ్యాం) (யம்யம்ஸ்ப்ர்ஶதிபாணிப்யாம்) என்கிறபடியே, திருக்கைஸ்பர்சம்தொடக்கமானபஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்தருளி, பரிசுத்தராக்கி, திருவடிகளோட்டை ஸம்பந்தத்தாலே ஸம்ஸாராதுத்தீர்ணராம்படி அபிமாநித்து, அநந்தரம் ஸந்நிதியிலே எழுந்தருளி ஸாஷ்டாங்கதீர்க்க ப்ரணுமாதிகளைப்பண்ணி, திருவாராதநக்குறைகள் எல்லாம் தாமிட்டருளின நித்யத்தின்படியே நிறைவேற்றி, பேரருளாளப்பெருமாள் பெருக்க அமுதுசெய்தருளின தளிகைமாற்றின அநந்தரம், கைங்கர்ய சேஷத்தையும் மந்த்ரபுஷ்ப ஸமர்ப்பணபர்யந்தமாகப் பூரித்து அநந்தரம் சையாஸநத்துக்குறுப்பாக ச்ராவ்யமான ஸ்தோத்ரங்களையும் அநுஸந்தித்து தண்டன் ஸமர்ப்பித்து நிற்கிறதசையிலே தேசாந்தரிகளாய் திருமலை பெருமாள்கோவில் முதலான திவ்ய தேசங்களிலும் ஸ்ரீகார்யார்த்தமாகஎழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களிடையாட்டம் ஆராய்ந்து அவர்களுக்கும், தமக்கபிமத சிஷ்யரானவர்களுக்கும் ¦ தீர்த்தமும் ப்ரஸாதித்தருளி ஸ்வதீர்த்தம் ப்ரார்த்தித்தவர்களுக்கும் அப்படியே ஆதர பூர்வகமாக ப்ரஸாதித்தருளி அவர்களையும் கூட்டிக்கொண்டு பகவத்யாகாநந்தரம் பாவிதமான அநுயாகம் செய்வாராக எழுந்தருளியிருக்க, அவ்வளவில் ஸ்த்தலசுத்திபண்ணி தளிகைபரிமாறின அநந்தரம், கிடாம்பியாச்சான் தொடக்கமான ஸ்ரீவைஷ்ணவர்கள் பரிவுடன் பரிமாற பரிஷேசநம்செய்தருளி, தீர்த்தமும் அமுதுசெய்தருளி, ஸ்ரீவைஷ்ணவர்களையும் அப்படியே நியமித்தருளி, தாமும் த்வயாநுஸந்தாநத்துடனே இவர்கள் சேர்த்தியிலே கூடியிருந்து அமுதுசெய்தருளி அநந்தரம் அந்வாசந தீர்த்தமும் அமுதுசெய்து திருக்கைமாற்ற ததீய்யருக்கு (త్వదీయభుక్తోజ్ఝితశేషం)(த்வதீயபுக்த்தோச்ஜிதசேஷம்) என்றும், (போனகம்செய்தசேடம்) என்றும், சொல்லுகிற ஸௌபாவநமான திருத்தளிகை ப்ரஸாதமும் ப்ரார்த்தநா பூர்வகமாக ப்ரஸாதித்து, திருக்கைவிளக்கி கண்டூஷணுநந்தரம், சுத்தாசமநம் செய்தருளி, மாத்யந்திந அர்க்க்யப்ரதாநமும் செய்தருளி,

அநந்தரம்யமுனைத்துறைவர் என்கிற திருமண்டபத்திலே யோகபீடத்திலே எழுந்தருளி இருந்து (హృదయేష్టదళే పద్మే అష్టాక్షరసమన్వితే। సూర్యసోమాగ్నిబింబాన్త జ్ఞానపీఠే సుసంస్థితే॥ ఉత్ఫుల్లపుణ్డరీకాక్షం తప్తహాటక

సన్నిభమ్। మన్దస్మితముఖామ్భోజం కరుణాపూరితేక్షణమ్॥ కిరీటహారకేయూరస్ఫురన్మకర కుణ్డలైః। శ్రీవత్సకౌస్తుభాభ్యాఞ్చ వైజయన్త్యాచ భూషితమ్॥ పీతామ్బరం చతుర్బాహుం శఙ్ఖచక్రగదాధరమ్। మాణిక్యనూపురోద్దామగఙ్గాసఙ్గిపదామ్బుజమ్॥ కోటికన్దర్పసౌన్దర్యం కోటిసూర్యసమప్రభమ్। ప్రసన్నమూర్తిం వరదం సచ్చిదానన్దవిగ్రహమ్॥ అనన్తదివ్యకల్యాణగుణరాశివిభూషితమ్। లక్ష్మీసమేతం శేషాది సూరిభిః పరివారితమ్॥ ధ్యాత్వా చ దైవమాకారం మనసా ధారయేత్సదా। తత్పాదపద్మనిష్యన్ద సుధానుభవతత్పరః) என்றும் (శఙ్ఖచక్రగదాపద్మలక్ష్మీకౌస్తుభలక్షణమ్। ప్రసన్నవదనం సౌమ్యం పద్మపత్రనిభేక్షణమ్॥ పీతామ్బరధరం చారు వనమాలావిభూషితమ్। శుద్ధస్ఫటికసఙ్కాశం జ్ఞానమయమవ్యయమ్॥ నిష్కలన్నిరవద్యఞ్చ నిర్గుణం షడ్గుణాశ్రయమ్। అన్యత్సర్వగతం సూక్ష్మమప్రతర్క్యమనామయమ్॥ అశబ్దమక్షయం నిత్యం నిర్వికల్పం నిరఞ్జనమ్। అతీన్ద్రియమనిర్దేశ్యం నామరూపవివర్జితమ్॥ జ్ఞానమయమానన్దమజమగ్రాహ్యమచ్యుతమ్। వాసుదేవాఖ్యమవ్యగ్రం పరమం బ్రహ్మ శాశ్వతమ్॥ ఇత్థం రూపం స్వకం సూక్ష్మం జ్ఞేయం త్యక్త్వైన చిన్తయేత్। యదాక్ష్ణోర్విషయం యాతో రూపాదిర్బాహ్యదేహినః॥ తథైవ భావయేద్వ్యక్తో మనః ప్రత్యక్షతాం హరిః। సన్తతం చిన్తయేద్విష్ణుః యోగయుక్తో గతక్లమః) என்றும் (నాగభోగే సమాసీనం భగవన్తం పరాయణమ్)என்றும் ஶுத்தாஶ்ரயவஸ்துவை யோகத்தாலே அநுபவித்து பின்பு (యత్పదామ్భోరుహధ్యాన)(யத்பதாம்போருஹத்யாந)என்று குருபதாம்புஜத்தையும் நெடும்போது த்யாநித்துக்கொண்டிருந்து,

அநந்தரம் ஆச்ரிதரிடத்திலே திருவுள்ளஞ்சென்று விசேஷித்து அன்று ஆச்ரயித்தவர்களுக்கு தீர்த்தப்ரஸாதங்கள் ப்ரஸாதிக்கும்படி நியமித்து, மற்றுமுண்டானவர்களும் ப்ரஸாதஸ்வீகாரம்செய்தபடியை ஆராய்ந்து, பின்பு எல்லாரும் போந்தாரோ என்று கேட்டருளி, எல்லாரும் யதேஷ்டம் அமுது செய்து ஸந்துஷ்டராய் ஸந்நிதியிலே ஸேவித்துக்கொண்டிருக்க தாமும் ஹ்ருஷ்டராய்ஹர்ஷத்துக்குப்போக்குவீடாகப் பெரியபெருமாளுடைய வீரசரிதமான ஸ்ரீராமாயணம் திருச்செவிசாத்தத் திருவுள்ளமாய் இதிஹாஸஜ்ஞரானபட்டரையும் ஸ்ரீராமப்பிள்ளையையும் படிக்கும்படி நியமித்தருள அவர்களும்,(అగాయతామ్)(సంశ్లిష్టమధురం వాక్యమ్)என்னும்படி உடையவனாயுடையாராகையாலே,கிளி பூவை குயில்மயில் என்று ஸாம்யத்தை யுடையராய் ஆலாபியாநின்றுகொண்டு (கூஜந்தம்) என்று கோகிலம்போலே செவிக்கு இனிதாக் ச்ராவிப்பிக்க, (సభుజ్ త్వాతన్నరశ్రేష్ఠః గీతం మాధుర్యముత్తమమ్। తన్త్రీలయసమాయుక్తం త్రిస్థానకలయాన్వితమ్॥ సత్కృతం లక్షణోపేతం సమతాళసమన్వితమ్। శుశ్రావ రామచరితం యస్మిన్కాలే యథాకృతమ్॥ తాన్యక్షరాణి సత్యాని యథావృత్తాని పూర్వశః। శ్రుత్వా పురుషశార్దూలో విసంజ్ఞో బాష్పలోచనః॥ సముహూర్తమివాసంజ్ఞో నిశమ్య చ ముహుర్ముహుః। సంవృత్తమివ తత్సర్గం తస్మిన్గీతే ప్రశుశ్రువే॥ పదానుగాశ్చ యే రాజ్ఞ స్తాం శ్రుత్వా గీతసమ్పదమ్।

అహాజ్ఞుర్భూశ్చదీనాశ్చ ఆశ్చర్యమితిచాబ్రువన్॥ పరస్పరఞ్చ తేతత్ర సైనికాస్సంబభాషిరే। కిమిదంక్వచవర్తామః కిమేతత్స్వప్నదర్శనమ్॥ అర్థోనఃపురతోదృష్టః స్తమాంశ్రమసదేప్సుఃః। శృణుమఃకిమిదంస్వప్నే గీతమేతాశ్రయోభవేత్॥ తస్మాయస్తే జగ్మ్యా శత్రుఘ్నమిదమబ్రువన్) என்று ராமாநுஜனை சத்ருக்நாழ்வானும், அவர் ஸேனையும் விஸ்மயத்துடன் குசலவர்கள் பாட்டால் ஸ்ரீராமாயணம் கேட்டாப்போலே, *ராமாயணமென்னும் பத்திவெள்ளங்குடிகொண்டகோயில் இராமாநுசனை இவரும் சிஷ்யர்களுடன் விஸ்மயராய்க்கொண்டு விச்தராய் அநுபவபாரவச்யத்தாலே ஆநந்தாச்ருக்களுடன் எல்லார்க்கும் அநுபாவ்யராய் எழுந்தருளியிருந்து, ததிதரபோக்யவஸ்துக்களையும் எண்ணாதே ததேகபரராயிருக்க;

அநந்தரம் ஸாயங்காலமானவாறே ஸர்வாநுஷ்டாநங்களும் தீர்ந்து, திருமுன்பே யெழுந்தருளி ஸாஷ்டாங்க தீர்க்கப்ரணாமம்பண்ணி, (స్థిత్వార్ఘ్యంభానవేసద్యుత్ ధ్యాత్వాదేవంజపేన్మనుమ్)என்றும் (జపసఙ్ఖ్యానుగణనవ్యాహరేణపవిత్రితమ్) என்றும் அஷ்டாக்ஷராநுஸந்தாநபூர்வகமாக காயத்ரீஜபமும் செய்தருளி, அநந்தரம் ஸந்நிதியிலே ஸேவித்து, திருப்பல்லாண்டு தொடங்கியருளி, மற்றுமுண்டான நித்யாநுஸந்தாநம் ஸேவிக்கும்படி சிஷ்யர்களை ஆஜ்ஞாபித்து, அநந்தரம் பெரியபெருமாளிடத்திலே ப்ரவணராய், கோயிலிலே ஸாயங்காலத்திலே ஸேவிக்கிறவேளையிலே சென்று ஸேவித்து, (அன்பேதகளி) என்றுதொடங்கி, (ஞாநச்சுடர்விளக்கேற்றினேன்)என்றும் (పరస్మైహంభరేతోయఃజ్ఞానదీపః)என்றும்சொல்லும்படியான தம்முடைய ஸ்நேஹமாகிற*நெய்த்த அன்படியாக நெய்யாலே எங்கும்பளபளக்கத் திருவிளக்கேற்றி,ஸந்நிதியிலே பொற்றிருக்குத்துவிளக்குகளும்,ஸந்ததம்புழுகு நெய்யோடே கூடின புத்துருக்குப் பசுவின்நெய்யும் பரிமாறியெரியும்படி சமர்ப்பித்தருளி, *உருக்காட்டும் அந்திவிளக்குடன் உள்ளேபுகுந்து,*கருமணியைக்கோமளத்தைக்கண்டு அநுபவித்து தத்காலோசிதமான அநுஸந்தாநத்துடன் *திருவரங்கத்தேகிடந்த திருவுடையாள் மணவாளனுக்கு *செண்பகம் மல்லிகைதொடக்கமான எண்பகர் பூக்களாலே புணர்க்கப்பட்ட மணமாலைகளையும், மாலைக்காலத்திலே சாத்துவித்து, இளநீர் அமுதுசெய்வித்து, * அந்த அந்திப்போதில் * அவுணனுடல் பிளந்தனந்தான் ஸந்நிதியில் க்ஷீராந்நம் அமுதுசெய்தருளி திருவந்திக்காப்புக் கண்டருளின அநந்தரம் தண்டன்ஸமர்ப்பித்துப் புறப்பட்டருளிப்பெரியதிருமண்டபத்திலேயெழுந்தருளியிருந்து, பகல்கொண்டருளினபடியே ராத்ரியும் திருவாராதநம் நடத்துவித்து அமுதுசெய்தருளின அநந்தரம் * திருவரங்கச்செல்வனை எழுந்தருளுவித்துநடைப்பலிகளை நடத்தி, (మహతేదేవతాయాస్యాజుహోవ

ஜ்யோதிஷம்) என்கிறபடியே யாகசாலையிலே த்ரிஸந்தியிலும்ஹோமம் நடத்துவித்து;

அநந்தரம், செல்வர்பல்லக்கு எழுந்தருளுவித்து, சாமீகரரத்நதண்டஸஹிதமான சத்ரசாமராதிகள்பரிமாற, (வெற்றிக்கருளக்கொடி) என்னும்படி விஜயத்வஜமான கருடத்வஜம் தொடக்கமான அநேகத்வஜபதாகாதிகள் எடுக்க,திவ்யாப்ஸரஸ் ஸத்ர்சைகளாய், நாநாவித ஆபரணபூஷிதைகளாய் நாநாவித வர்ணவிசித்ரவஸ்த்ரதரைகளான எம்பெருமானடியார் அக்ரத்திலேந்ர்த்தகீதவாத்யங்களுடனே ஸேவிக்க, ஸுவர்ணரஜத தண்டதரராய்க்கொண்டு வேத்ரபாணிகள் ஸ்தோத்ரம்பண்ண, புனுகுநெய் பசுவின்நெய்பரிமாறி எரிகிற பொற்பந்தங்கள்பிடிக்க எழுந்தருளும்படியையும் நேத்ரோத்ஸவமாக ஸேவித்தருளி,

அநந்தரம் * பள்ளிசொள்ளு மிடத்திலே மெள்ள எழுந்தருளுவித்து, செல்வர் சம்பா அமுதுசெய்வித்துத் திருவுற்றசாமமும் அமுதுசெய்தருளின வுடனே, தங்வந்த்ர்யநுவிதாநம் பண்ணிக்கொண்டு போருகிற பிஷக்குக்களாலே கல்பிதமான கஷாயமமுதுசெய்வித்து, அநந்தரம் கோயிலுள் எங்கும் உள்ளுராரைக்கொண்டு மெள்ளவெங்நீர்த்திருமஞ்சநம்செய்வித்துத்திருப்பரியட்டங்களாலே திருவொற்றுவாடை சாத்துவித்து,சந்தநாதிகளாலே எங்கும் ஆலேபித்து, அநந்தரம் * தூமப்புகை, * சிறுற்ற வகில்புகைகளாலே எங்கும் ஸுரபிதமாக்கி, பட்டுத்திருப்பரியட்டங்களாலே எங்கும் மேல்கட்டுக் கட்டுவித்து, நூறுதிருளித்தரங்கள் நாற்றுவித்து, அப்படியே ஸ்ரீரங்கநாயகியார்கோயில் திருப்பள்ளியறையையும் அலங்கரிப்பித்து, அநந்தரம் (ஶேஷஃபர்யங்கஸ்ஸ்ருதஸுகுஃ ஸுதல்பஃ) என்னும்படியான திருப்பள்ளிக் கட்டில் பரிமாறி குங்குமமெத்தை திருவணைமுதலாக மேல்விரி பர்யந்தமாகப் பரிமாறி, ஏவம்விததிவ்யபுஷ்பபர்யங்கத்தை சாதகும்பமயச்ர்ங்கலாஸூத்ரத்திலேகோத்து டோளாயமாநமா யிருக்கிற அதிலே (குத்துவிளக்கெரியக் கோட்டுக்கால் கட்டின்மேல் மெத்தென்ற பஞ்சசயநத்தின் மேலேறி) என்னும்படி * என் திருமகள்சேர் மார்பனவனை ஸம்ப்ரமத்துடனே சேர்த்தியிலே யெழுந்தருளுவித்து, நாநாவிதமான ஸுகந்தங்களைச் சாத்துவித்து, கர்ப்பூரகஸ்தூரீகுங்குமாதிகளாலே மர்த்திச்சுச் சாத்துப்படி சாத்துவித்து, (வல்லிநுண்ணிதழன்னவாடைகொண்டு வசையறத் திருவரைவிரித்துடுத்து) என்னும்படி ஸௌகுமார்யாநுகுணமாகத் தாமே இவற்றை யெல்லாம் எடுத்துக்கைநீட்டுவாராய் ஸமர்ப்பித்துச்சாத்துவித்து, கர்ப்பூராலத்தியும் கண்டருளப் பண்ணுவித்து,

அநந்தரம் சஜாந்ததிருமாலைகள் முதலானவற்றை ஸேனை முதலியாருக்குச் சாத்துவித்து, பின்னைத் திருப்பள்ளிக்கட்டிலட்டத்திலே பொற்றட்டிலே, (తామ్బూలం స్వీకుర్వన్తు)என்னும்படி * அடைக்காய் திருத்துவித்து, அநந்தரம் இரண்டருகும் பொற்றிருக்குத்துவிளக்கு எரிய பொற்குடத்திலே கர்ப்பூரத்தண்ணீரமுது பூரித்துவைத்து, பொற்கிடாரம் வெள்ளிக் கிடாரங்களிலே பால்குழம்பு சேர்த்து அமுது செய்வித்தவுடனே, திருவெண்சாமரம், திருப்படிக்கம், கலசப்பானை, திருவடிநிலை, உடைவாள், இலைத்தட்டு, காளாஞ்சி, திருவாலவட்டம், சுழற்றி, அடுக்கொலியல் முதலான அத்தாணிச் சேவகமும் செய்வாராய் ஸேவிக்க, அத்தோடே * அரம்பையர்கள் தற்சூழ்ந்து தாலாட்டு ஸேவிக்க, * யாழ் குழல் வீணைவாசிக்க, பின்பு குடிநீர்ப்பாலமுது செய்வித்து, பின்பு * தேனுகிப் பாலாந்திருமாலானவனை * செங்கமலத் திருமகளும் புவியும் செம்பொற்றிருவடியினிணைவருட முனிவர் ஏத்த * பள்ளிகொள்ளுமிடத்தடிகொட்டிட * திருவரங்கத் தரவணையிலே பள்ளிகொண்டருள, (உறகலுறகல்) இத்யாதிப்படியே * பள்ளியறை குறிக்கொண்டு நோக்கும்படி சங்கசக்ராதி திவ்யாயுதங்களையும், திக்பாலகர்களையும், ஸர்வலோகபாலகரான பெருமாளுக்குக் காவல் அடைத்து நிர்ப்பரராய்க் கொண்டு தெண்டன்ஸமர்ப்பித்து (ఉపచారాపదేశేన) என்று தொடங்கி க்ஷமைகொண்டு, ஸ்ரீநிதி கிடக்கிற விடத்துக்குத் திருக்காப்பு சேமிப்பித்துப் புறப்பட்டருளி;

திருமடைப்பள்ளியருகேஎழுந்தருளிஅந்தத்திருமடைப்பள்ளியில் ஒருமையோடற எல்லாம் புறத்திலேஎடுப்பித்துப்போகட்டு, செத்தை குப்பைஎல்லாம் சோதித்து சுத்திபண்ணின அநந்தரம், நாளைக்கு நவபாண்டம் வந்திருக்கிற வகைகளையும் ஆராய்ந்து குலால குலங்களை குறிக்கொண்டு, காலசக்ர நிர்வாஹகனாய் ப்ரஹ்மாண்டங்களையும் ப்ர்ஹ்மாதி பிண்டங்களையும் அனைகிறவனுக்கு நீங்களும் அப்படியே தண்டசக்ராதிகளைக் கொண்டு ம்ர்த்பிண்ட பாண்டங்களைப் பண்ணி காலகாலங்களிலே கொண்டு வாருங்கள் என்று அந்தக் குலாலாதிகளுக்கு நலம்பெற அருளிச்செய்து, அப்படியே கோபாலர்களுக்கும் * நந்தன்பெற்ற ஆனாயனாய் * தோய்த்த தண்டயிர் வெண்ணெய்பாலுடனுண்டு * கற்றினம்மேய்த்து * ஆயனாயன்று குன்றமொன்றெடுத்து, இப்படி *ஆமருவி நிரைமேய்க்கைக்கு * காலிப்பின்போனவனுடைய காலிமாட்டுத் திறமாராயும் கோபாலரான நீங்கள் காலம்பெறப் பாலமுதுகொண்டு வாருங்கோள் என்று கற்பித்து, அவனுக்கு(கண்ணு

லம் செய்யக்கறியும்கலத்ததரிசியுமாக்கிவைத்தேன்) என்னும்படி அமுதுபடிகறியமுது முதலானவை காலகாலங்களிலே கொண்டு வந்துநிறைக்கும்படி அவ்வவத்தொழிற்காரர்களுக்கு அருளிச்செய்து, (பொன்னுறுய்) என்றுபொன்னுமாய், பலநெற்றொகையாய் இருக்கிறவனுக்கு பொன்னும் நெல்லும் வந்து செல்லும்படி திருவேளைக்காரர், தேசாந்த்ரிகள்,ராஜமநுஷ்யர் முதலானுரையும் அனுப்பியருளி, (రామః క్ష్మాంశ్శాస్తా) இத்யாதிப்படியே எல்லார்க்குமாகத் தான் பாரித்திருந்து காக்குமவனுக்குப் பாலித்திருந்து காக்கும்படியும் கற்பித்து, பத்துக்கொத்திலுண்டானவர்களும் மற்றுமுண்டானவர்களும் பற்றிஸேவித்துவர மடமே யெழுந்தருளி அவர்களை அனுப்பி யருளி அனைத்துவர்க்கமும் ஸேவித்துநிற்க, அவ்வவர்களையும் யதாஸ்த்தாநங்களிலே போம்படி நியமித்தருளி,

திருமஞ்சநச்சாலையிலே யெழுந்தருளி ஸ்ரீபாதம்விளக்கித்திருப்பவளம்மாற்றி, சுத்தாசமநம் செய்தருளி தம்முடைய திருவாராதநமானபேரருளாளர்ஸந்நிதியிலே தண்டன் ஸமர்ப்பித்து எழுந்தருளியிருக்க, அநந்தரம் குடிநீர்ப்பாலமுது வடுகனம்பிகொண்டு வந்து நீட்ட அமுதுசெய்தருளப்பண்ணித் திருக்காப்புச்சேர்த்து, பின்புபெருமாளமுதுசெய்தருளினபால்ப்ரஸாதத்தைஔஷதவத்ரஸக்ரஹ்ணம் பண்ணுமல் ஸ்வீகரித்தருளி, திருப்பவளம்மாற்றி சுத்தாசமநம் செய்தருளி உலாவியருள, ஸந்ததம் திருவாய்மொழி திருவுள்ளத்திலே நடக்கையாலே குறையும் அநுஸந்தித்துச் சாத்தியருளித்திருப்பள்ளிக்கட்டிலிலேயேறியருளி,அநந்தரம் திருவணையிலே சாய்ந்தருளி, குருபரம்பராபூர்வகமாசத் திருநாமத்தையும், மந்த்ரரத்நமான த்வயத்தையும் ஸார்த்தமாக அநுஸந்தித்து, தத்ப்ரதிபாதக பகவத்கைங்கர்ய த்வரையையுடையராய், அநந்தரம் சரமச்லோகத்தையும் அநுஸந்தித்து, ததேக உபாயத்வத்தாலே நிர்ப்பரராயெழுந்தருளியிருக்க, அவ்வளவில் இவர்க்கு அத்யந்தம் அந்தரங்கரான எம்பார் வடுகனம்பிதொடக்கமானவர்கள், (நடந்தகால்கள் நொந்தவோ) என்று பரிந்து திருவடிகள் வருட அறிதுயில் அமர்ந்தார்; அப்போது,தப்பாமல் எப்போதும் காத்துப்போருமவர்களான வண்டர், சொண்டர்மற்றுமுண்டான மழலைக்கூத்தத்து முதலிகள், ஸ்ரீகுலசேகரதாஸர், கோவர்த்தநதாஸர், திருவழுதிவளநாடுதாஸர் தொடக்கமாஞர் அநேகர், (புறஞ்சூழ்காப்ப) என்னும்படி, திருமேனிக்காவலாகப் பரிந்து நோக்கிக்கொண்டிருந்தார்கள். (ఇత్థన్దినే దినే కుర్వ౯ వృత్తిం భృత్యైః ప్రసాదినీమ్। కృతీ ఘట్టాపథం చక్రే ప్రాక్తనీం తత్ర వర్తనీమ్) என்கிறபடியே ப்ரதிதிநம் ஸத்பதவர்த்தியான தம்முடைய சுத்தசரித்ரத்தாலே முன்பு ஸங்குசித

மாய்ப்போந்த ஸந்மார்க்கத்தைக்கண்டு கண்டாபதமாக நடத்திக்கொண்டு, ஸுமுகமாக ஸ்ரீகார்யம் ஆராய்ந்து நடத்திக்கொண்டு போருமவராய், அதளவு பெருமாளுக்கு ப்ராணபூதருமாய், ப்ரியதமருமாய், ஸதாசாரத்தோடும், ஸத்காலக்ஷேபத்தோடும் வர்த்திப்பாராய், பகவத்கைங்கர்யோபகாரகராய்ப் போருகிற இவராலே (వ్యాసురర్వతా తేనపపశ్చిశో షై ర్వేదా న్తమవ్యాహతవాగ్విహారైః। నిర్జితై రైత్యధురన్ధరేణ యతిశ్వరేణోషితమబ్దషష్టిః) என்று இப்படி அறுபதுகாலங் கழியப் பெற்றது.

இப்படி சிஷ்யஸம்பத்துக்களுடனே வாழ்ந்தருளுகிற எம்பெருமானார், (ప్రాప్త్యైపదస్య పరమస్య భవాబ్ధిభాజాం ప్రాప్త్యైగిరృతాజ్ఞురుధిరేకప దీంయతీన్ద్రః। ఛజ్జాపథం పరమకారుణికో ఒచ్ఛకార యస్తన్న మామిశిరసాయతి సార్వభౌమమ్) என்று இப்படி அதிகாரம் இல்லாதவர்கள் துர்க்கதியைப் பார்த்து உபதேசித்தருளும் ஸ்வபாவராகையாலே அந்த உபதேசம்பலித்து, (అర్థపఞ్చకతత్త్వజ్ఞాః మహాభాగవతాస్స్మృతాః) என்றும், (పఞ్చరాత్రజ్ఞాః పఞ్చకాలప్రపన్నాః) என்றும், (దేవాలయ న్తిధరణీ శ్చరన్తైః పఞ్చకాలికాః। దర్శనాత్పృశ్నాత్తే పాంకృతార్థా స్సర్వేజనాః) என்றும், (యత్రభాగవతానిత్యం పఞ్చకాలపరాయణాః। నివసన్తి సదాయుక్తా స్తత్తేత్రం నైమిశాహ్వయమ్) என்றும், (మహాభాగవతాయత్ర వసన్తి విమలాశ్శుభాః। తద్దేశం మఙ్గళంప్రోక్తం యథాతీర్థం పదం శుభమ్) என்றும், (తేషాంపుణ్యాత్మనాంభీతో భృశంకలిరఘాత్మకః। మర్త్యేష్వతస్త్వభవాయనిశ్చ కలనప్రవర్తతే) என்றும், (యేకణ్ఠ లగ్నతులసీ నళినాక్షమాలాః యేబాహుమూల పరిచిహ్నితశఙ్ఖచక్రాః। యేవాలలాటఫలకే లసదూర్ధ్వపుణ్డ్రాః తేవైష్ణవాభువనమాశుపవిత్రయన్తి) என்றும், (కృష్ణస్సర్వ వచనైర్ధరుప్రియా) என்றும் சொல்லுகிறபடியே மஹாப்ருதிவி எல்லாம் மஹாவைபவத்தை யுடைய மஹாபாகவதர்களே யாம்படிதிருத்தி எங்கும்பரம்பி லோகபாவநமாம்படி யானார்கள். ஏவம்விதவைபவத்தை யுடையரான எம்பெருமானாரை, தத்பாகிநேய ஸூநுவாய் தந்நாமத்தை யுடைய தந்நாமகுணஹர்ஷிதரான கந்தாடையாண்டான் கனக்கஅநுவர்த்தித்து,

(పరిత్రాణాయ) (பரித்ராணாய) இத்யாதிப்படியே தேவரீர், (పుణ్యామ్భోజవికాసాయ పాపధ్వాన్తక్షయాయచ। శ్రీమాన్ఆవిరభూద్భూమౌ రామానుజదివాకరః) என்னும்படி அவதரித்தருளின ஸ்ரீபெரும்பூதூர்ஸ்த்தலத்திலே, ஸர்வகாலத்திலும் ஸர்வசேதநர்க்கும் ஸேவ்யமாம்படி தேவரீருடைய ஒருஅர்ச்சாவிக்ரஹம் எழுந்தருளப்பண்ணவேணும் என்று விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமானாரும் அப்படியே செய்யும் என்று அநுமதிபண்ணியருள, அப்போதே கந்தாடையாண்டானும் அநுகூலமான சிற்பியை அழைத்து அப்போதையில்

ப்ரார்த்த்யமா யிருக்கிறவார்த்தகவிக்ரஹாகாரத்தை, (పుణ్డ్రై ర్ద్వాదశభి ర్యుతంసితతరైస్త్రిర్ధ్వజైస్తాం శాఖాపద్మేనశిఖాం సవీతరుచిరం దోర్యుగ్మచక్రాబ్జకమ్। ఆసీనంజలజాసనేచతుళసీపద్మాక్షమాలాఞ్చితంయుక్తంజ్ఞానముద్రయాంరవినిభం శ్రీభాష్యకారంభజే) என்கிறபடியே அவ்வடிவழகை ஸேவிக்கப்பண்ண, அவனும் (ஆதியஞ்சோதியுருவை யங்குவைத்திங்குப்பிறந்த) என்கிறபடியே அர்ச்சாவிக்ரஹம் உகந்தருளப்பண்ணுவித்து ஸந்நிதியிலே அந்த விக்ரஹத்தைக் கொண்டுவந்துவைக்க, உடையவரும் திருக்கண்சாத்தி உகந்தருளி, திருக்கைஸ்பர்சமும்பண்ணி தம்முடைய திவ்யசக்தி ப்ரதிஷ்டிதமாம்படியாக ஆலிங்கநம் பண்ணிக்கொண்டு, புஷ்யமாஸத்தில் குருபுஷ்யத்திலே ப்ரதிஷ்ட்டிப்பியும் என்று திருமுகம் எழுதி திநம் குறித்தனுப்பியருள, அவரும் அப்படியே எழுந்தருளுவித்துக்கொண்டு போய் மூலவிக்ரஹத்தையும் ஏறியருளப்பண்ணுவித்து திருமுகப்படியே திருப்ரதிஷ்டையும் செய்வித்தருளினார். இங்கே ப்ரதிஷ்ட்டிப்பிக்கிற அற்றைத் திவஸத்திலே திருமேனியில் மிகவும் தளர்ச்சியாய் பலஹாநியும உண்டாக, இதேது என்று பராமர்சித்து அவனுக்கு எழுதிக்கொடுத்த திவஸம் ஏதென்றுகேட்டருள, அந்த திவஸம் அன்றுதானுயிருக்க, உடையவரும் விஸ்மயப்பட்டருளி, அவர்க்கு சீக்ரமாகவருவதென்று திருமுகம்போகவிட்டருள, அவரும் திருமுகத்தை சிரஸாவஹித்து, அப்படியே மீண்டு எழுந்தருளி, திருவடிகளை ஸேவித்துக்கொண்டு இருந்தார்.

அநந்தரம் அங்குத்தைக்கு அத்யந்தம் அந்தரங்கரான வண்டர்முதலான முதலிகள்எல்லாரும், பழுத்திருந்த தேமாவைக்கிளித்திரள்கள் காத்திருக்குமாப்போலே தத்துல்யரான இவர்களும், விமலசரமவிக்ரஹத்தை, (கையில்கனி) இத்யாதிப்படியே * மெய்யில் பிறங்கியசீரைப் பழுக்கஸேவித்துக்கொண்டிருக்கிற இவர்கள், (శేషోవాసైన్యనాథోవా శ్రీపతిర్వేతిసాత్త్వికైః। ఇతిసర్వైర్వితర్క్యాయ యతిరాజాయ మఙ్గళమ్) என்னும்படி ஸேவித்துக்கொண்டிருந்தார்கள்.

இப்படி எழுந்தருளி யிருக்கிற உடையவருடைய ப்ரபாவத்தை நம்பெருமாளும், திருவேங்கடமுடையானும், பேரருளாளனும், திருநாராயணப்பெருமாளும், அழகரும், திருக்குறுங்குடிநம்பியும், ரிஷிகளும், நம்மாழ்வாரும், நாதமுனிகளும், ஆளவந்தாரும், பெரியநம்பியும், திருக்கோட்டியூர்நம்பியும், திருமலைநம்பியும், திருமாலையாண்டானும், ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையரும், மற்றும் உடையவர் சிஷ்யர்களான ஆசார்யர்களும், ஸரஸ்வதியும், ப்ரஹ்மரக்ஷஸ்ஸும், ஊமையும்வெளியிட்டார்கள்.

## உடையவர் வைபவத்தை, நம்பெருமாள் முதலானுர் வெளியிட்டருளின் விவரணம்.

நம்பெருமாள் வெளியிட்டபடி எங்ஙனே என்னில்; - உடையவர் பெருமாளை ஸேவிக்க எழுந்தருளினவளவிலே, அவர்க்கு தீர்த்தம் திருமாலை, பரியட்டத்துடனே சடகோபனையும் ப்ர்ஸாதித்தருளி, (பொங்கோதம் சூழ்ந்த புவனியும்விண்ணுலகும் அங்காதும்சோராமே யாள்கின்ற) என்கிறபடியே உபயவிபூத்யைச்வர்ய ஸ்ரீயையும் நாம் உமக்குத் தந்தோம், நீர் உபயவிபூதியையும் உடையவர் என்று திருவுள்ளமாய் அருளுகையாலே;

திருவேங்கடமுடையான் வெளியிட்டபடி எங்ஙனே என்னில்;-உமக்கும் உம்முடையார்க்கும்உபயவிபூத்யைச்வர்யத்தையும் தெற்குவீட்டில் தந்தோம் என்று திருப்பவளச்செவ்வாய் திறந்து அருளிச்செய்கையாலே;

பேரருளாளர் வெளியிட்டபடி எங்ஙனே என்னில்; - அருளாளப்பெருமாளெம்பெருமானுருடனே தர்க்கம்சொன்னபோது உத்தரம் சொல்லமாட்டாமல் இருக்க, இன்னபடி சொல்லும் என்று ஸ்வப்நமுகேந அருளிச்செய்கையாலும், யாதவப்ரகாசனுக்கு ஸ்வப்நமுகேந நம் இராமாநுசனை ஒரு ப்ரதக்ஷிணம் பண்ணி ஸந்யஸியாம் என்று அருளிச்செய்கையாலும்;

திருநாராயணப்பெருமாள் வெளியிட்டபடி எங்ஙனே என்னில்; - தொண்டனூரிலே ஸ்வப்நங்காட்டி அழைத்துக்கொண்டு போய் ப்ரகாசிக்கையாலும், என்னுடைய செல்வப்பிள்ளையன்றோ வென்று எடுத்தணைக்கும்படி யதிராஜகுமாரனான ஸௌசீல்யத்தாலும்;

அழகர் வெளியிட்டபடி யெங்ஙனே என்னில்; - ஒருநாள் திருவோலக்கத்திலே, "நம்மிராமாநுசமுடையார்க்கருள்பாடு" என்று திருவுள்ளமாயருள, ஆசார்யர்கள் எல்லாரும் 'திருவடிகளிலேவர, பெரியநம்பி, வழியிலே சிலர் எழுந்தருளி யிருக்க நீங்கள் நாம் அழைக்கவாராதிருப்பானென்னென்ன, அவர்களும் ராமாநுசமுடையார்க் கருள்பாடு என்று திருவுள்ளமாயருளுகையாலே அவர்க்கும் சேஷிகள் நாங்கள் என்று வாராதிருந்தோம் என்ன, அழகரும் தசரத வஸுதேவாதிகள் நம்மை புத்ரப்ரதிபத்தி பண்ணிப் போந்தாப்போலே இருந்தது-நம்மிராமாநுசனையுடையரா யிருந்தும் நம்மிராமாநுசனை நீங்கள் சிஷ்யப்ரதிபத்தி பண்ணினதென்றும், பின்னையும் ஒருநாள் கிடாம்பியாச்சானே! ஒன்று சொல்லிக்காண் என்று திருவுள்ளமாயருள,(ந தர்ம நிஷ்டோஸ்மி ந சாத்மவேதீ) (நதர்ம நிஷ்ட்டோஸ்மிநசாத்மவேதீ) என்கிறச்லோகத்தை விண்ணப்பம்

செய்ய, நம்மிராமாநுசனை யுடையனாயிருந்து (அநந்யகதிः)என்று சொல்லப்பெறுவாயோ என்று திருவுள்ளமா யருளுகையாலே;

திருக்குறுங்குடிநம்பி வெளியிட்டபடி எங்ஙனே என்னில்;- உடையவர் நம்பியைஸேவிக்க எழுந்தருளின வளவிலே,நம்பியும் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து, உடையவர்க்கு அருள்பாடிட்டருளி, (బహూని మే వ్యతీతాని జన్మాని తవ చార్జున) என்கிறபடியே, எத்தனைஜந்மம் பிறந்தோமோ தெரியாது, இதில் ஒருவரும் வசப்படுவாரன்றிக்கே அதோகதிகளிலே விழுந்துபோய்விட்டார்கள், ஊமக்கு இவ்வாத்மாக்கள் எல்லாம் அகப்பட்டவிரகை நமக்குச் சொல்லவேணும் என்ன, தேவரீர் கேட்டருளுமாப்போலே கேட்டருளவேணும் என்ன, நம்பியும் ஸிம்ஹாஸநத்தில்நின் றும்இறங்கியருளித்திருக்கொத்தொலியலைப்படுத்து உடையவர்க்கு ரத்நகம்பளத்தை ஆஸநமாகஇட்டு இனிச் சொல்லும் என்ன, உடையவரும் ஹிதத்தை விண்ணப்பம்செய்தார்; அன்றுமுதல் நாமும் ராமாநுசனை யுடையோம் என்று திருவுள்ளமா யருளுகையாலே;

ரிஷிகளும், (వ్యాసో వా భగవాన్ పరాశరముని ర్లక్ష్మీశో నశ్చోద్వా శుక స్సాక్షాన్నారదజిష్ణుర్వా శరఠారి పూర్వాగ్రజో వా స్వయమ్। శేషో శ్వశఠారి పురుషోత్తమస్స భగవాన్ శేషీ జగచ్ఛేషజాత్యాఖ్యాతుం జగతాం హితాయ సమభూద్రామానుజార్యాత్మనా) என்றார்கள்.

இனி நம்மாழ்வார் வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்;- லோகத்தைத் திருத்துவதாக எம்பெருமானோடே மார்தட்டி (நின்கண் வேட்கை யெழுவிப்பனே) என்று ஏறிட்டுக்கொண்டவர்தாமே, (ஏபாவம்பரமே) என்று க்லேசித்து, (அகலிடத்தை ஆராய்ந்தது திருத்தலாவதே)என்று ஈச்வரன் அவதரித்துத்திருத்தவொண்ணாதசேதநத்தை நாமோ திருத்துவோம் என்று,(யானுமென்னெஞ்சுமிசைந்தொழிந்தோம்) என்று தாமும் திருவுள்ளமுமேயாய்,பூதபவிஷ்யத்வர்த்தமாநமறிந்தவராகையாலே, (கலியுங்கெடும் கண்டுகொண்மின்) என்று உடையவர்திருவவதாரத்தை ஸூசிப்பித் தருளுகையாலே;

நாதமுநிகள் வெளியிட்டபடி எங்ஙனே யென்னில்;-குளப்படியிலே தேங்கினால் குருவி குடித்துப்போம், வீராவணத்தேரியிலே தேங்கினால் நாடு விளையும் என்று அருளிச்செய்து (లక్ష్మీనాథాఖ్యసింధౌ శఠరిపుజలదః ప్రాప్య కారుణ్యనీరం నాథాద్రావభ్యషించ్య త్తతః పిరఘువరాంభోజచక్షుర్ఝ రాభ్యామ్। గత్వా శ్రీయామునాఖ్యాం సరితమథ యతీంద్రాఖ్య పద్మాకరేంద్రం సమ్పూర్య ప్రాణిసస్యే ప్రవహతి బహుధా దేశికేంద్రప్రమోఘైః) என்றும் சொல்லுகிற

படியே பெரியபெருமாளாகிற பெருங்கடலிலே ஆழ்வாராகிற காளமேகம்படிந்து, நாதமுனிகளாகிற மஹாமேருவிலே வர்ஷித்து, உய்யக்கொண்டார், மணக்கால்நம்பியாகிற அருவிகளாலே போந்து, ஆளவந்தாராகிற பெருக்காற்றிலேகூடி, பெரியநம்பியாகிற தலப்பழையாலே புறப்பட்டு, எம்பெருமானாராகிற ஏரியிலே தேங்கி, பின்புள்ள ஆசார்யர்களாகிற மதகுகளாலே புறப்பட்டு, ஸம்ஸாரிகளாகிற பயிர்களிலே ஏறிப்பாய்கிறதென்று அருளிச்செய்த விடத்திலும் ஒத்திருக்கையாலே;

ஆளவந்தார் வெளியிட்டபடி எங்ஙனே என்னில், இம்மஹாநுபாவன் தர்சநத்தில் புகுந்தாராகிலோ என்று பேரருளாளனை நோக்கி ப்ரபத்திபண்ணுகையாலும், * ஆமுதல்வ னிவனென்று கடாக்ஷிக்கையாலும்;

பெரியநம்பி வெளியிட்டபடி எங்ஙனே என்னில்; - அத்துழாயும் தாமுமாக எழுந்தருளியிருக்கச்செய்தே உடையவரும் முதலிகளுமாக எழுந்தருள, பெரியநம்பி எழுந்திருந்து தண்டனிட, இப்படி செய்யலாமோ உம்முடைய சிஷ்யரன்றோ என்று அத்துழாய் சொல்ல; பெரியநம்பியும் அத்தாளுக்குத்தக்கத் தலைகாண் இது என்றும், ஆளவந்தாரும் முதலிகளும் என்றிருந்தேன் என்றருளிச்செய்து, தம்முடையகுமாரர்ஸ்ரீபுண்டரீகனை உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிப்பிக்கையாலே;

திருக்கோட்டியூர்நம்பி வெளியிட்டபடி எங்ஙனே என்னில்;- தாம் அருளிச்செய்த அர்த்தத்தை ப்ரகாசிப்பியாதே என்று ஆணையிடுவித்துக்கொண்டு அருளிச்செய்ய, அவ்வர்த்தத்தை தூளிதாநமாக எல்லார்க்கும் அருளிச்செய்ய, இத்தை நம்பிகேட்டருளி, உடையவரை அழைத்தருளி இவ்வர்த்தத்தை ஒருவர்க்கும் சொல்லாதே என்றன்றோ நாம் சொன்னோம், அப்படி யிருக்க நீர் அநேகம்பேருக்கு என்ன நினைந்து சொன்னீர் என்ன, உடையவரும், அவர்கள் எல்லாரும் தேவரீருடைய அபிமாந ஸம்பந்தம்பெற்று உஜ்ஜீவிப்பார்களே! என்று தேவரீர்திருவடிகளை முன்னிட்டுக்கொண்டுசொன்னேன் என்ன, வேறொருவர்க்குஞ்சொல்லாதேஎன்று சூழரவுகொண்டு ஆணைகொண்டு நாம்சொன்னோம், அப்படியிருக்க நம்மை மீறிச்சொன்னதுக்கு பலம் ஏதென்ன, ராமாநுஜனும் நரகமே பலம் என்ன, அப்படி அறிந்திருந்தும் சொல்லுவானேன் என்ன, அடியேன் ஒருவனுமன்றோ நரகம்புகுகிறேன், இவ்வாத்மகோடிகளெல்லாம் உஜ்ஜீவிக்குமே என்ன, நம்பியும் போர உகந்தருளி அவரோ நீர் என்று எடுத்துக்கட்டிக்கொண்டு, தம்முடைய

குமாரர் தெற்காழ்வாரையும் உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிப்பிக்கையாலே;

திருமலைநம்பி வெளியிட்டபடி எங்ஙனே என்னில்; - உடையவர் திருமலைக்கெழுந்தருளுகிறபோது திருப்பரியட்டப்பாறையளவாக எழுந்தருளினவளவிலே, திருவேங்கடமுடையானுடைய தீர்த்தப்ப்ரஸாதங்கொண்டு பெரியதிருமலைநம்பி எதிரேஎழுந்தருள, இவரும் தெண்டன் ஸமர்ப்பித்து, ப்ரஸாதம் ஸ்வீகரித்தருளி தேவரீர் எழுந்தருளவேணுமோ, ஒருசிறியார்கள் இல்லையோ என்ன, நாலுவீதியிலும் ஆராய்ந்த விடத்தில் என்னில் சிறியாரைக்கண்டிலேன் என்கைபாலும், எம்பாரை உதக பூர்வமாகக் கொடுக்கையாலும், தம்முடைய குமாரர் திருமலை நம்பியையும் ராமாநுஜனையும் உடையவர்திருவடிகளிலே ஆச்ரயிப்பிக்கையாலும்;

திருமாலையாண்டான் வெளியிட்டபடி எங்ஙனே என்னில், உடையவர், தம்பக்கலிலே திருவாய்மொழிக்கு அர்த்தம்கேளாநிற்கச்செய்தே, *அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்புசெய்வித்து அறிபாமாமாய்த்தடியேனை, வைத்தாயால் என்று - வைப்பதே! என்றுதிருமாலையாண்டான் அர்த்தம் அருளிச்செய்ய, இத்தை உபகார ஸ்ம்ர்தியாகக்கொள்ளக் குறையில்லையே என்று எம்பெருமானார் விசேஷார்த்த மருளிச்செய்ய, இது விச்வாமித்ர ஸ்ர்ஷ்டி, ஆளவந்தார் அருளிச்செய்யக் கேட்டறியேன் என்று திருமாலையாண்டான் திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச்செய்கைதவிர்ந்திருந்தார்; இச்செய்தியை திருக்கோட்டியூர்நம்பி கேட்டருளி கோயிலிலே திருமாலையாண்டான்பக்கலிலே எழுந்தருளி, திருவாய்மொழிக்கு அர்த்தம் நடத்தாமல் தவிர்வானேன் என்று கேட்க, (அறியாக்காலத்துள்ளே) என்கிற பாட்டை உபகாரஸ்ம்ர்தி யாக வேணும்என்றதினால் என்ன, அதுவும் ஆளவந்தார் அருளிச்செய்ய நான்கேட்டேன்என்று, ஸாந்தீபிநிபக்கலிலே க்ர்ஷ்ணன் அத்யயநம் பண்ணினாப்போலேகாணும் உம்முடையபக்கலிலே உடையவர் திருவாய்மொழிகேட்கிறது, ஆளவந்தார் திருவுள்ளத்திலேகிடக்கிற அர்த்தமொழிய இவர்க்கு வேறொரர்த்தம்ப்ரகாசியாது என்றிரும், நீர் இவர்க்கு அஜ்ஞாதஜ்ஞாபநம்பண்ணுகிறோம் என்று இராதே கொள்ளுமென்று அருளிச்செய்தருளினார்; திருமாலையாண்டானும் இதுவும் ஒரு திருவவதாரமோ என்று தம்முடைய குமாரர் ஸுந்தரத்தோளுடையானையும், உடையவர்திருவடிகளிலே ஆச்ரயிப்பிக்கையாலே;

ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையர்பக்கலிலே உடையவர் ஆறுமாஸம் ஸேவித்துஆளவந்தார்அருளிச்செய்த அர்த்தத்திலே

சில வர்த்தம் ப்ரஸாதித்தருளவேணும் என்ன, அவர் பாடுகைக்கு முறையாக; மஞ்சள்காப்பு சாத்தித்திருமஞ்சநம்பண்ணுவித்துக்கொண்டுபோருகிறகாலத்திலே ஒருநாள் மஞ்சள்காப்பு பாங்காக இராதபடியாலே திருமுகமண்டலத்திலறிந்து பாத்ரத்தை அப்பாலேசேர்த்து மஞ்சள்காப்பைப் பாங்காகச்சாத்தி திருமஞ்சநம்பண்ணுவித்தருள, ப்ரீதராய் என்னுடைய ஸர்வஸ்வத்தையுங்கைக்கொள்ளவோ இப்படிசெய்தீர் என்று ஆளவந்தார்ஸ்தோத்ரத்துக்கும் சதுச்லோகிக்கும் அர்த்தமருளிச்செய்து, அநந்தரம், எல்லா ரஹஸ்யார்த்தத்தையும் அருளிச்செய்தருளினார்.

வடுகநம்பி ஆசார்யபதம் என்று தனியே ஒருபதம், அதுவுள்ளது எம்பெருமானாருக்கே, ஆகையாலே எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள் என்று எல்லார்க்கும் அருளிச்செய்தருளினார்.

கணியனூர்சிறியாச்சான் ஸசேலஸ்நாநபூர்வகமாக ஆர்த்தியோடே உபஸந்நராய் திவ்யாஜ்ஞையிட்டு, (సత్యం సత్యం పునస్సత్యం యతిరాజో జగద్గురుః। సఏవ సర్వభూతానా ముద్ధర్తా నాత్ర సంశయః) என்கிறபடியே எம்பெருமானார்திருவடிகளொழியத் தஞ்சமில்லை என்று அருளிச்செய்தருளினார்.

அருளாளப்பெருமாளெம்பெருமானாரும் தம்முடைய திருவடிகளிலே அநந்தாழ்வானும், எச்சானும், தொண்டனூர்நம்பியும், மருதூர்நம்பியும், ஆச்ரயிக்க, அவர்களுக்கு, எம்பெருமானார்திருவடிகளேதஞ்சமென்றிருங்கோளென்று அருளிச்செய்தருளினார்.

பிள்ளைப் பிள்ளையாழ்வான் ஆச்ரயித்தவளவிலே ஆசார்யதக்ஷிணையாக த்ரிவிதகரணங்களையும் பரிஹரித்துக்கொள்ளும் என்று ஆழ்வான் அருளிச்செய்ய, அவர் பரிஹரிக்கமுடியாது என்று முசித்துக்கிடக்க, எதிரிகூடக்குத்தும் என்று ராஜதண்டம் வருமென்று காயத்தால் வாராதபடி நெஞ்சால் நினைத்திராகில், அது திருவுள்ளத்துப்படாதபடி எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிரும் என்று அருளிச்செய்தார்.

மிளகாழ்வான், முதலியாண்டானை என்னோடு தர்க்கிக்க வாரும் என்று அழைக்க, நீதோற்றால் என்செய்கிறாய் என்ன, நான்தோற்றேனாகில் உம்மைச் சுமந்துகொண்டு திரியக்கடவேனென்று மிளகாழ்வான்சொல்ல, அநந்தரம் தர்க்கம்சொல்லித் தோற்று முதலியாண்டானை ஸ்ரீபாதம் தாங்கிக்கொண்டுவந்து "அடியேனை அங்கீகரித்தருளவேணும்" என்று விண்ணப்பம்செய்ய, முதலியாண்டா

னும் உடையவர்திருவடிகளிலேகாட்டிக்கொடுத்து எம்பெருமா னார்திருவடிகளே தஞ்சமென்றிரும் என்றருளிச்செய்தார்.

எம்பார், பட்டரைப்பார்த்து,பெருமாள் புத்ரஸ்வீகாரம் பண்ணியருளினார், ஆழ்வானுடையபிள்ளை, ஸகலவித்யைகளையும் அதிகரித்தோம் என்று மேன்மையடித்திராதே எம்பெருமானார்திருவடிகளேதஞ்சமென்றிரும் என்று அருளிச்செய்தருளினார்.

பட்டர், ஜீயரைப்பார்த்தருளி, வேதாந்திகள் என்கிற பெருமையையுடையோம், நம்முடையபக்கலிலே ஆச்ரயித்தோம், நமக்கு அநேகம் த்ரவ்யத்தைத்தந்தோம் என்று இறுமாந்திராதே, எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிரும் என்று அருளிச்செய்தருளினார்.

நஞ்சீயரும் நம்பிள்ளையைப்பார்த்து, லோகாசார்யர் என்கிற பெருமையையுடையோம், திருவாய்மொழிக்குப் பொருள்சொல்லவல்லோம், ஸ்ரீபாஷ்யத்துக்கு ப்ரவர்த்தகர் என்று மேன்மையடித்திராதே, எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிரும் என்று அருளிச்செய்தார்.

நம்பிள்ளை, சிவக்கறைப்பிள்ளையைக் கையைப்பிடித்துக்கொண்டு எழுந்தருளாநிற்க, இடைகழியிலே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கண் வளர்ந்தருள, அவரை, "காலைமுடக்கும்" என்றுசிவக்கறைப்பிள்ளைசொல்ல, பிள்ளையும் இத்தைக்கேட்டு * மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார்( திருத்தாள்கள்) என்று பாடியருளினார், இவன்காலென்பானேன் என்று இவரைக் கையைவிட்டருளினார். பின்பு சிவக்கறையிலே போந்து எனக்கு கதியென்னென்று விண்ணப்பம் செய்து போகவிட, தமக்கு எல்லாவற்றுக்கும் ஒரு குறையுமில்லை, எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருமென்று அருளிச்செய்து போகவிட்டருளினார்.

திருக்குருகைப்பிரான் பிள்ளான் சிறுப்புத்தூரிலே எழுந்தருளியிருக்கச் செய்தே சோமாசியாண்டான் தன்ஸ்ரீபாதத்திலே ஸ்ரீபாஷ்யம் மூன்றுருவாசித்து மீண்டு எழுந்தருளும்போது அடியேனுக்குத்தஞ்சமாயிருப்பதொருவார்த்தை அருளிச் செய்ய வேணுமென்று விண்ணப்பம்செய்ய;நீர்,பாட்டம்,ப்ராபாகரம்,மீமாம்ஸை இவை யித்தனைக்கும் கர்த்தா, பாஷ்யம்வாசித்தோமென்று மேன்மையடித்திராதே, எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்று இரும் என்று அருளிச்செய்தார். கோமடத்துப் பிள்ளான் தன் ஸ்ரீபாதத்திலே காக்கைப்பாடியாச்சான்பிள்ளைஸ்ரீபாஷ்யம்மூன்றுருவாசித்து இவர் மிகவும் மேதையையுடையவரா யிருக்கையா

லே இவர்க்கு எம்முகத்தாலே அபசாரம் வரப்போகிறதோ என்று பயப்பட்டு, எம்பெருமானார் திருவடிகளே சரணமென்றிரும் என்று அருளிச்செய்தார். எங்களாழ்வான் காக்கைப்பாடி யாச்சான்பிள்ளையைப்பார்த்து உம்மைப்பெருமாள் முனிந்தருளினபோது என்ன நினைத்திருந்தீர் என்ன எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருந்தேனென்று விண்ணப்பம் செய்தார்.

நடாதூரம்மாள்ஸ்ரீபாதத்திலே பத்துப்பன்னிரண்டுபேர் ஸ்ரீபாஷ்யம் வாசிக்கிறகாலத்திலே அவர்களுக்கு பாஷ்யத்தை உபந்யஸித்துக்காட்ட பக்திரூபமாயிருந்தது என்ன, ப்ரபத்திரூபமாயிருக்கிறபடியையும் அநுவதித்துக்காட்ட, பக்தியிலும் ப்ரபத்திதான் அரிதாயிருந்தது என்ன, ஆகில் எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள் என்று அருளிச்செய்தார். நடுவிலாழ்வான் திருநாராயணபுரத்திலே உடையவர்ஸந்நிதியிலேகோஷ்டிபண்ணி ஸ்ரீபாஷ்யம் வாசிக்கிற காலத்திலே வங்கிப்புரத்து ஆச்சியும் சொட்டையம்மாளுள்ளிட்டாரும் ஸ்ரீபாஷ்யத்தைக் கேட்டு இது அரிதாயிருந்தது என்ன, ஆகில்எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள் என்று அருளிச்செய்தார்.

ஸ்ரீவேதவ்யாஸபட்டர் திருநாராயணபுரத்திலே உடையவர் ஸந்நிதியிலே கோஷ்டிபண்ணி ஸ்ரீபாஷ்யத்தை உபந்யஸிக்க இது கங்காப்ரவாஹமாயிருந்தது, எங்களால் அவகாஹிக்கப்போகாது, எங்களுக்குத் தஞ்சமாயிருப்பதொருவார்த்தை அருளிச்செய்யவேணும் என்ன, ஆகில் உங்கள் குலதெய்வமான எம்பெருமானார்திருவடிகளேதஞ்சமென்றிருங்கோள்என்று அருளிச்செய்தார். நடுவிற்றிருவீதிப்பிள்ளை வெள்ளைக்குளத்தே ஆனைகாத்த சிங்கர்திருமுன்பே கோஷ்டிபண்ணி ஸ்ரீபாஷ்யம் வாசிக்கிறகாலத்திலே, தம்முடைய சிஷ்யர்களிலே அழகியார் எழுந்திருந்து இதுகங்காப்ரவாஹமாயிருந்ததென்ன, ஆகில் எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிருமென்று அருளிச்செய்தார்.

வடுகநம்பி, எம்பெருமானார் திருவடிகளே சரணம், நம்பெருமாள் திருவடிகளேசரணம், என்று இரண்டையுஞ் சேர அநுஸந்திக்கும் ஆழ்வானையும் ஆண்டானையும் இருகரையர் என்பர்; வடுகநம்பி எம்பெருமானார் திருவடிகளேசரணம் என்னுமாப்போலேயும், திருக்கச்சிநம்பி பேரருளாளப்பெருமாள் திருவடிகளே சரணம் என்னுமாப்போலேயும், எம்பெருமானார்செல்வப்பிள்ளை திருவடிகளே சரண மென்னுமாப்போலேயும், இருவர்க்கும் இசைந்திராது.

ஸரஸ்வதி வெளியிட்டபடி எங்ஙனே என்னில்; - உடையவர் சாரதா பீடத்துக்கு எழுந்தருளினபோது ஸரஸ்வதியும் எதிரே புறப்பட்டுவந்து, இவர் ஸ்ரீபகவானுடைய அம்சாவதாரம் என்று அத்யந்தம் ப்ரீதையாய், (யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ) என்கிறவாக்யத்துக்கு உடையவரை அர்த்தம் கேட்க, உடையவரும் ஸ்ரீமந்நாராயணனுடையதிருக்கண்கள் அப்போதலர்ந்தசெந்தாமரைப் பூப்போலே இருக்கும் என்று அருளிச்செய்ய, ஸரஸ்வதியும் கேட்டு ஸந்தோஷித்து இவர் இட்டருளின ஸ்ரீபாஷ்யம் முதலான ப்ரபந்தங்களையும் சிரஸாவஹித்து இவர்க்கு ஸ்ரீபாஷ்யகாரர் என்று திருநாமம் சாத்தி இவரை ப்ரஹ்மரதமேற்றி உபலாளிக்கையாலே.

ப்ரஹ்மரக்ஷஸ்ஸு வெளியிட்டபடி எங்ஙனே என்னில், யாதவப்ரகாசனுக்கு உடையவரைக்காட்டி இவர்நித்யஸூரிகளில் தலைவர் என்று சொல்லுகையாலே.

ஊமை வெளியிட்டபடி எங்ஙனே என்னில், பெருமாள் கோயிலில் பாகவதரிலே ஒருபிள்ளை அஞ்சாறுவயதளவும் ஊமையாயிருந்து நாலு மூன்று ஸம்வத்ஸரம் காணமலிருந்து பின்பு வார்த்தை சொல்லவல்லனாய்வர, இந்தஆஶ்சர்யத்தைக் காண்கைக்காக எல்லாரும் திரண்டு, ஊமாய்! எங்குப்போனாய் என்ன, அவனும் நான்க்ஷீராப்த்திக்குப் போனேன் என்ன, அங்கே விசேஷமென்னென்று கேட்க, ஸேனைமுதலியார் உடையவராய் வந்து திருவவதரித்தருளினார் என்று சொன்ன அநந்தரம் அவனைக் கண்டதில்லை யென்று ஸேநாபதிஜீயர் அருளிச்செய்கையாலே.

இப்படி இவர்கள் எல்லாரும் ப்ரகாசிப்பிக்கைக்கு நாதமுனிகள் தொடங்கி இற்றைவரையாக வுண்டான ஆசார்யர்கள், தந்தாம் சிஷ்யர்களுக்கு எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள் என்று அருளிச்செய்கைக்கு ஹேது என்னென்னில்; ஸ்வாசார்யப்ரீதி நிபந்தநமாகவும் ஆசார்யபதமென்று தனியே யொருபதம், அதுவுள்ளது எம்பெருமானார்க்கே என்றுவடுகநம்பி அருளிச்செய்கையாலும், எம்பெருமானார்திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள் என்று அவரவர்கள் அருளிச்செய்யக்குறையில்லை.

அவதாரங்கள் எல்லாம் ஒத்திருக்கச்செய்தே ராமக்ருஷ்ணாத்யவதாரங்களுக்கு ப்ராதாந்ய முண்டானாப்போலேயும், திவ்யதேசங்கள் எல்லாம் ஒத்திருக்கச் செய்தே கோயில் திருமலை பெருமாள்கோவில் திருநாராயணபுரத்துக்கு ப்ராதாந்ய முண்டானாப்போலேயும், ரிஷிகள் எல்லாரிலும் வ்யாஸபராசர சுக சௌநக நாரதரென்கிற இவர்களுக்குப்ராதாந்யமுண்டானாப் போலேயும்,

ஆழ்வார்கள் எல்லாரும் ஒத்திருக்கச்செய்தேநம்மாழ்வாருக்குப்ரா தாந்யம் உண்டானுப்போலேயும், ஆசார்யர்கள் எல்லாரிலுங்காட் டில் இவர்க்குப்ராதாந்யம் கொள்ளக்குறையில்லை.

ஸ்ரீராமாவதாரத்துக்கு ப்ராதாந்யம் எத்தாலே என்னில்;- பெருமாள் அபயப்ரதாநம் அருளிச்செய்தும், ஸ்ரீகுஹப்பெருமா ளுடனே * சீரணிந்த தோழமைகொண்டும், ஸ்ரீஜடாயு மஹா ராஜனைத் திருப்பள்ளிபடுத்தும், ஸ்ரீசபரிகையாலே ஸம்யக்காக அமுதுசெய்தும், திருவடியுடனே (உண்பன்நான் என்ற ஒண் பொருள்)என்னும்படிஸஹபோஜநம்பண்ணியும்போருகையாலே.

ஸ்ரீக்ர்ஷ்ணுவதாரத்துக்கு ப்ராதாந்யமெத்தாலே யென்னில்; பிள்ளை சரமச்லோகத்தை அருளிச்செய்தும், பீஷ்மத்ரோணுதி களுடையக்ர்ஹங்களை அதிக்ரமித்து ஸ்ரீவிதுரர்திருமாளிகையிலே வந்து, (ఊచినుణవత్తిన) என் - பாவநத்வபோக்யத்வங்களை யுடை த்தா யிருந்ததென்றும், அது தன்னை (ద్విషదన్నంనభోక్తవ్యమ్) என்று சத்ருகோஷ்ட்டியிலும் ப்ரஸித்தமாக்குகையாலே.

கோயிலுக்குப்ராதாந்யம் எத்தாலேயென்னில்,திருப்பாணுழ் வாரோடே கலந்துபரிமாறுகையாலே; திருமலைக்கு ப்ராதாந்யம் எத்தாலே யென்னில்,குறும்பறுத்தநம்பிக்கும் தொண்டமான் சக் ரவர்த்திக்கும் வார்த்தையருளிச்செய்கையாலே; பெருமாள்கோயி லுக்கு ப்ராதாந்ய மெத்தாலே யென்னில்; திருக்கச்சிநம்பியுட னே ஸ்மிதபூர்வாபிபாஷணம்பண்ணி வார்த்தையருளிச்செய்து கலந்துபரிமாறுகையாலே; திருநாராயணபுரத்துக்கு ப்ராதாந்யம் எத்தாலே யென்னில்; - ஸுசரிததநயன்பக்கல் ஆதராதிசயத்தா லே தந்நிவேதிதாந்நத்தை யமுதுசெய்து அவனை வாழ்விக்கையா லும், யதிராஜகுமாரரான ஸௌசீல்யத்தாலும்.

ஸ்ரீவேதவ்யாஸபகவாந் (శ్రీమాన్విష్ణుర్విధీశ ప్రముఖసురగణైః ప్రార్థిత త్వాంభవత్యాం పారాశర్యోవతీర్ణ శ్రుతిగణమఖిలం వ్యాస్తతస్యార్థ-త్యై। ప్రాణైషీన్మ్ర హ్మసూత్రంత్వతిగహనతనుంయస్యవృత్తింవ్యధాసీత్ః స్తీర్ణాంవ్యాసశిష్యోమునిరథభగవాన్ నామభోధాయనాఖ్యః) என்றும் சொல்லுகிறபடியே வேதத்தை அப்ய ஸித்து கர்மகாண்டத்தைவிட்டு ஜ்ஞாநகாண்டத்திலே ஸ்ரீபுருஷ ஸூக்தத்திறுலும், காரணவாக்யங்களாலும், (సత్యంసత్యం పునస్సత్య ముద్ధృత్యభుజముచ్యతే। వేదశాస్త్రాత్పరంనాస్తి నదైవంకేశవాత్పరమ్)என்று ஸத்ய புரஸ்ஸரமாக தத்வநிர்ணயம் பண்ணுகையாலே - அவர்க்கு ப்ராதாந்யம்; ஸ்ரீபராசரப்ரஹ்மரிஷி, (పురాణేషుచవైష్ణవమ్) என்று - சிதசிதீஸ்வரஸ்வரூபஸ்வபாவங்களை விசதமாகப்ரதிபாதித்து தத்வ நிர்ணயத்தைப்பண்ணி, உதாரனென்று ஆளவந்தார் நமஸ்கரிக்கும்

படியான வைபவத்தை யுடையராகையாலே – அவருக்கு ப்ராதாந்யம்;

ஸ்ரீசுகப்ரஹ்மரிஷியை, பரிக்ஷித்து கேட்கபாகவதத்தை ப்ரதிபாதித்துதத்வநிர்ணயத்தைப்பண்ணி, (శుకో ముక్తః) (ஶுகோமுக்தஃ) என்னும்படியான வைபவத்தை யுடையராகையாலே - அவருக்கு ப்ராதாந்யம்; ஸ்ரீஶௌநகபகவாந், விஷ்ணுதர்மத்திலே பலவிடங்களிலும் தத்வநிர்ணயம் பண்ணுகையாலே அவருக்கு ப்ராதாந்யம்; ஸ்ரீநாரதபகவான், (ఋజయుగయజుస్సామ్నా శిరసి, తంయస్యకర్ణే పరమపురుష నామ్నాం కీర్తనం యస్య వాచి। ఋజుతరమపి పుణ్డ్రం యస్య కణ్ఠే సరసిజమణిమాలా యస్య తస్యాస్మిదాసః) என்று - இப்படி யிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நான் தாஸன் என்று சொல்லுகையாலே; ஆழ்வாரும், (சேமமுடைநாரதனார்) என்னும்படியான வைபவத்தையுடையராகையாலே அவருக்குப்ராதாந்யம்;

ஆழ்வார்களைக் காட்டிலும் நம்மாழ்வாருக்கு ப்ராதாந்யம் எத்தாலே என்னில்; - ஸஹஸ்ரசாகையான * வேதியர்வேதத்தினுட்பொருளைத் திருவாய்மொழி முகத்தாலே ஸர்வாதிகாரமாக்குகையாலும், நாதமுனிகளுக்கு நாலாயிரத்தையும் ப்ரஸாதித்து, மற்றுமுண்டான தர்சநதாத்பர்யங்களையும் அருளிச்செய்து தர்சநத்தை நிலைநிறுத்துகையாலும்;

உடையவர், கீழ்ச்சொன்னவர்கள்போலன்றிக்கே பெருமாள் அருளிச்செய்த அபயப்ரதாநத்தையும், பிள்ளையருளிச்செய்த சரமச்லோகத்தையும், ரிஷிகளாலே ப்ரோக்தங்களான புராணங்களையும், மற்றையாழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களையும், நாதமுனிகள் அருளிச்செய்த யோகரஹஸ்யம், ந்யாயஶாஸ்த்ரம், முதலான திவ்யப்ரபந்தங்களையும், ஆளவந்தார் அருளிச்செய்த திவ்ய ஸூக்திகளையும்கொண்டு ஸூத்ரவாக்யங்களைஒருங்கவிட்டு, வேதாந்ததீபத்தையும், வேதாந்தஸாரத்தையும், வேதார்த்த ஸங்க்ரஹத்தையும், ஸ்ரீகீதாபாஷ்யத்தையும், ஸ்ரீமத்பாஷ்யத்தையும், கத்யத்ரயத்தையும், நித்யத்தையும் அருளிச்செய்து, ஸமஸ்த ஸமயங்களையும் நிரஸ்தமாக்கி, (எம்பெருமானார் தர்சநம்) என்னும்படி பண்ணுகையாலே இவர் எல்லாரிலும் காட்டிலும் ப்ராதாந்யத்தை யுடையவர். இனி ஆழ்வான், ஆண்டான், அருளாளப்பெருமாளெம்பெருமானார், எம்பார் இவர்கள் ப்ராதாநர் என்னுமிடம் சொல்லவேண்டாவிறே. (ఆచార్యవాన్ పురుషో వేద) (దేవమివాచార్యముపాసీత)(పాపిష్ఠః క్షత్రబన్ధుశ్చ పుణ్డరీకశ్చ పుణ్యకృత్। ఆచార్యవత్తయా ముక్తా తస్మాదాచార్యవాన్ భవేత్) என்றும், (గురురేవ పరంబ్రహ్మ గురురేవ పరాగతిః)என்றும்,

(యస్తూత్తమపదేష్టాస్యా త్తస్మాదేవయత్నతోగురుః) என்றும் (பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து) என்றும், (தேனார்கமலத் திருமாமகள் கொழுநன் தானேகுருவாகி) என்றும்-சிஷ்யனுக்கு ஆசார்யனே ஸர்வமும் என்று சொல்லாநிற்க, இற்றைவரையாகவுண்டான ஆசார்யர்கள் தந்தாம் சிஷ்யர்களுக்கு, எம்பெருமானார்திருவடிகளே தஞ்சம் என்றிருங்கோள் என்றருளிச்செய்கைக்கு வேறு என்னென்றில்; - ஸ்வாசார்யப்ரீதிநிபந்தநமாகவும், (மாறனடி பணிந்துயர்ந்தவன்) என்றும் சொல்லுகையாலே; ஆழ்வார்களுக்கும் உடையவர்க்கும் நடுவிலுண்டான ஆசார்யர்கள் நம்மாழ்வாருக்கு கரணபூதராகையாலும், ஆழ்வாராலே ப்ரவர்த்திக்கப்பட்ட தர்சநத்தை, (గురుంప్రకాశయేత్) (குரும்ப்ரகாஶயேத்) என்று ப்ரகாசிப்பிக்கையாலே பெரியநம்பிமுதலான பூர்வாசார்யர்கள் இவர்க்கு ஆசார்யராய்ப் பேறுபெற்றார்கள்; ஆழ்வான்முதலான ஆசார்யர்கள் சிஷ்யர்களாய் ஸ்வரூபம் பெற்றார்கள்; ஆகையாலே அவிலாசார்யத்வ பூர்த்தியுள்ளது இவர்க்கே யாகையாலே அருளிச்செய்தார்களிறே.

ஆளவந்தாரும் இவ்வர்த்தத்தை அநுஷ்டித்துக்காட்டியருளினார். எங்ஙனே என்னில்;-மணக்கால்நம்பி உய்யக்கொண்டார் இவர்களுக்கு உகப்பைப்பின் சென்று, (పితామహంనాథమునిం విలోక్య ప్రసీద) என்றும் (నాథాయనాథమునయేత్రపరత్రచాపి) என்றும் - இங்கும் அங்கும் ஆசார்யவிஷயக்ர்தஜ்ஞதை யாவதாத்மபாவி என்று அருளிச்செய்தாரிறே. ஆகையால் ஸ்வருபோஜ்ஜீவநத்துக்கு ஆசார்யன்திருவடிகளே தஞ்சமென்றிருக்கையொழிய இவ்வாத்மாவுக்கு உஜ்ஜீவிக்க விரகில்லை.

இவ்வர்த்தத்தை அநுஷ்டித்தாரானென்னில்;-மதுரகவி ப்ரப்ர்திகளான ஸஜ்ஜநங்களிறே. உடையவர் புழுவன் வ்யாஸருக்கு மேற்கே யெழுந்தருளினபோது உபந்யஸித்தகட்டளைகளை ஆசார்யர்கள் எல்லாரும் கேட்டு மிகவும் ஆஶ்ர்யப்பட, என்பரமாசார்யரான ஆளவந்தார் கடாக்ஷத்தினாலே உபந்யஸித்தேன், இது ஆளவந்தார்திவ்யகோஷ்ட்டியிலேஒருநாளாகிலும் ஸேவிக்கப்பெற்றேனாகில் பரமபதத்துக்கும் இங்குத்தைக்கும்சுருளும்படியும் கட்டேனோ என்று அருளிச்செய்தார். உடையவர் அபயப்ரதாநம் அருளிச்செய்யாநிற்க, பிள்ளையுறங்காவில்லிதாஸர் கோஷ்டியில் நின்றும் எழுந்திருந்தார்; உடையவரும், இது வென் பிள்ளாய் என்று கேட்க (త్యక్త్వాపుత్రాంశ్చదారాంశ్చ రాఘవంశరణంగతః) என்றுஸகலத்தையும்விட்டு பெருமாள்திருவடிகளே தஞ்சம்என்று அத்யவஸித்த (భూస్పర్శవర్జిత)என்று நிலத்தில் கால்பாவாமல்,ககநஸ்த்தனாய்,

லம்பனும் வந்த விபீஷணாழ்வானை யசுப்பட (ஸுக்ரீவாதி) என்று சல்லும் தடியுங்கொட ராமகோஷ்டிக்கு பசுபத்ந்யாதிகளோடேகூ டினநான்ஆளாசுப்போகிறேனோ என்றார்; அதுக்குஉடையவரும், கேளாய்! பிள்ளாய் நான் பெற்றேனாகில் நீரும் பெறுகிறீர், பெரிய நம்பி பெற்றாராகில் அடியேன் பெறுகிறேன், ஆளவந்தார் பெற்றா ராகில் பெரியநம்பிபெறுகிறார், மற்றும் மேலுள்ளார் பெற்றாராகில் அவரர்கள் பெறுகிறார்கள்,எல்லார்க்கும் நாய்ச்சியார் புருஷகாரம் இல்லாதபோது நச்சவேண்டா. நித்ய ஸம்ஸாரிகளும் எம்பெருமா னும்ஒருசங்கலித்துவக்கிலேஒன்றாய்க்காணுமிருப்பது.நம்முடைய ஒழுங்குக்கூட்டம் நம்மை விடாதென்றிரும், கமுகு உண்ணில் வாழையும்உண்ணும்என்றிரும்,ஸ்ரீவிபீஷணாழ்வானோடுவந்த நால் வரையும்தனித்துத்(தகை)என்றதில்லையே,அருள்பாடிட்டபோது தனித்து அருள்பாடிட்டதில்லையே, ஆகையால்நான்பெற்றேனாகில் நீரும்பெறுகிறீர்,அஞ்சாதேஸுகமாயிரும்என்றுஅருளிச்செய்தார்.

[ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப் பார் தவம்] ஏத்தியிருந்தார் ஸ்ரீபரதாழ்வான், சாத்தியிருந்தார் ஸ்ரீசத்ருக்நாழ்வான்; ஏத்தியிருந்தார் நம்மாழ்வார், அவரைச் சாத்தியிருந்தார் ஸ்ரீமதுரகவிகள்; ஏத்தியிருந்தார் பெரியாழ்வார், அவரைச்சாத்தியிருந்தார் நாய்ச்சியார்;

ஸ்வாசார்ய பரமாசார்யர்களைப் பற்றுமளவே ஸ்வரூபமாகில் திவ்யதேசங்களைக் கைவிட்டானாகானோ என்னில், கைவிட்டா னாகான்; - (இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம்மாலிருஞ் சோலை யென்னும் பொருப்பிடம்மாயனுக்கென்பர்நல்லோர், அவை தன் னொடும் வந்திருப்பிடம் மாயனிராமாநுசன்மனத்து) என்கையா லே-எம்பெருமானார்திருவடிகளைத்தொழவே திவ்யதேசங்களையெ ல்லாம் திருவடித்தொழுதானாகக்கடவன், அமுதுசெய்தருளப் பண்ணினானாகக்கடவன், ப்ரதக்ஷிணம் பண்ணினானாகக்கடவன்.

(நின்ற வண்கீர்த்தியும்) என்கிறபாட்டிலும், (பேறொன் று மற்றில்லை) என்கிற பாட்டிலும் - கர்மமும் உபாயமன்று, ஜ்ஞாநமும் உபாயமன்று, பக்தியும் உபாயமன்று, ப்ரபத்திதானும் உபாயமன்று, எம்பெருமானாரைப்பற்றுகையேப்ரபத்தி,ராமாநுஜ என்கிற ராமாநுஜசதுராக்ஷரியேமந்த்ரம்,அவர்திருவடிகளில்பண் ணும் கைங்கர்யமேபரமபுருஷார்த்தமான என்ஸித்தாந்தம்என்று நடாதூரம்மாள் அருளிச்செய்தருளுவர்.

கூரத்தாழ்வான், (ராமானுஜாங்க்ரி சரணோஸ்மி) என்றும், (நாராயண, ராமானுஜ) என்கிற திருமந்த்ரங்களுக்குவாசி; - பந்த

மோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாகையும், மோக்ஷஹேது வாகையும் ஆகிறவாசிதோன்ற (చతురాచతుర-రి) (சதுராசதுரக்ஷரீ) என்றாரிறே. (கையில்கனி) என்கிற பாட்டிலே ஈச்வரனே கரதலாமலகமாகக் காட்டித்தந்தாலும் உன் விக்ரஹ ஸௌந்தர்யமே பரமப்ராப்யம் என்றும், (ராமாநுசனைத்தொழும் பெரியோர் எழுந்திரைத்தாடு மிடம் அடியேனுக் கிருப் பிடமே) என்றும் - ராமாநுஜனைத்தொழும் பெரியோர் நித்யவாஸம்பண்ணும் இடமே அடியேனுக்கு ப்ராப்ய பூமி என்றும்,(உன்தொண்டர்களுக்கே அன்புற்றிருக்கும்படி என்னையாக்கி அங்காட்படுத்து) என்றும், ராமாநுஜனே உன்னடியார் திறத்தில் ஊற்றம் மாறாத பக்தியை உண்டாக்கி அவர்களுக்கு என்னை ஆள்படுத்து என்றும், உடையவர் திருமுக மண்டலத்தைப் பார்த்து விண்ணப்பம் செய்ய, இதைக் கேட்டெழுந்தருளி யிருந்து தாமே இவ்வர்த்த நிஸ்சயத்துக்கு த்ருடதரப்ரமாணம் என்று நமக்கெல்லார்க்கும் புத்திபண்ணக் குறையில்லை. (அங்கயல்பாய்வயல் தென்னரங்கனணி யாகமன்னும், பங்கயமாமலர்ப்பாவையைப் போற்றுதும் பத்தியெல்லாம், தங்கிய தென்னத்தழைத்து நெஞ்சே நந்தலைமிசையே, பொங்கிய கீர்த்தி இராமாநுச னடிப்பூ மன்னவே) என்றும், எம்பெருமானையும் நாய்ச்சியாரையும் புருஷகாரமாகக் கொண்டு, எம்பெருமானார் திருவடிகளைப் பற்றவேணும் என்றுப்ரபந்தம் தலைக்கட்டினாரிறே. (చరితం రఘునాథస్య శతకోటిప్రవిస్తరమ్ | ఏకైకమక్షరం ప్రోక్తం మహాపాతకనాశనమ్) என்கிற சக்ரவர்த்தித் திருமகன் வைபவம் போலே ஸ்ரீராமாநுஜார்யர்வைபவமும் அவாங்மநஸ கோசரமிறே. ஸாகரத்தைக் கைநீச்சினால்நீஞ்சினாலும் உத்தியை சிறுங் கிச்சாலும் உடையவர் வைபவம்அடையச் சொல்லப்போகாதிறே. * யதாமதி யதாஸ்ருதமாகச் சொன்னேனத்தனை,பெஹுஸ்ருதராய் புத்திபாஹுள்யமுண்டானவர்கள்விஸ்த மாகக்கண்டுகொள்வது.இப்படி எல்லார்க்கும் ஸ்வரூ போபாய புருஷார்த்தங்களை நியமித்துக் கொண்டு எம்பெருமானார், ஜகதாசார்யராய், யதிஸார்வ பௌமராய் நம்பெருமாள்கோயிலிலே நூற்று இருபத்தைந்து திருநக்ஷத்ரங்கள் எழுந்தருளியிருந்தார்.



உடையவரால் ஏற்படுத்தப்பட்ட எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதிபதிகளின் திருநாமங்கள்.

இப்படி எழுந்தருளி யிருக்கிற எம்பெருமானார்திருவடிகளிலே ஆஸ்ரயித்த முதலிகளில் எழுபத்து நாலாரியர்கள் ஆரென்னில் ; - † ஆளவந்தார் குமாரர் சொட்டை நம்பி, அவர்குமாரர்

† இதுக்கு சரியானபாடத்தை கோசாந்தரங்களில் காண்க.

என்னுச்சான், அவர்குமாரர் பிள்ளையப்பன், பெரியநம்பிகுமாரர் ஸ்ரீபுண்டரீகர், திருமாலையாண்டான் குமாரர் சுந்தரத்தோளுடையார், பெரிய திருமலைநம்பிகுமாரர் ராமாநுஜனும், திருமலைநம்பியும், கூரத்தாழ்வான் குமாரர் பட்டரும், சீராமப் பிள்ளையும், முதலியாண்டான், குமாரர்கந்தாடை யாண்டான், நடுவிலாழ்வான், கோமடத்தாழ்வான், திருக்கோவலூராழ்வான், திருமோகூராழ் வான், பிள்ளைப் பிள்ளையாழ்வான், நடாதூராழ்வான், எங்களாழ்வான், அநந்தாழ்வான், மிளகாழ்வான், நெய்யுண்டாழ்வான், சேட்லூர் சிறியாழ்வான், வேதாந்தியாழ்வான், கோயிலாழ்வான், உக்கலாழ்வான், அரணபுரத்தாழ்வான், எம்பார், கிடாம்பியாச்சான், கணியனூர் சிறியாச்சான், கொங்கிலாச்சான், ஈச்சம்பாடியாச்சான், திருமலைநல்லான், சட்டம்பள்ளிஜீயர், ஈச்சம்பாடிஜீயர், திருவெள்ளறைஜீயர், ஆட்கொண்டவில்லிஜீயர், திருநகரிப்பிள்ளை, காராஞ்சிஸோமயாஜீயார், அலங்காரவேங்கடவர், நம்பிகருந்தேவர், செருப்பள்ளிதேவராஜபட்டர், பிள்ளையுறைந்தையுடையார், திருக்குருகைப்பிரான்பிள்ளான், பெரியகோயில்வள்ளலார், திருக்கண்ணபுரத்தெச்சான், ஆசூரிப்பெருமாள், முனிப்பெருமாள், அம்மங்கிப்பெருமாள், மாருதிப்பெரியாண்டான், மாறொன்றில்லா மாருதிச்சிறியாண்டான், சோமாசியாண்டார், சியராண்டான், ஈச்வராண்டான், ஈயுண்ணிப்பிள்ளையாண்டான், பெரியாண்டான், சிறியாண்டான், குஞ்சிப்பூர் சிறியாண்டான், அம்மங்கியாண்டான், ஆளவந்தாராண்டான், அருளாளப்பெருமாளெம்பெருமானுர், தொண்டனூர்நம்பி, மருதூர்நம்பி, மழூலூர்நம்பி, திருக்குறுங்குடிநம்பி, குரவநம்பி, முடும்பைநம்பி, வடுகநம்பி, வங்கிப்புரத்துநம்பி, ஸ்ரீபராங்குசநம்பி, அம்மங்கியம்மாள், பருத்திக்கொல்லையம்மாள், உக்கலம்மாள், சொட்டையம்மாள், முடும்பையம்மாள், குமாண்டூர்பிள்ளை, குமாண்டூரிளையவல்லி, கிடாம்பிப்பெருமாள், ஆற்காட்டுப்பிள்ளான்.

(సంసేవితస్సంయమిసప్తశత్యాపీఠైశ్చతుస్సప్తతిభిస్సమేతైః। అన్యైశ్చ నస్సైరపి పుణ్యభక్తైస్తైస్సర్వజ్ఞాయతి సార్వభౌమః)

எம்பெருமானுர்திருவடிகளேசரணம்.

பிள்ளைலோகஞ்சீயர் திருவடிகளேசரணம்.



ராமாநுஜார்யதிவ்யசரிதை

ஸம்பூர்ணம்.

—:0:—

